# கீதையின் மறுபக்கத்திற்கு மறுப்பு!

கேப்டன் S.P.குட்டி, B.E.,



## ஆசிரியரும் கீதையும்



ஆசிரியர்
கேப்டன் S.P. குட்டி., B.E.,

கன்னியாகுமரி விவேகானந்தர் கேந்திரத்தில் கீதையைப் படிக்கும் பயிற்சியைப் பெற்ற பிறகு பல ஆண்டுகளாக "கீதா க்ளப்" என்ற பெயரில் ஒரு அமைப்பை உருவாக்கி பல பிரபலமான "கீதை ஆசிரியர்களை வைத்து வகுப்புகளை நடத்தினார்.

அரசு வேலை நிமித்தமாக மாறுதலாகி பல்வேறு ஊர்களுக்கு சென்ற போதும், சென்ற ஊர்களிலெல்லாம் கீதை ஆசிரியர்களை கண்டு பிடித்து வகுப்புகளை ஏற்பாடு செய்து நடத்தினார்.

கோபிசெட்டிபாளையம், சென்னை, செய்யாறு ஆகிய ஊர்களில் நடந்த கீதை வகுப்புகளுக்கு தகுதியான ஆசிரியர்கள் கிடைத்தது போல செயற்பொறியாளர் பொறுப்பேற்று பொள்ளாச்சி பக்கம் உள்ள நவமலை நீர் மின் உற்பத்தி நிலையத்தில் வேலை செய்த போது தகுதியான ஆசிரியர் கிடைக்கவில்லை.

இதுவும் நன்மைக்கே என்று கருதி எல்லா ஆசிரியர்களின் கீதை பாஷ்யங்களையும் தேடிக் கண்டுபிடித்து வாங்கி அவற்றை படிக்க ஆரம்பித்தார்.

இந்தியிலும், ஆங்கிலத்திலும் இவருக்கிருந்த பரிச்சயம் கீதை ஸ்லோகங்களை நேரடியாக படிக்கவும், பொருள் தெரிந்து கொள்ளவும் வாய்ப்பாக இருந்ததால், கீதையை மிக ஆழமாக படித்து ஆராய்ச்சி செய்யும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டார்.

( தொடர்ச்சி பின்புறம் அட்டையில்)

# சீதையின்

மறுபக்கத்திற்கு

# மறுப்பு !

கேப்டன் S.P. குட்டி, B.E.,






வெளியீடு

**ஆசிரியர்**

சரைவேதி இல்லம், 357, வெங்கிடசாமி தெரு
பொன்னப்ப நாடார் நகர், நாகர்கோவில் - 629 004
கன்னியாகுமரி மாவட்டம்.
☎: 04652 - 260239

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **கீதையின் மறுபக்கத்திற்கு மறுப்பு!** |
| ஆசிரியர் | : | **கேப்டன் S.P. குட்டி,** B.E., |
| உரிமை | : | எல்லா உரிமையும் ஆசிரியருக்கே |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| பிரதிகள் | : | 2000 (இரண்டாயிரம்) |
| வருடம் | : | 2005 |
| புத்தக அளவு | : | கிரவுண் 1/8 |
| டைப் | : | 11 பாயின்ட் |
| பக்கங்கள் | : | XII + 138 |
| விலை | : | ரூ.40/- |
| கணிணி வடிவம் | : | பாரதி பிரஸ்<br>நாகர்கோவில் - 629 002 |
| பதிப்பகம் | : | பாலாஜி நோட் புக்ஸ்<br>பராசக்தி காலனி, சிவகாசி - 626 123. |
| வெளியீடு | : | ஆசிரியர்<br>சரைவேதி இல்லம், 357, வெங்கிடசாமி தெரு<br>பொன்னப்ப நாடார் நகர்<br>நாகர்கோவில் 629 004<br>கன்னியாகுமரி மாவட்டம்.<br>☎ : 04652 - 260239 |

## பதிப்புரை

இந்த நூலை ஆரம்பம் முதலே எழுதி பதிப்பிப்பதற்கு தூண்டு கோலாக இருந்தவர்கள் எனது கீதை வகுப்பு மாணவர்கள்.

இவர்களுடன் பேராசிரியர் அ. **கோவிந்தபிள்ளை,** ஓய்வுபெற்ற உயர் கல்வி அதிகாரி **திரு. E. இரத்தினசாமி** ஆகியோர் எனக்கு பேராதரவு தந்தார்கள்.

இந்நூலுக்கு அன்புடன் அணிந்துரை கொடுத்து ஊக்கப்படுத்திய உயர்திரு. சுவாமி **கமலாத்மானந்தர்,** தலைவர், ஸ்ரீராமகிருஷ்ணமடம், மதுரை, அவர்களுக்கும்,

எனது கையெழுத்தை மிக அழகாக மறுபடியும் எழுதிக் கொடுத்த திருமதி. **நளினி இராமனாதன்** அவர்களுக்கும், அதை அழகுற கம்ப்யூட்டரில் ஆர்வத்துடன் டைப் செய்து தந்த எனது கீதை வகுப்பு மாணவி செல்வி. **வட்சுமிதேவி இராமனாதன்** அவர்களுக்கும்,

இந்த நூலை அழகுற வடிவமைத்து கொடுத்த நாகர்கோவில், **பாரதி அச்சகத்தாருக்கும்,** புத்தகமாக அச்சிட்டுக் கொடுத்த சிவகாசி, **பாலாஜி நோட்புக்ஸ் ஸ்தாபனத்திற்கும்,** இந்நூலைப் படித்து ஆதரவு தெரிவிக்கப்போகும் அனைத்து வாசகர்களுக்கும் எனது பணிவான நன்றியும், வணக்கங்களும்.

அன்புடன்
**ஆக்கியோன் &**
**பதிப்பித்தோன்**

கேப்டன் **S.P. குட்டி,** B.E.,
சரைவேதி இல்லம்,
357 வெங்கடசாமி தெரு,
பொன்னப்பநாடார் நகர்,
நாகர்கோவில் - 629 004.
குமரிமாவட்டம், தமிழ்நாடு.
☎ : 04652- 260239.

# அணிந்துரை

சுவாமி கமலாத்மானந்தர்
தலைவர், ஸ்ரீராமகிருஷ்ணமடம்
ரிசர்வ்லைன், புதுநத்தம் ரோடு, மதுரை - 625 014
☎: 0452 - 2680224, 268181

இந்துமதம் தோற்றுவித்த அருள் நூல்களிலேயே, தலையாய முக்கியத்துவம் பகவத்கீதைக்குத் தான் உண்டு. ஆதலால், 'இந்து மதத்தின் இதயம்' என்று அதைத் துணிந்து உறுதியாகக் கூறலாம்.

அத்தகைய கீதையை மகாபாரதம் தனது மணிமகுடமாகக் கொண்டிருக்கிறது.

இந்துமதம் உலகிலேயே தொன்மை வாய்ந்த மதம். வேதகாலம் முதல் இன்று வரையில் இந்துமதத்தில் தோன்றிய அருள் நூல்கள் எண்ணற்றவை. இவற்றில் பிரஸ்தானத்திரயம் எனப்படும் 1. உபநிஷதங்கள், 2. பகவத்கீதை, 3. பிரம்மசூத்திரம் ஆகியவை தலையாய முக்கியத்துவம் பெறுகின்றன.

இந்த மூன்றிலும் கூட நடுநாயகமாக இருக்கும் கீதை, முதன்மையான இடத்தைப் பெறுகிறது.

பகவத்கீதை ஒரு மோக்ஷக்ரந்தம் (அதாவது, ஒரு முக்தி நூல்). இதன் நடை அழகானது, மிகவும் எளிமையானது.

குருவுக்கெல்லாம் குருவான ஸ்ரீகிருஷ்ணன், சீடர்களுக்கெல்லாம் சீடனான அர்ஜுனனுக்கு கீதையை உபதேசித்தார்.

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வதைப் புரிந்து கொள்வதற்குரிய

124-3

பக்குவம் உடைய சீடனாக அர்ஜுனன் இருந்தான்.

தத்துவச் சிந்தனைகளில் ஆர்வம் கொண்ட எல்லோருக்கும், எப்போதும், பகவத்கீதை நல்ல ஓர் ஆன்மீக விருந்தாகத் திகழ்ந்து வருகிறது.

சுவாமி விவேகானந்தருக்கு மிகவும் பிடித்த, "வீரனாக எழுந்துநில்!" என்ற கருத்துடன் பகவத்கீதை துவங்குகிறது. வீரனாக விளங்குவதுதான் ஒருவரது ஆன்மீக வாழ்க்கையின் ஆரம்பம்.

சுவாமி விவேகானந்தர் அமெரிக்கா செல்வதற்கு முன்பு, சுமார் ஆறு ஆண்டுகள் இந்தியா முழுவதும் கால்நடையாகப் பிரயாணம் செய்தார். அந்தத் தம்முடைய பரிவ்ராஜக வாழ்க்கையில், எதையுமே வைத்துக்கொள்ளாத சுவாமி விவேகானந்தர், ஒரு பகவத்கீதைப் பிரதியை மட்டும் தம்மிடம் வைத்திருந்தார்.

"ஒரு சந்நியாசி தன்னிடம் எதையுமே வைத்துக் கொள்ளாமல் இருந்தாலும் - ஒரு சந்நியாசியிடம் எதுவுமே இல்லாமல் இருந்தாலும் - பகவத்கீதை இருக்க வேண்டும்" என்று, பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியிருக்கிறார்.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் தனது ஆரம்ப காலத்திலிருந்து - கீதையை அனைத்து மாநில மொழிகளிலும் நூல் வடிவில் வெளியிடுவதன் மூலமும், சொற்பொழிவுகளின் மூலமும் - பகவத்கீதையைப் பிரச்சாரம் செய்வதைத் தனது ஒரு முக்கியப் பணியாகக் கொண்டிருக்கிறது.

நாம் தினந்தோறும் செய்தித்தாள்களைப் படிக்கிறோம்; மறுநாளே அவற்றை மறந்துவிடுகிறோம்; தூரப் போட்டு விடுகிறோம். இதைப் போன்று ஒரு தொடர்புதான் நமக்கும் பல நூல்களுக்கும் கூட இருக்கிறது. காரணம், திரும்பத்

திரும்பப் படிப்பதற்குரிய, திரும்பத் திரும்பச் சிந்திப்பதற்குரிய, அரிய கருத்துக்கள் அவற்றில் இல்லை என்பதுதான்.

ஆனால் பகவத்கீதை அப்படிப்பட்ட ஒரு நூல் அல்ல. "பகவத்கீதையை நான் படித்து முடித்துவிட்டேன்" என்று பெரியோர்கள் எவரும் சொல்லவில்லை; எவரும் சொல்ல மாட்டார்கள்; எவரும் சொல்லவும் கூடாது. ஏனென்றால், கீதை படித்து முடிக்க வேண்டிய ஒரு நூல் அல்ல; மாறாக, வாழ்நாள் முழுவதும் ஒருவர் படிக்கவும் சிந்திக்கவும் வேண்டிய ஒரு சாஸ்திரம் தான் பகவத்கீதை.

நல்ல உணவை உட்கொண்டால் நமது உடல் நல்ல ஆரோக்கிய நிலையில் இருக்கிறது; பொருந்தாத உணவை உட்கொண்டால் உடல்நலம் கெடுகிறது.

அதுபோல் வியாபார ரீதியில் எழுதப்படும் மனிதனின் மிருக இயல்பைத் தூண்டும் தீய நூல்கள், தீய பத்திரிக்கைகள், பொருந்தாத உணவு போன்றவை. அவற்றைப் படிப்பதால் மனிதனின் மனநிலை பாதிக்கப்படும்; அறியாமை என்ற இருள் மேலும் மேலும் சூழ்ந்து போகும்; உயர்ந்த சிந்தனைகளைச் சிந்திக்க இயலாத நிலை ஏற்படும்; உயர்ந்த இலட்சியத்திலிருந்து நழுவும் நிலை ஏற்படும்; உடல்நலம் பாதிக்கப்படும்.

இதற்கு மாறாக, நல்ல உணவு மனிதனின் உடல் நலத்தை உறுதிப்படுத்துவது போல், மனிதன் தன்னிடமுள்ள தெய்வீக இயல்புகளை வெளிப்படுத்த உதவும் பெருநூல் கீதை.

கீதையைக் கற்பது நமது மனதை வளப்படுத்தும்; முடிவில் ஆத்மஞானத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும்.

கீதையிலிருந்து தினமும் ஓர் அத்தியாயத்தைப்

24-3

பாராயணம் செய்வது, தினமும் ஓர் சுலோகத்தை மனப்பாடம் செய்து, அதன் பொருளை ஆழ்ந்து சிந்திப்பது ஆகியவை ஆரோக்கியம் வாய்ந்த மிகவும் நல்ல பழக்கங்களாகும். இதை ஆத்மசாதகர்கள் தங்கள் அன்றாட வாழ்க்கையில், ஓர் அங்கமாகவே கடைபிடிக்க வேண்டும்.

இவ்விதம் செய்வது நமது தனிமனித வாழ்க்கைக்கு ஆன்மிக வளம் சேர்ப்பதோடு, சமுதாய நலனையும் மேன்மை பெறச் செய்யும்.

கேப்டன் **S.P.**குட்டி ஒரு தேசியவாதி. தேசிய சிந்தனை கொண்ட அவர் இந்தியாவின் மீதும், இந்து மதத்தின் மீதும் பக்திகொண்டவர். இந்து மதத்திற்கு எதிராகச் செய்யப்படும் நியாயமற்றப் பிரச்சாரங்களை அனுமதிக்கக் கூடாது என்ற எண்ணம் கொண்டவர்.

அவர் இப்போது இந்த கீதையின் மறுபக்கத்திற்கு மறுப்பு என்ற நூலை 'சமூக சீர்திருத்தம்' பேசுபவர்களை மனதில் கொண்டு எழுதியிருக்கிறார். அதனால் இந்த நூல் ஆன்மீகத்துடன், சமூக சீர்திருத்தப் பார்வையையும் கொண்டிருக்கிறது.

இந்த நூலை எழுதியிருக்கும் கேப்டன் **S.P.**குட்டிக்கு மதுரையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர்களின் பெயரால் என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இறைவன் தொண்டில்

ஸ்வாமி கமலாத்மானந்த

1.1.2005

கல்பதரு திருநாள்

(சுவாமி கமலாத்மானந்தர்)

# ஆசிரியர் உரை

*இவ்வாண்டு கிருஷ்ண ஜெயந்தியை முன்னிட்டு (6.9.2004) மாண்புமிகு தமிழக முதல்வர் செல்வி. ஜெயலலிதா அவர்கள் ஒரு வாழ்த்துச் செய்தி வெளியிட்டிருந்தார்.*

*அதில் கிருஷ்ணனின் சிறப்பு கடவுளின் அவதாரம் என்பதில் மட்டும் அடங்கி விடவில்லை. உலகம் போற்றும் ஒப்பற்ற ஞான நூலாம் பகவத் கீதையை அருளிச் செய்ததிலும் கிருஷ்ணனின் பெருமை சுடர் விடுகிறது.*

*கிருஷ்ணனின் போதனைகள் எக்காலத்திற்கும் எத்தேசத்திற்கும் பொதுவானது. கீதையைப் படிப்பது சிறந்தது.*

*கீதைவழி நடப்பதோ மிகச் சிறந்தது.*
*கீதை வழி நடப்போம்.*

*வெல்லட்டும் அறம். வீழட்டும் பாவம் என்று வாழ்த்து தெரிவித்திருந்தார்.*

*பாரத ஜனாதிபதி மாட்சிமை தங்கிய திரு. அப்துல் கலாம் அவர்கள் தனது வாழ்த்துச் செய்தியில், பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளதைப் போன்று அன்பும், சகோதரத்துவமும் அனைவரிடமும் காணப்பட வேண்டும் என்பதை கிருஷ்ண பகவானின் அறிவுரையாக நாம் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கூறியிருந்தார்.*

*பிரதமர் மான்புமிகு திரு. மன்மோகன்சிங் அவர்கள் இன்றைய நடைமுறை உலகிற்கு கிருஷ்ணபகவானின் உபதேசங்கள் மிகவும் பொருத்தமாக உள்ளன. மக்களிடையே அன்பும் பரிவு உணர்வும் ஏற்படும் போது, நம்பகத்தன்மை உருவாகிறது. என்ற கிருஷ்ண பகவானின் உபதேசங்கள் பொருத்தமாக உள்ளன என்று தனது வாழ்த்துச் செய்தியில் கூறியிருந்தார்.*

இந்த வாழ்த்துச் செய்திக்கு திரு. மு. கருணாநிதி (தி.மு.க. தலைவர்) உடன் தானே கண்டனம் தெரிவித்து, "வர்ணாசிரம போதனை நூலான பகவத்கீதையைத் தான் படிக்கச் சொல்லுகிறார் ஜெயலலிதா" என்று கிண்டலடித்தார்.

திரு. கருணாநிதியின் கண்டனத்துக்கு உடனடியாக எதிர்ப்பு தெரிவித்த திரு. H. ராஜா, திரு. R.B.V.S. மணியன் போன்றோர்கள் கருணாநிதி கீதையைப் பற்றிச் சொன்ன வர்ணாசிரம தர்ம குற்றச்சாட்டுக்கு எந்த பதில் விளக்கமும் சொல்லவில்லை.

கீதாச்சாரியன் பத்திரிகையின் ஆசிரியர் திரு. வெங்கட கிருஷ்ணன் என்பவர், "அந்தணன் என்பது ஒரு குறிப்பிட்ட ஜாதியை குறிக்கிறது என்று எல்லோருக்கும் தெரியும்" என்று அவரை அறியாமலேயே திரு. கருணாநிதியின் வர்ணாசிரம தர்ம குற்றச்சாட்டுக்கு உடந்தையாகி இருக்கிறார்.

இந்து முன்னனியின் தலைவர் திரு. இராம கோபாலன் அவர்கள் கருணாநிதிக்கு எதிர்ப்பு தெரிவிக்கிறேன் என்று அவரது வீடு தேடிப் போய் பகவத் கீதையைக் கொடுத்தார்.

அதற்குப் பதிலாக திரு. கருணாநிதி அவர்கள், திரு. கி. வீரமணி (தி.க. தலைவர்) 1998 ல் வெளியிட்டிருந்த கீதையின் மறுபக்கம் என்ற நூலை திரு. இராம கோபாலன் கையில் கொடுத்தனுப்பி விட்டார்.

கீதை பற்றி கருணாநிதி கொண்டுள்ள தவறான கருத்துக்களை சரிதான் என்று நிரூபிக்கின்ற முயற்சியில் தாக்கி எழுதப்பட்ட நூல்தான் திரு. கி. வீரமணியின் கீதையின் மறுபக்கம்.

இந்த நூலில் சொல்லப்பட்டிருக்கின்ற கீதையைப் பற்றிய குற்றச்சாட்டுகளுக்கு திரு. இராம கோபாலன்

அவர்களோ அல்லது அவரைச் சார்ந்தவர்களோ எந்த பதிலும் கொடுக்க முன்வரவில்லை.

திரு. இராம கோபாலன் சார்ந்திருக்கின்ற ஆர்.எஸ்.எஸ். அமைப்பிலும், இந்து முன்னணி அமைப்பிலும், அவர்களது அரசியல் கட்சியான பாரதீய ஜனதா கட்சியிலும் எல்லா பயிற்சிகளையும் பெற்று மிகத் தீவிரமாக இருபத்து மூன்று ஆண்டு காலம் செயல்பட்டவன் நான்.

இந்த காலகட்டத்தில் D. இராமன் என்ற புனைப் பெயரில் R.S.S. மற்றும் இந்து முன்னணி சிந்தனைகளைப் பரப்புகின்ற வகையில் இருபத்திரெண்டு புத்தகங்களை எழுதி வெளியிட்டு இந்து இளைஞர்களிடம் சிறப்பான ஆதரவைப் பெற்றவன் நான்.

இந்தப் புத்தகங்களாலெல்லாம் செயல் ரீதியாக இளைஞர்களை இந்து ஆதரவாளர்களாக உருவாக்குவதே என்னுடை உத்தியாக இருந்தது. இந்த உத்திக்கு திரு. இராம கோபாலன் போன்ற ஆர்.எஸ்.எஸ் தலைவர்கள் பேராதரவு தந்தனர்.

ஆனால் என்னுடைய அடுத்த கட்ட நடவடிக்கையாக இந்து இயக்கத் தொண்டர்களிடம் சிந்தனையையும், அறிவையும் வளர்ப்பதற்காக அவர்களுக்கு பகவத்கீதையை சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று நான் வலியுறுத்தினேன்.

ஆனால் அன்று ஆர்.எஸ்.எஸ்ஸின் ஸர்வசங்கசாலக் என்ற பொறுப்பிலிருந்த திரு. இராஜேந்திர சிங் அவர்களும், தமிழகத்தில் இந்து முன்னனியின் தலைவராக இருந்த திரு. இராம கோபாலன் அவர்களும் கீதையை சொல்லிக் கொடுப்பது எங்களது வேலைத் திட்டத்தில் இல்லை என்று சொல்லி விட்டனர்.

ஆக ஆர்.எஸ்.எஸ்ஸும் இந்து முன்னணியும் என் போன்றவர்களுக்கு அறிவைக் கொடுக்க முன் வரவில்லை உணர்ச்சியைத் தூண்டிவிட மட்டுமே பயிற்சி கொடுக்கிறார்கள் என்று புரிந்துகொண்டு முழுமூச்சாக பகவத்கீதையைப் படிக்கவும் வகுப்புகள் நடத்தவும் துவங்கினேன்.

திரு. கருணாநிதி அவர்களுக்கு எதிராக கோஷம் போடுவதையும், கொடும்பாவி கொளுத்துவதையும் விட அவர் முன் வைக்கின்ற குற்றச்சாட்டுகளுக்கு அறிவு பூர்வமான பதிலை ஆதாரத்துடன் கொடுப்பது நியாயமாக இருக்குமென்று நான் கருதினேன்.

இந்த முயற்சி தான் கீதையின் மறுபக்கத்திற்கு மறுப்பு என்ற என்னுடைய நூல்.

தீண்டாமை போன்ற மிகக்கொடிய சமூக தீமைக்கு பகவத்கீதை, நிச்சயம் காரணமில்லை. ஆனால் ஜாதியின் பெயரால் தீண்டாமையை உருவாக்கி, சமுதாயத்தின் உச்சத்திலிருந்து, பாமர இந்துக்களைக் கொடுமைப்படுத்திய சில சமூக விரோதிகள் பகவத்கீதைக்கு தவறான பொருள் சொல்லி தங்களுக்கு சாதகமாக பயன்படுத்திக் கொண்டனர்.

இந்த கருத்தையே என்னுடைய நூலில் புரிய வைக்க முயன்றிருக்கிறேன்.

என்னுடைய இந்த முயற்சியில் நான் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிறேன் என்பதை இதைப் படிக்கும் வாசகர்களாகிய நீங்கள் தான் முடிவு செய்ய வேண்டும்.

அன்புடன்
தாயகப் பணியில்
கேப்டன். **S.P. குட்டி**

நாகர்கோவில்.

## இறைவனுக்கு உயிர்களில் பாகுபாடு இல்லை

ஸமம் ஸர்வே ஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம்!
கீதை 13-27

(இறைவன் எல்லா உயிர்களிலும் சமமாக இருக்கிறான்).

ஸுஹ்ருதம் ஸர்வ பூதானாம் ஜ்ஞாத்வாமாம் சாந்திம் ரிச்சதி!!
கீதை 5-29

(எல்லா உயிர்களுக்கும் இறைவன் நண்பன் என்று அறிகிறவன் அமைதியை அடைகிறான்).

# கீதையின் மறுபக்கத்திற்கு மறுப்பு !

## 1. கீதைக்குத் துரோகம்

திரு. கி. வீரமணி அவர்கள் வெளியிட்டுள்ள "கீதையின் மறுபக்கம்" என்ற நூலைப் படித்த போது எனக்கு தோன்றிய எண்ணம் என்ன தெரியுமா? இந்துக்கள் என்று பெயர் சொல்லிக் கொண்டு கீதையைப் படிக்காமல் வாழ்ந்து கொண்டிருக்கும் கோடிக்கணக்கான இந்துக்களை விடவும் வீரமணி ஒருபடி மேல் என்பது தான்.

இவர் கீதையை மட்டுமல்ல, இந்து மத புராணங்கள், இதிகாசங்கள் அனைத்தையுமே சரியாகப் போட்டு புரட்டி எடுத்திருக்கிறார்.

ஒரேயொரு நெருடல் என்னவென்றால், ஒரு பாச உணர்வில்லாமல் எதிரியாக நின்றே இவர் ஆய்வு செய்திருப்பதால் அவர் கண்ணுக்கு எல்லாமே தவறாகப் படுகின்றன. உண்மை தெரியவில்லை.

இரணியனைப் பற்றிச் சொல்லும் போது பிரகலாதனை விட நாராயணனை அதிகமாக நினைத்துக் கொண்டிருந்தது. இரணியன் தான் என்று சொல்வார்கள். எதிரியாக இருந்தாலும் நாராயணனை அதிகமாக நினைத்தவன் இரணியன் தான்.

அதே போல தான் எனக்கு வீரமணியும் தோன்றுகிறார்.

எதிரி நிலையில் நின்றாலும், கீதையை இவர் நன்றாகவே ஊடுருவியிருக்கிறார்.

பக்தி என்பது ஒருதலை பட்சமான நம்பிக்கை தான். ஒருவர் ஒன்றை நம்புகின்ற போது, உண்மை மாறுபட்டிருந்தாலும் அவர் அந்த உண்மையை ஏற்றுக்

கொள்வதில்லை. ஆகவே பக்தி என்பது ஒரு வகை அறியாமை என்று தான் சொல்ல வேண்டும்.

மனிதனுக்குத் தெரியாத விஷயங்களும், இன்னும் கண்டுபிடிக்கப்படாத உண்மைகளும் உலகில் ஏராளம் இருக்கும்போது, நமது சக்திக்கும் அறிவுக்கும் மீறிய காரியங்கள் நடக்குமானால் அவற்றை ஒருதலைபட்சமாக நம்பித்தானே ஆக வேண்டுமென்று கேட்கலாம்.

நம்புவோம், நன்றாக நம்புவோம், ஆனாலும் அது நமக்கு புரியாத விஷயம் என்பது உண்மை தானே. புரியாத விஷயத்தை பக்தி என்ற பெயரில் நம்பி வருகின்ற போது, அதைப் புரிந்து கொள்வதற்கு வேண்டிய ஆராய்ச்சியை நாம் கைவிட்டு விடுகிறோம் அல்லவா?

ஒரு உதாரணம் பார்ப்போம். வைசூரி எனப்படும் பெரியம்மை நோய் காலம் காலமாக நமது நாட்டில் லட்சக்கணக்கான உயிர்களை பலி வாங்கியிருக்கிறது.

ஊருக்குள் வைசூரி வந்தவுடன், நாம் செய்வதெல்லாம் மாரியம்மனுக்குப் பொங்காலை விட்டதுதான்.

வைசூரியை அம்மன் தான் விதைக்கிறாள், ஆகவே அவளுக்குப் பொங்கல் வைத்து திருப்திப் படுத்தினால் அம்மை நோயிலிருந்து தப்பி விடலாம் என்ற தவறான கருத்தை வைத்துக் கொண்டு, பக்தியென்ற பெயரால் ஆண்டு தோறும் பல்லாயிரக்கணக்கான உயிர்களை அந்த கொள்ளை நோய்க்குப் பலியிட்டோம்.

இப்படிப்பட்ட அறியாமைக்கு இலக்காகாத ஒருவர் கண்டுபிடித்த அம்மை நோய்த் தடுப்பு ஊசி இன்று உலகெங்கிலும் இந்த கொடிய பெரியம்மை நோயை விரட்டி அடித்திருக்கிறது.

உலகாயத என்று சொல்லப்படும் பொருளியல் வாழ்வில் ஆசை உள்ளவர்கள் பக்தர்கள் என்ற

வரையறைக்குள் மாட்டிக் கொண்டால் உண்மையைக் கண்டு கொள்ளும் கண்களை அவர்கள் இழந்து விடுகிறார்கள் என்றே அர்த்தம்.

எல்லையில்லாத நம்பமுடியாத கற்பனைகளை நமது புராணங்களும், இதிகாசங்களும் சொல்லின. அவற்றை நம்புவதற்கும் நமது மக்கள் பக்தியின் பெயரால் முன் வந்ததால் தான் நாத்திகவாதிகளின் தாக்குதலுக்கு இந்து மதம் உள்ளாகியிருக்கிறது.

மற்ற மதங்களிலும் இப்படிப்பட்ட அறியாமை இருக்கிறது என்பது உண்மையானாலும், அது இந்து மதத்தில் இருக்கும் நம்ப முடியாத கற்பனைகளை நியாயப்படுத்தி விடாது. ஆனால், இந்து மதத்தின் அடிப்படை சித்தாந்தங்களைச் சொல்லும் பகவத்கீதை நிச்சயம் அறியாமைக்கு அப்பாற்பட்டது என்பதை ஆணித்தரமாகச் சொல்ல முடியும்.

காய்த்த மரத்தில் கல்லெறி விழத்தான் செய்யும்.

நாத்திகவாதிகளின் தாக்குதல் இருக்கத்தான் செய்யும். அவர்கள் சொல்லும் குற்றச்சாட்டுகளில் உண்மை இருக்குமானால் அதைப் பெருந்தன்மையுடன் ஏற்றுக்கொண்டு நம்மை நாமே திருத்திக்கொள்வதுதான் நியாயம்.

கீதையின் மறுபக்கம் என்று தன் நூலுக்கு பெயரிட்டிருந்தாலும், திரு. வீரமணி அவர்கள் ஒட்டு மொத்த இந்து மதத்தையே குற்றம் சாட்டியிருக்கிறார்.

**இந்து ஆத்திகர்கள் ஏன் பதில் சொல்லவில்லை?**

இவர் இந்த புத்தகத்தை 1998ல் வெளியிட்டு இன்றுவரை சில புதிய பதிப்புகளும் செய்துள்ளார். ஆனால் இவ்வளவு பெரிய குற்றச்சாட்டை சரியான ஆதாரத்துடன் மறுப்பதற்கு சமயாச்சாரியர்களில் ஒருவரும் இன்று வரை ஏன் முன்வரவில்லை?

ஒருவேளை இம்மாதிரியான நாத்திகர்களுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருப்பது நமது வேலையில்லையென்று அவர்கள் நினைக்கிறார்களோ என்னவோ?

அல்லது பகவத்கீதையின் மீது பற்றும் பாசமும் உள்ளவர்கள் யாரும் இல்லையோ?

இப்படியும் சொல்வதற்கில்லை. ஏனென்றால் கொடும்பாவி கொளுத்துவதற்கும், கோஷம் போடுவதற்கும் சிலர் முன்வந்ததை நாம் பார்த்தோமே!

எனக்கு என்ன தோன்றுகிறதென்றால், வர்ணாசிரம் பற்றி திரு. வீரமணி முன்வைக்கும் குற்றச்சாட்டுகள் அனைத்தும் உண்மை தான் என்பதை இந்து மதாச்சாரியர்கள் ஏற்றுக்கொண்டது தான் இவர்கள் யாரும் பதில் சொல்லாததற்கு காரணம் என்று நினைக்கிறேன். இதற்கு ஏராளமான ஆதாரங்களை நாம் காட்ட முடியும்.

இல்லாத ஒரு ஜாதி அமைப்பை பகவத்கீதையின் பெயரால் உருவாக்கி பலஆயிரம் ஆண்டுகளாக இந்து மதத்தின் பெரும் பகுதி மக்களைத் தீண்டத் தகாதவர்கள் என்று கொடுமைப்படுத்தியது உண்மை தானே?

இப்படிப்பட்ட ஜாதிக் கொடுமைக்கு உள்ளானவர்கள், தங்களது துன்பத்திற்கெல்லாம் காரணமாக அமைந்தது இந்த பகவத்கீதை தான் என்று ஜாதி பிராமணர்கள் சொல்லக் கேட்கும்போது அந்த நூலின் மீது கோபம் வருவது இயற்கை தானே?

பகவான் கிருஷ்ணன் அருளிச் செய்த பகவத்கீதை தோன்றுவதற்கு முன்னால் ஆயிரம் ஆண்டுகளாக நடைமுறையில் இருந்த ஜாதிக் கொடுமைக்கு காரணமானது கீதை அல்ல.

மா:ாக இந்த ஜாதிக் கொடுமையை விரட்டியடிப்பதற்கும், இல்லாமலாக்குவதற்கும், கண்ணனால் சொல்லப்பட்டது தான் கீதை என்பதே உண்மை.

எல்லையில்லாத ஆழமுள்ள ஞானமும், விஞ்ஞான உண்மைகளும் உள்ளடங்கி, உலக வாழ்க்கையை மிக அற்புதமாக அலசி ஆராயும் ஒரு நூல் தான் நமது பகவத்கீதை.

திரு. வீரமணியின் தாக்குதலை ஒரு வேளை தீவிர பக்தர்களால் சமாளிக்க முடியலாம், அல்லது அவர்கள் காதில் போட்டுக் கொள்ளாமல் போய் விடலாம்.

ஆனால் கீதையைப் பற்றி ஒன்றுமே அறிந்திராமல் இருந்து கொண்டிருக்கும் கோடானு கோடி இந்துக்கள் வீரமணியின் நூலைப் படிக்க நேர்ந்தால் அவர்கள் கீதையைப் பற்றி தவறாக நினைத்து விடும் அபாயம் உண்டு. இது இந்து மதத்துக்கு பெரிய ஆபத்தாக முடியும்.

ஆகவே சரியான உண்மை என்ன என்பது பற்றி யாராவது ஒருவர் சொல்லியே ஆகவேண்டும்.

இந்த வகையில் அடியேனின் சிறிய முயற்சி இது. இதைத் தொடர்ந்து பெரியோர்கள் பலர் முன்வந்து திரு. வீரமணியின் தவறான பிரச்சாரத்தை முறியடித்து கீதையின் மாண்பை உலகுக்கு காட்ட வேண்டுமென்பதும் அடியேனின் விருப்பமாகும்.

ரிக் வேத காலத்திலிருந்தே பிராமண ஆதிக்கமும், ஜாதிக் கொடுமையும் ஆரம்பித்து விட்டன என்பது தான் உண்மை.

ஜாதிகளின் பெயரால் இந்தியாவில் இந்து சமுதாயம் பிரிக்கப்பட்டு, சிலர் ஆதிக்கம் செலுத்தவும் பலர் அல்லல் படவும் நேர்ந்தது என்பது சரித்திர உண்மை.

இந்த ஜாதிக் கொடுமையினால் பாதிக்கப்பட்டவர்கள் அதற்குக் காரணமானவர்கள் மீது காழ்ப்புணர்ச்சி கொள்வதும்,

அப்படிப்பட்ட நிலைமை உருவாவதற்குக் காரணம் என்று நினைக்கின்ற நூல்களை அலசி ஆராய்வதற்கு முயல்வதும் இயல்புதான்.

ரிக் வேதத்தில் உள்ள பிராமண மேலாதிக்கத்தை எதிர்த்து உருவான பகவத்கீதையும் கூட காலக்கிராமத்தில் அந்த ஜாதி பிராமணர்களின் கைக்குள் மாட்டிக் கொண்டதால், ஜாதி வெறியர்களின் தவறான விளக்க உரைகளால் கீதையையே தவறாக நினைக்க வேண்டிய நிலை உருவாகிவிட்டது.

அன்று மட்டுமல்ல இன்று வரையிலும் கீதைக்கு உரை எழுதும் ஜாதி பிராமணர்களும், அவர்களது ஆதிக்கத்திற்குள் உள்ளவர்களும் கீதை தான் ஜாதிப் பிரிவினைக்குக் காரணம் என்பது போலவே பொருள் எழுதி வருகிறார்கள்.

இப்படிப்பட்ட உரைகளைப் படிக்கும் வீரமணி போன்றவர்கள் கீதையின் மீது தவறான அபிப்பிராயம் கொள்வது இயற்கை தான்.

ஆனால் சமீப காலத்தில் வாழ்ந்த சுவாமி சித்பவானந்தரும், சுவாமி சின்மயானந்தரும் கீதைக்கு உண்மையான விஞ்ஞான ரீதியான விளக்கம் கொடுத்திருக்கிறார்கள்.

இவர்களது உரையைப் படிக்கும் போதும், மூலத்தோடு ஒப்பு நோக்கிப் பார்க்கும் போதும் தான் போலி உரையாசிரியர்கள் கீதைக்கு எவ்வளவு துரோகம் செய்திருக்கிறார்கள் என்பது தெரியவருகிறது.



# 2. கண்ணன் ஜாதிக் கொடுமையை ஒழிக்க வந்தவன்

முதலில் தோன்றியது ரிக் வேதம் தான் என்பது எல்லா ஆராய்ச்சியாளர்களும் ஏற்றுக் கொண்ட உண்மை.

இதன் பிறகு ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றியவை யஜுர், சாம மற்றும் அதர்வண வேதங்கள்.

வேதங்கள் ஒவ்வொன்றிலும் நான்கு பகுதிகள் உண்டு. அவை,

1. சம்ஹிதைகள்
2. பிராமணகங்கள்
3. ஆரண்யகங்கள்
4. உபநிடதங்கள் என்பன.

இவற்றில் முதல் இரண்டும் வேதத்தில் கர்மகாண்டத்திலும், பின்னிரண்டும் ஞானகாண்டத்திலும் உள்ளன.

கர்மகாண்டத்தை உருவாக்கியவர்கள் புரோகிதர்களாக இருந்தவர்களென்றும், ஞான காண்டத்தை உருவாக்கியவர்கள் அரசர்களாக இருந்தவர்களென்றும் ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள்.

வேதத்தின் இந்த நான்கு பகுதிகளும் ஒன்றன் பின் ஒன்றாக உருவாக்கப்பட்டவை. அதாவது சம்ஹிதைகள் முதன்முதலில் தோன்றியவை. உபநிடதங்கள் அறிவு பெரும் வளர்ச்சியடைந்த பின் உருவாக்கப்பட்டவை.

கர்ம காண்டத்தில் யாகம், யக்ஞம், பூஜை போன்ற விஷயங்கள் சொல்லப்படுகின்றன.

உபநிடதங்களில் கடவுளைப் பற்றியும், ஆன்மா பற்றியும், உலக வாழ்வின் நிலையாமை பற்றியும் சொல்லப்படுகின்றன.

ரிக் வேதத்தில் வரும் சம்ஹிதையில் பத்தாவது மண்டலம் புருஷசூக்தம். இந்த புருஷசூக்தத்தில் ஒரு ஸ்லோகம் இப்படிச் சொல்கிறது.

**புருஷ சூக்தம் பாடல் 12**

"முகம் கிமஸ்ய கௌபாஹூ /
காஊரு பாதா வச்யேதே //"

**பொருள்**

(பிரம்மனுடைய) தலை (வாய்)யிலிருந்து யார் தோன்றினார்கள்? தோள்களில் (கைகள்) இருந்து தோன்றியது யார்? தொடையிலிருந்து தோன்றியது யார்? கால்களில் இருந்து வந்தது யார்?

**புருஷ சூக்தம் பாடல் 13**

"ப்ராஹ்மணோஸ்ய முகமாசீத /
பாஹூ ராஜன்ய : க்ருத : /
ஊரு ததஸ்ய யத்வைஸ்ய : /
பதப்யாம் சூத்ரோ அஜாய த//"

**பொருள்**

பிராமணன் ப்ரம்மனுடைய தலையிலிருந்து தோன்றி சிந்தனையும், பகுத்தறிவும் உடையவனாக இருப்பான், சத்திரியன் கைகளிலிருந்து தோன்றி பாதுகாக்கின்ற ஆயுதமாகவும் சக்தியாகவும் இருப்பான. வைசியன் தொடைகளில் இருந்து தோன்றி உற்பத்தியையும் பங்கு வைப்பதையும் செய்வான். சூத்திரன் பாதங்களில் இருந்து தோன்றி ப்ரம்மனுக்கு தாங்கலாகவும், அசையும் சக்தியாகவும் இருப்பான்.

புருஷசூக்தம் பாடல் 13 க்கு கொடுக்கப்படும் (சென்னை ராமகிருஷ்ணமடம்) விளக்கம்

இன்று விவாதத்திற்குள்ளாகியிருக்கும் ஜாதிப் படைப்பைப் பற்றி வேதத்தின் விளக்கமாக வேத காலத்திலேயே (கீதை தோன்றும் முன்னாலேயே) சொல்லப்பட்டது இந்தப் பாடல்.

இதே ரிக் வேதத்தில் வரும் யக்ஞ வல்க்கிய சம்ஹிதையில் 126வது ஸ்லோகம் இப்படிச் சொல்கிறது.

"நான்கு வர்ணங்களான, பிராமணன், சத்ரியன், வைசியன், சூத்திரன் ஆகியோர், புருஷனின் வாய், தோள்கள், தொடை (அல்லது வயிறு) கால்களிலிருந்து முறையே தோன்றினர்".

இதே போல தர்ம சாஸ்த்ரம் என்று சொல்லப்படும் மனு சாஸ்த்ரத்தை, உலகில் தானாக தோன்றிய ப்ரம்மா, முதலில் மனுவுக்கும், மனு பிற்பாடு பத்து முனிவர்களான மரீசி, அத்ரி, அங்கிர, புலஸ்த்தியர், புலகர், கிரது, ப்ரேசேதா, வசிட்டர், ப்ருகு மற்றும் நாரதர் ஆகியோருக்க சொல்லிக் கொடுத்தார் என்றும் ஸ்ம்ருதிகள் சொல்கின்றன.

மனு சொன்ன மனுநீதி என்னும் நூலுக்கு தர்ம சாஸ்த்திரங்கள் என்று பெயர்.

இந்த மனுநீதி நூலில் பிராமணனுடைய உயர்வும், சிறப்பும், மற்றவர்கள் அவனுக்கு அடிபணிந்து செயல்பட வேண்டிய கட்டாயம் பற்றியும் விரிவாக சொல்லப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய ரிக் வேதத்தின் கர்ம காண்டத்தை அடியொற்றியும், மனுநீதியில் சொல்லப்பட்ட சட்டங்களை அடியொற்றியும் மிக ஆரம்பத்திலிருந்தே ஜாதிகள் வகுக்கப்பட்டு, பிராமணனுடைய உயர்வும், மேலாதிக்கமும் உறுதி செய்யப்பட்டு விட்டன.

## ஜாதி பிராமணனின் கொடுமை

வேதத்தின் கர்ம காண்டத்தில் சொல்லப்பட்ட ஏராளமான யாகங்களையும், யக்ஞங்களையும் செய்து கொடுக்கும் அதிகாரிகளாகவும், தேவதைகளோடு தொடர்பு கொள்ளும் தகுதி படைத்தவர்களாகவும், அவ்வாறு தொடர்பு கொள்ளத் தேவைப்படும் மந்திரங்களை உச்சரிக்கத் தெரிந்தவர்களாகவும், பிராமணர்கள் தங்களைக் காட்டிக் கொண்டார்கள்.

ஜாதி பிராமண புரோகிதர்களின் அடாவடித்தனம் பற்றி வித்யா தர் மகாஜன் என்ற சரித்திராசிரியர் இப்படி எழுதுகிறார்.

ஏராளமான அதிகார துஷ்பிரயோகங்களும், மூட நம்பிக்கைகளும் இந்து மதத்துக்குள் புகுந்து விட்டன. ஜாதி பிராமணர்கள் இந்து மதத்தின் அதிகாரத்தை கையில் எடுத்துக் கொண்டு பிறருக்கு துன்பம் விளைவிப்பவர்களாக நடந்து கொண்டார்கள். அறியாமையையும் மூடத்தனங்களையும் வளர்த்து, மக்களிடமிருந்து ஏராளமான பணத்தைப் பிடுங்கினர். தாங்கள் உச்சரிக்கும் மந்திரம் மக்களை வாழவும் வீழவும் செய்யும் சக்தியுடையது என்று பயமுறுத்தினர். மன்னன் நடத்தும் போரில் வெற்றியையும் தோல்வியையும் முடிவு செய்வது தாங்கள் சொல்லும் மந்திரத்தின் வலிமைதான் என்று நம்ப வைத்தனர். மந்திரங்களும் மருந்தும் சேர்ந்தால் நோயை போக்கவோ ஒரு தலை மயிரை வளரச் செய்யவோ முடியும் என்று மார்தட்டினர். தினசரி வாழ்க்கையில் மந்திரம் பாதிக்காமல் ஒரு சிறுபகுதி கூட கிடையாது என்று சொல்லி தங்களது ஆதிக்கத்தை மக்களிடத்தில் வலுக்கட்டாயமாக புகுத்தினர்.

இவர்கள் நடத்திய மிருக பலிகளைப் பற்றி வித்யாதர் மகாஜன் மேலும் சொல்லுகிறார் பாருங்கள்.

நூற்றுக்கணக்கான ஆண்டுகளில் இந்த ஜாதி பிராமண புரோகிதர்கள் பலியிடும் சடங்கை ஒரு பெரிய கலையாகவே வளர்த்து, அதை அவர்கள் தவிர வேறு யாரும் செய்ய முடியாது என்றும் நிலை நாட்டினர். நடத்தப்படும் இம்மாதிரியான யாக பலிகளின் வெற்றி தோல்விகள், அதை நடத்திக் கொடுக்கும் பூஜாரி புரோகிதர்களுக்குக் கொடுக்கப்படும் தச்சிணையைப் பொறுத்துத்தான் அமையும் என்று நம்ப வைத்து ஏராளமாக வருமானம் ஈட்டினர்.

ஒவ்வொரு இல்லறத்தானும் செய்ய வேண்டிய யாக பலிகளின் எண்ணிக்கையை இஷ்டத்துக்கு அதிகரித்துக் கொண்டே சென்றனர். சின்னதும் பெரியதுமாக இவர்கள் நடத்திய இந்த பலிகளினாலெல்லாம் இவர்கள் பெயரும் பணமும் சம்பாதித்தனர். மன்னனின் முடி சூட்டு விழாவின் போது குதிரைகளை வெட்டிக் கொல்லும் அஸ்வமேத யாகம் செய்தனர். பல ஆயிரக்கணக்கான மிருகங்கள் இம்மாதிரி யாகங்களில் பலியிடப்பட்டன. கலந்து கொள்ளும் அத்தனை ஜாதி பிராமண பூஜாரிக்கும் கணிசமான தச்சிணையும், உயர்ந்த வகை உணவும் வழங்கப்பட்டன. யாகங்களின் போது நாடு முழுவதும் யாகம் நடத்துவதில் மட்டுமே கவனம் செலுத்தியதால், பொருளாதாரமும், பாதுகாப்பும் பாதிக்கப்பட்டன.

குழுந்தை பிறக்காத குடும்பத்துக்கு குழந்தை பிறக்கும் வரை ஒவ்வொரு மாதமும் யாக பலி நடத்தியாக வேண்டும் என்று கட்டாயப்படுத்தினர். சோமபானம் குடித்து போதையேறிய இவர்கள் அதிகமான தச்சிணைகளை கேட்டு துன்புறுத்தியதால் அனைவருமே அவர்கள் மீதும் இந்து சமயத்தின் மீதும் வெறுப்படைந்தனர். (History of India from Begining to 1526 A.D. by Vidhya Dhar Mahajan)

இப்படி அதிகாரத்தை பயன்படுத்தி மன்னர்களையும், பெரும் பணம் படைத்தவர்களையும் கடவுள் பெயரைச்

சொல்லி ஏராளமான பொருட்செலவில் பல யாகங்களைச் செய்ய வைத்துள்ளனர்.

உடலுழைப்பு எதுவுமின்றி ஏராளமான வருமானமும், அறுசுவை உணவும், கடவுளுக்கு நிகரான மரியாதையையும் பெற்று இந்த பிராமணர்கள் ஏக போக ஆதிக்கம் செலுத்தினர்.

இதனால் பாதிக்கப்பட்ட மன்னர்களும், மன்னரைச் சார்ந்தவர்களும் நாளடைவில் வேதங்களின் கடைசிப் பகுதியான உபநிடதங்களை உருவாக்கினர். (இப்படி சொல்கின்றவர் சுவாமி விவேகானந்தர்)

இந்த உபநிடதங்களில் மிக அற்புதமான அறிவு, எந்த விதமான விவாதத்தையும் சமாளிக்கக் கூடிய கடவுள் பற்றிய சிந்தனைகள் முதலியன இடம் பெற்றன.

ஆனாலும் இந்த உபநிடதங்கள் அறிவு பூர்வமாகவும், சாதாரண மக்களால் புரிந்து கொள்ள முடியாமலும் இருந்ததால் பிராமணர்களின் பூஜை முறைகள் தான் மக்கள் மத்தியில் செல்வாக்கு பெற்றது.

இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் தான் ஸ்ரீகிருஷ்ணன் தோன்றினார். இவர் மன்னனேயன்றி புரோகிதம் செய்யும் பிராமணன் அல்ல.

பூஜாரிகளின் அராஜகத்தை அடக்கவும், உபநிடதக் கொள்கைகளை மக்கள் மத்தியில் பரப்புவதற்காகவும், உபநிடதக் கருத்துக்களை எளிய மொழியில் பாமரர்களும் புரிந்து கொள்ளும் வகையில் சொல்லி மக்களுக்கு கண்ணன் உபதேசித்தார்.

கண்ணனின் சிந்தனைகள் அனைத்தையும் தொகுத்து புத்தகமாக்கியவர் வியாசர். இதுதான் பகவத்கீதை.

உண்மையில் கீதை புரோகிதர்களால் நடைமுறைப் படுத்தி வந்த ஜாதி முறையையும், பிராமணன் என்று சொல்லிக்

கொண்ட ஒரு குறிப்பிட்ட ஜாதியின் மேலாதிக்கத்தையும் தகர்த்தெறிவதற்காகவே கண்ணனால் உருவாக்கப்பட்டது.

## கர்ம காண்டத்துக்குக் கண்ணன் எதிரானவன்

பிராமண ஆதிக்கத்தையும் அவர்கள் செய்யும் யாகம் பூஜை முதலியவற்றையும் கண்ணன் கடுமையாக தனது கீதையில் தாக்குகிறார் பாருங்கள்.

"யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த் யவிபச்சித:/
வேதவாதரதா: பார்த்த நான்ய தஸ்தீதி வாதின://
(கீதை 2-42)

காமாத்மான: ஸ்வர்கபரா: ஜன்ம கர்ம பலப்ரதாம்/
க்ரியா விசேஷ பஹுலாம் போகைச்வர்ய கதிம் ப்ரதி//
(கீதை 2-43)

போகைச்வர்ய ப்ரஸக்தானாம் தயாபஹ்ருத சேதஸாம்/
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே//"
(கீதை 2-44)

இந்த மூன்று ஸ்லோகங்களின் பொருள்:

"அர்ஜுனா! விவேகமற்றவர்கள் வேதங்களைப் (கர்ம காண்டத்தை) பற்றிய வாதங்களில் மகிழ்பவர்கள், உலக சுகங்களைத் தவிர வேறு எதுவும் இல்ல என்று வாதிடுபவர்கள், காமம் நிறைந்தவர்கள், சொர்க்க சுகத்தை நாடுபவர்கள், இத்தகையோரின் வார்த்தைகள் வினைப்பயனின் காரணமாகப் புதிய பிறவியைத் தருவது: சுகத்தையும், அந்தஸ்த்தையும் அடைவதற்கான பல்வேறு கிரியைகள் நிறைந்தது. சொல் ஜாலங்கள் மிக்கது: அவற்றால் மனம் அலைக்கழிக்கப்பட்டு சுகத்திலும் அந்தஸ்த்திலும் பற்று கொள்பவர்களுக்கு உறுதியான புத்தி உண்டாவதில்லை".

வேதத்தின் கர்ம காண்டப்பகுதி மட்டுமே யாகம், யக்ஞம், பூஜை, ஆசையை நிறைவேற்றிக் கொள்ளுதல் போன்ற உலகியல் விஷயங்களைப் பற்றி பேசுவதால், ஸ்லோகத்தில்

வரும் வேதம் என்பது வேதத்தின் கர்ம காண்டத்தை மட்டுமே குறிக்கும்.

வேதத்தின் இந்த கர்ம காண்டப் பகுதியை நம்பி உலக இன்பங்களில் ஆசை வைத்து, அதன் பின் செல்பவர்கள் விவரம் கெட்டவர்கள். (அவிபச்சித) என்றும், உறுதியான புத்தி இல்லாதவர்கள் என்றும் கண்ணன் குற்றம் சாட்டுகிறார்.

இந்தக் குற்றச்சாட்டு கர்மகாண்டத்தை நம்பி ஏமாறுகிறவர்களை மட்டுமில்லாமல், அதை பயன்படுத்தி மக்களை ஏமாற்றும் ஜாதி பிராமண புரோகிதர்களையும் கடுமையாகச் சாடுகிறது.

இந்து மதத்தில் அன்றிலிருந்து இன்று வரை இருந்து வரும் பூஜை முறைகளும், டாம்பீகமான யாகங்களும் தான் மக்களின் மத்தியில் அபரிமிதமான கற்பனைகளையும், அறியாமையையும் வளர்த்து வருகின்றன.

உழைக்காமலே பலன் பெற விரும்பி, சாமிக்கு புரோகிதர்கள் சொல்லும் பூஜைகளைச் செய்ய ஏராளமான பொருள் செலவு செய்கின்றனர். பக்தர்கள் எனப்படுபவர்களின் இந்த அறியாமையில் தான் மக்களை ஏமாற்றி வாழும் புரோகிதர்களின் பிழைப்பே நடந்து கொண்டிருக்கிறது.

இப்படிப்பட்ட அறியாமையையும், பகல் கொள்ளைகளையும் தான் கண்ணன் கண்டிக்கிறார்.

ஆகவே கண்ணன் உண்மையில் ஒரு சீர்திருத்தவாதி என்பதையும் அறியாமைக்கு எதிரானவர் என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

**கண்ணனே உண்மையான பகுத்தறிவுவாதி**

என்னை மிகவும் கவர்ந்த ஸ்லோகம் ஒன்று கீதையில் உண்டு. கண்ணன் எந்த அளவுக்குப் பிறருடைய எண்ண ஓட்டங்களுக்கு மதிப்பு கொடுப்பவர் என்பதை இந்த ஸ்லோகம் அழகாக விளக்குகிறது.

"இதி தே க்ஞான மாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா/
விம்ருச்யைத தசேஷேண யதேச்சஸி ததா குரு//"
·(கீதை 18-63)

கண்ணன் அர்ஜுனனிடம் சொல்கிறார்.

"இரகசியங்களுக்குள் மேலான இரகசியத்தை நான் உன்னிடம் சொன்னேன். இதை நன்றாக மிச்சமில்லாமல் ஆராய்ந்து எப்படி விரும்புகிறாயோ அப்படியே செய்".

அர்ஜுனன் கண்ணனை குருவின் ஸ்தானத்தில் ஏற்றுக் கொண்டு அவனிடம் சரணாகதி அடைந்து (சிஷ்யஸ் தேகம் சாதிமாம் த்வாம் ப்ரபன்னம் - கீதை 2:7) எனக்கு அறிவுரை சொல்வாயாக என்று கேட்டுக் கொண்டதன் பேரில் தான் அவனுக்கு கீதையைக் கண்ணன் உபதேசிக்கிறார். இதனால் கண்ணன் சொல்லும் அத்தனையையும் அர்ஜுன் ஏற்றுக் கொள்ளும் மனநிலையில் தான் இருக்கிறான் என்பது தெளிவு.

ஆனாலும் கூட தான் சொல்வதை எல்லாம் அவர்ஜுன் ஏற்றுக்கொண்டு விடுவான் என்றிருந்த நிலையில் கண்ணன் தன் கருத்துக்களை அர்ஜுனனிடம் திணிக்க விரும்பவில்லை.

நான் சொன்ன உண்மைகளையெல்லாம் நன்றாக விமர்சனம் செய்து (விம்ருச்யைதத்) எப்படி விரும்புகிறாயோ (யதா இச்சஸி) அப்படியே செய் என்று சொல்லி, தன் கருத்துக்களை ஏற்றுக்கொள்வதும், ஏற்றுக்கொள்ளதாததும் உன்னுடைய விருப்பம் தான் என்று அர்ஜுனனுக்கு பூரண சதந்திரம் கொடுக்கிறார்.

உலகில் பல்வேறு மதங்கள் தங்கள் தங்கள் கொள்கைகளைக் கட்டாயமாக அறியாத மக்களிடம் திணிக்கும் போது, ஞானத்தின் எல்லையில் நின்று, குணாதீதனாகவும், ஸ்திதப்ரக்ஞனாகவும் இருந்த கண்ணன் மிக எளிதாக அர்ஜுனனிடம், நான் சொல்வதை நீ நம்பியே ஆக வேண்டும் என்று சொல்லியிருக்கலாம். ஆனால் கண்ணன் அப்படிச் செய்யவில்லை. இது அவருடைய பெருமையை மேலும் இமய மலையளவு வளர்த்து விடுகிறது.

கண்ணனின் இந்த வார்த்தைகள் அர்ஜுனனுக்கு மட்டும் சொல்லப்பட்டதல்ல. கீதையைப் படிக்கும் அத்தனை பேருக்கும் சேர்த்து சொல்லப்பட்டதுதான்.

டாக்டர் ஒரு மருந்தைக் கொடுக்கிறார். அதை உண்பதும், உண்ணாமல் இருப்பதும் நோயாளியைப் பொறுத்த விஷயம். மருந்தை உண்டு சரியான பத்தியத்தைக் கடைபிடித்தால் நோய் குணமாகும் என்று நம்பித்தான் டாக்டர் மருந்து கொடுக்கிறார். மருந்தை பயன்படுத்தி நோயிலிருந்து விடுபட்டுக் கொள்வது முற்றிலுமாக நோயாளியின் கடமையே. இதில் டாக்டரையோ, மருந்தையோ குறை சொல்வதற்கு ஏதுமில்லை.

அதே போல கீதை என்னும் சாகா மருந்தை (அமிர்தத்தை) கண்ணன் என்ற வைத்தியர் நோயாளிகளான நமக்குக் கொடுத்திருக்கிறார். இதை பயன்படுத்தி மேல்நிலை அடைவதும், அடையாததும் நம்முடைய விருப்பம்.

கண்ணன் நமக்கு இவ்வளவு சுதந்திரம் கொடுத்திருக்கும் போது, எக்காரணம் கொண்டும் அவர் மீது குறை காண்பதற்கு நமக்கு உரிமை இல்லாமல் போய் விடுகிறது.

உனக்கு இந்த மருந்து பிடிக்கவில்லையென்றால் வேறொருவருக்குப் பிடிக்கும். ஆகையால் கீதையைப் பிடிக்காதவர்கள் ஒதுங்கி இருக்கலாமே தவிர சேற்றை வாரி அடிக்க முயல்வதில் நியாயமில்லை.

கீதைக்குத் தவறான பொருள் எழுதி தங்கள் ஜாதி வெறிக்கு அம்மாபெரும் சிந்தனைப் பெட்டகத்தை பலிகடாவாக்கிக் கொண்டவர்களின் மாய வலையில் இருந்து நாம் விடுபடவேண்டும்.



# 3. கண்ணன் சரித்திர புருஷனா? கண்ணன் மாயாஜாலம் செய்தாரா?

இன்று எத்தனையோ பத்திரிகைகளிலும், புத்தகங்களிலும் பல ஆயிரம் கதைகள் வெளியாகின்றன.

இந்தக் கதைகளில் ஒரு சில தவிர பாக்கி அத்தனையும் கற்பனைகள் தான்.

கற்பனைக் கதை எழுதுவது எப்படி?

கதாசிரியன் எப்படி தன் கதையின் கருவை உருவாக்குகிறான்?

எந்த ஒரு கதையானாலும், அது எவ்வளவு தான் கற்பனையானாலும் எங்காவது நடந்த அல்லது பார்த்த ஒரு சம்பவத்தைக் கருவாக வைத்து தான் ஒரு கற்பனைக் கதையைக் கூட எழுத முடியும்.

இராமாயணமும், மகாபாரதமும் வெறும் கற்பனைகள் மட்டுமே என்று மேல் நாட்டவர் எழுதுகின்றனர். ஆனால் இதை ஏற்றுக் கொள்ள முடியாது.

"பின்னால் வந்த எழுத்தாளர்களாலும், கவிஞர்களாலும் கற்பனைகள் பல இவற்றில் சேர்க்கப்பட்டிருக்கலாம். ஆனால் முக்கியமான கதாபாத்திரங்கள் சந்தேகத்திற்கிடமில்லாமல் சரித்திரத்தில் வாழ்ந்தவர்கள் தான்" (மிகப்பெரிய சரித்திர ஆராய்ச்சியாளரான வித்யாதர் மகா ஜன் எழுதிய ஹிஸ்டரி ஆப் இந்தியா - ஆரம்பத்திலிருந்து கி.பி. 1526வரை - பக்கம் 79).

இந்த உண்மை, எழுத்தாளர்கள் அனைவருக்குமே தெரியும். நூற்றுக்கு நூறு கற்பனையான ஒரு கதையையோ, காவியத்தையோ, நாவலையோ யாரும் எழுதுவதில்லை.

கீதாச்சாரியன் பற்றி பாகவதத்திலும், மகாபாரதத்திலும் நம்ப முடியாத செய்திகள் பல சொல்லப்பட்டிருக்கின்றன.

பக்தியின் மிகுதியால் நம் முன்னோர்கள் கற்பனையின் எல்லைக்கே சென்று நடக்க முடியாத, இயற்கைக்கு ஒவ்வாத விஷயங்களையெல்லாம் எழுதி வைத்திருக்கின்றனர்.

சாதாரணமாக ஒரு மனிதன் செயற்கரிய செயல் எதையும் செய்து, மக்கள் மத்தியில் புகழ் பெறும் போது, மக்கள் அவன் செய்ததை ஒன்றுக்குப் பத்தாகக் கூட்டி கற்பனைகளைக் கலந்து பரப்பி விட்டு விடுகிறார்கள்.

சத்ரபதி சிவாஜியின் சரித்திரத்தைப் படிக்கும் போது, அவர் நிகழ்த்திக் காட்டிய மயிர்க் கூச்செறிய வைக்கும் பல சாகசங்கள் நம்மை பிரமிக்க வைக்கும்.

பூனாவில் இள வயதில் தான் வளர்ந்த சிவப்பு மாளிகையில் தங்கியிருந்த, அவுரங்கசீப்பின் தளபதி சாயிஷ்டாக்கானை நள்ளிரவில் சென்று தாக்குவார் சிவாஜி.

சண்டையில் கை விரல்களை இழந்த சாயிஷ்டாக்கான், உடனடியாக டெல்லிக்கு ஓடி விடுவான்.

இந்த சம்பவத்தை தொடர்ந்து மக்கள் மத்தியில் பரவிய செய்திகள் சுவாரஸ்யமானவை.

சிவாஜி ஒரே நேரத்தில் பல இடங்களில் இருப்பாராம்.

இருந்த இடத்திலிருந்தே கண்ணிமைக்கும் நேரத்தில் அறுபது அடி தூரம் முன்னே பாய்ந்து எதிரியைத் தாக்குவாராம்.

சிவாஜி அமானுஷ்ய சக்தி படைத்தவராம்.

அவர் மாயாவியாம்.

இது போன்ற பல செய்திகள் மக்கள் மத்தியில் பரவின.

இந்த செய்திகளையெல்லாம் உண்மை என்று நம்பிய ராஜா ஜெயசிம்மனுடன் வந்த முஸ்லீம் படை வீரர்கள், சிவாஜி சமாதானம் பேச வருகிறார் என்று தெரிந்ததும் அஞ்சி நடுங்கினார்கள் என்று வரலாறு சொல்கிறது.

சிவாஜியைப் போன்று பல்லாயிரம் மடங்கு சாமர்த்தியத்துடன் செயல்பட்டு, மிகக் குறைந்த படையுடன் இருந்த பாண்டவர்களுக்கு, வெற்றியைத் தேடிக் கொடுத்தவர் கண்ணன்.

இன்று கூட பகவத்கீதையை முழுவதும் புரிந்து கொள்வதற்கும், அதன் படி நடப்பதற்கும் பெரும்பான்மையான மக்களுக்கு, சிரமமாக இருக்கிறது என்றால், அவ்வளவு பழைய காலத்திலேயே இவ்வளவு பெரிய உண்மைகளைச் சொன்ன கண்ணனும், உபநிடதங்களைக் கண்ட ரிஷிமார்களும் எவ்வளவு பெரிய சிறப்புடையவர்களாக இருந்திருக்க முடியுமென்று ஆச்சரியப்படுவது இயல்பு தானே!

கண்ணன் செயற்கரிய செயல்களைச் செய்ததால், பின்னால் வந்தவர்கள் தங்கள் கற்பனைகளைக் கட்டி விட்டு பல நம்ப முடியாததும், இயற்கை நியதிக்குப் புறம்பானதுமான கதைகளைக் கட்டி வைத்து விட்டனர்.

பொதுவாகவே நமது பாரத நாட்டின் புராணங்களும், இதிகாசங்களும் முக்கால் புளுகலும், கால் உண்மையாகவும் தான் இருக்கின்றன?

இவற்றில் புளுகல் எது? உண்மை எது? என்று கண்டறிவது தான் புத்திசாலித்தனம். ஆனால் புளுகலையும், கற்பனையையும் உண்மை என்று நம்பி அதன் படி நடக்க முயலும் போது தான் ஏமாற்றுக்கார புரோகிதர்களின் பிடியிலே நாம் மாட்டிக் கொள்கிறோம்.

கண்ணன் உண்மையில் வாழ்ந்த சரித்திர நாயகன் தான். ஆனால் அவனைச் சுற்றி புனையப்பட்ட கதைகளில் பெரும் பகுதி கற்பனை.

உண்மை எது? கற்பனை எது? என்பதை மிக எளிதில் கண்டுபிடித்து விட முடியும்.

**கோவர்த்தன மலையைக் குடையாக பிடித்தது**

மாடு மேய்த்து வரும் பிருந்தாவனத்து மக்கள் கோவர்த்தன மலையடிவாரத்தில் திருவிழாக் கொண்டாடுவதற்காகப் பிள்ளை குட்டிகள், கன்று காலிகள் முதலியவற்றோடு சென்றனர். திருவிழா முடியும் முன்னால் பெருமழை பிடித்துக் கொண்டது. மறைவிடமில்லாமல் மழையில் மாட்டிக் கொண்ட எல்லோரையும் கண்ணன் தனக்குத் தெரிந்த ஒரு மலைக் குகையோரத்தில் அழைத்துச் சென்று ஒதுங்க வைத்து மழையிலிருந்து காப்பாற்றுகிறான்.

மற்றவர்களைப் போலல்லாமல், கண்ணன் எப்போதுமே துறு துறு என்று இருப்பவராதலால் இந்த மலையின் அத்தனை இடங்களையும் அவர் தெரிந்து வைத்திருந்தார். இந்த அனுபவ அறிவினால் அவரால் தன் மக்களை மழையிலிருந்து காப்பாற்ற முடிந்தது.

மக்கள் என்றால் பத்தாயிரம் இருபதாயிரம் என்று கற்பனை செய்ய வேண்டாம். சில குடும்பங்களைச் சேர்ந்த 50 அல்லது 100 பேர் சென்றிருக்கலாம். மிகப் பழமையான அந்தக் காலத்தில் இதற்கு மேல் ஆள் சேருவது அத்தனை சிறிய கிராமத்தில் சாத்தியமில்லை.

கண்ணன் மலையை குடையாகப் பிடித்து மக்களை மழையிலிருந்து காப்பாற்றினார் என்று பின்னாளில் கற்பனையைத் தட்டி விட்டு கதை எழுதி விட்டார்கள். (இப்படிச் சொன்னவர் பாரதீய வித்யாபவன் ஸ்தாபகர் திரு. கே.எம். முன்ஷி அவர்கள்).

**கையோடு இன்னொரு கதையும் பார்த்து விடுவோம்.**

வானம் என்றால் மேலே இருப்பது.

வானரன் என்றால் மேலே வசிக்கும் நரன் அல்லது மனிதன் என்று பொருள்.

மலையின் மேலேயும் மரத்தின் மேலேயும் வீடு கட்டி வாழ்ந்தவர்களை வானரன் என்றார்கள்.

என்னப்பா கதை விடுகிறாயா? என்று நீங்கள் கேட்டால் அது உங்கள் அறியாமையைக் காட்டி விடும். ஏனென்றால் பழங்குடி மக்கள் இன்றும் கூட காட்டு மிருகங்களுக்கு பயந்து மரத்தின் மேலே வீடு கட்டி வாழ்கிறார்கள் என்பது உண்மை.

காலப் போக்கில் மரத்தின் மேல் வாழ்ந்தவன் குரங்காகத்தான் இருக்க முடியுமென்று ஏதோ ஒரு அதி புத்திசாலி கற்பனை செய்ய, அன்றும் இன்றும் உள்ள புத்திசாலிகள் வானரனைக் குரங்காகவே ஆக்கி விட்டனர்.

சரி, ஒரு கதையில் இப்படியெல்லாம் கற்பனை பண்ணுவது சகஜம் தான் என்று விட்டு விடலாம். ஆனால் அந்த கற்பனைக் கதையின் கதாபாத்திரத்தை உண்மையான சரித்திர புருஷனாக வாழ்ந்த இராமபிரானோடு பேச விடுவதும் அந்த கற்பனையான குரங்கு வடிவத்துக்குக் கோயில் கட்டி கும்பிடுவதும் அறிவுடைமையாகாது.

கற்பனை எல்லை மீறிப் போகும்போது, இராமாயணம், மகாபாரதம் போன்ற காவியங்களின் அடித்தளமான கொஞ்ச உண்மையையும் கூட கேலிக் கூத்தாக்கி விடுகிறது.

அன்றும் இன்றும் குரங்கு மனிதனோடு பேசவில்லை. இராமாயணத்திலும் குரங்கு இராமனோடு பேசியிருக்காது.

ஆகவே இராமனோடு பேசிய, இராமனுக்கு உதவிய அனுமன் நிச்சயம் குரங்கு அல்ல. உண்மையில் வாழ்ந்த புத்தியும், பலமும் வாய்ந்த மனிதன்.

இல்லையில்லை அனுமன் குரங்கு தான் என்று சாதிக்க முயன்றால் உள்ளதும் போச்சு நொள்ளக் கண்ணா என்பது போல, இராமாயணத்தில் வரும் இராமபிரான் பாத்திரமும் கற்பனையாகிப் போய் அழிந்து விடும்.

அனுமன் கதையில் இன்னும் பாக்கி இருக்கிறது. இராமனும் இலக்குவனும் விஷ அம்பினால் தாக்கப்பட்டு விழுந்து விடுகிறார்கள். பச்சிலை மருந்துகளைப் பறித்து வர அனுமன் அனுப்பப்படுகிறான். பச்சிலைகள் கிடைக்குமிடத்தைச் சரியாக சென்றடைந்தாலும், மருந்து இலைகளை அனுமனால் அடையாளம் கண்டுபிடிக்க இயலவில்லை. வெறுங்கையோடு திரும்பிப்போனால் காலதாமதமாகி இராம, இலக்குமணரின் உயிருக்கே ஆபத்தாக முடியலாம். ஆகவே அங்கிருக்கும் எல்லா வகையான மருந்து இலைகளையும் பிடுங்கி ஒரு பெரிய கட்டாகக் கட்டிக் கொண்டு வருகிறான் அனுமன்.

இதைப் பார்த்த மருத்துவனான ஜாம்பவான் 'அட! என்னப்பா, இது, ஒரு கைப்பிடி பச்சிலை போதுமே, இப்படி மலையையே கொண்டு வந்துவிட்டாயே என்று அனுமன் கொண்டு வந்த பெரிய இலைக் கட்டைப் பார்த்து வியந்து சொல்கிறான்.

இராமனுக்கு செய்த சேவையின் அளவை அதிகப்படுத்திக் காட்ட விரும்பிய பக்தர்கள் அனுமன் மலையையே கொண்டு வந்தான் என்று கதை கட்டி விட்டார்கள்.

பிற்காலத்தில் இன்னொரு அதிமேதாவி வந்து மிச்சமிருந்த மலையை அனுமன் அங்கிருந்தே தூக்கி எறிந்தான். அது கடலைக் கடந்து கன்னியாகுமரி மாவட்டத்தில் வந்து விழுந்தது. அதுதான் இன்று இந்த மாவட்டத்தில் உள்ள மருந்துவாழ்மலை என்று கதை கட்டி விட்டான்.

சென்னையில் உள்ள ஹமில்டன் என்பவரின் பெயரால் கட்டப்பட்ட பாலம் காலப்போக்கில் அம்பட்டன் வாராவதியாகி, அதன் பிறகு அதுவே மொழி மாற்றம் செய்யப்பட்டு பார்பர்ஸ் பிரிட்ஜ் ஆனது போன்றதுதான் இந்த மருந்துவாழ்மலையின் கதையும்.

வானுயர்ந்த இந்துமத கீதை கொள்கைகள் இம்மாதிரியான கற்பனைகளால் கேடு அடையுமே தவிர உயர்வடையாது. மக்களை மடையர்கள் ஆக்கவே கதைகள் சொல்லி ஏமாற்றி கொண்டிருந்தால், ஒரு புரோகித கூட்டம் மட்டும் வாழ்வை அனுபவிக்குமே தவிர, இந்துமதம் நிச்சயம் வளர்ச்சி அடையாது.

கண்ணன் செயற்கரிய செய்தவர் என்பதால் காலம் காலமாக அவரது பெருமை மக்கள் மத்தியில் பரவி வந்தது. அவர் பெருமை இன்றும் இருக்கிறது என்றும் இருக்கும்.

கண்ணன் கடவுளும் இல்லை. மாயாவியும் அல்ல. அவதாரமும் அல்ல. அவர் உங்களையும் என்னையும் போல சாதாரண மனிதனாக பிறந்தவர். ஆனால் நம்மில் ஒருவராலும் எட்டிப் பிடிக்க முடியாத ஞானத்தின் எல்லையை அடைந்து ஜீவன் முக்தனாகி விட்டதால் அவர் நமக்கு கடவுளாக தோன்றுகிறார்.

ஒவ்வொரு ஜீவனிலும் இருக்கும் ஆத்மாவும் அண்டம் எல்லாம் பரவி இருக்கும் பரமாத்மாவான சர்வலோக மகேஸ்வரனும் ஒன்று தான் என்பதால் ஜீவான்மா நிலையில் இருந்து இந்த வாழ்க்கையிலேயே பரமான்மா நிலையை அடைந்தவர் கண்ணன். இது கண்ணனுக்கு மட்டுமல்ல. மனிதர்களாக பிறந்திருக்கின்ற அனைவருக்குமே சாத்தியமான ஒன்றுதான் என்று போதிப்பது தான் பகவத்கீதை.

தானடைந்த நிலையை நிரூபித்துப் பார்த்து விட்ட நிலையில் மற்றவர்களுக்கும் தெரியப்படுத்த வேண்டும் என்பதற்காகவே கண்ணன் பகவத்கீதையை சொன்னார்.

இயற்கையில் நடைபெற முடியாத, கற்பனையான அற்புதங்கள் என்றும், இறைவனின் லீலை என்றும், கீதையிலும் இந்து மத புராணங்களிலும் சொல்லப்படும் நிகழ்ச்சிகளை உண்மை என்று ஏற்றுக்கொள்ளக் முடியாது என்பதே

திரு. வீரமணியின் நிலை. இதை சொல்வதற்காகவே இவர் தனது புத்தகத்தில் ஏராளமான மேற்கோள்களைக் காட்டி பல பக்கங்களில் விளக்கியிருக்கிறார்.

உலகமே கடவுள் படைத்தது தான். அவர் படைத்த இந்த உலகத்தில் உள்ள இயற்கை சட்ட திட்டங்கள் அத்தனையும் கூட கடவுளின் படைப்புதானே?

அதிசயம் என்ற பெயரிலும், அற்புதம் என்ற பெயரிலும் கடவுளே தான் படைத்த படைப்புக்கு எதிரான காரியம் செய்வாரா? நிச்சயம் மாட்டார். நமக்கு என்ன ஆசை என்றால், 'நகம் நனையாமல் நத்தை' எடுக்க வேண்டும் என்றும் மந்திரத்தில் மாங்காய் விழுந்து விட வேண்டும் என்றும், எப்படியாவது அதிசயம் அற்புதம் நிகழ்ந்து, தான் நினைப்பது நடந்துவிட வேண்டும் என்பது தான். நம்முடைய இந்த அறியாமையை நிறைவு செய்து கொள்வதற்காக கடவுளைக் கொண்டே அவர் படைத்த இயற்கைக்கு விரோதமாக செயல்பட்ட மாதிரி கதைகளை எழுதி வைத்திருக்கிறோம்.

ஆகவே வீரமணியின் குற்றச்சாட்டுகள், இந்த கற்பனைக் கதைகளைப் பொறுத்த வரையில் நியாயமானவைதான்.

மகா கோழை ஒருவனுக்கு சத்ரபதி சிவாஜியின் செயல்கள் அற்புதம் தான். அறியாத சிறுவனுக்கு ஒரு மந்திரவாதி (Magician) செய்து காட்டுவது அதிசயம் தான்.

அறியாமையில் மூழ்கிக் கிடப்பவர்களுக்குக் கண்ணனின் செயல்கள் இறைவனின் லீலைகள் தான்.

ஆனால் உண்மையான அறிவுப் பூர்வமான ஆராய்ச்சிக்குட்படுத்தப்படும்போது, மேலே சொன்ன கண்ணன், அனுமன் கதைகளைப் போல, மகாபாரதத்தைச் சுற்றியுள்ள சம்பவங்கள் அனைத்துமே கற்பனையை நீக்கிவிட்டுப்

பார்த்தால், சாதாரணமான உண்மை சம்பவங்கள் தான் என்பது புரிய வரும்.

**கண்ணனால் நாம் பயனடைவது எப்படி?**

மிகப்பழைய காலத்தில் மிகச்சிறந்த டாக்டர் ஒருவர் இருந்தார். அவர் ஆராய்ச்சிகள் பல செய்து மருந்துகள் தயாரித்து எல்லோரையும் நோயிலிருந்து குணப்படுத்தினார். மக்களுக்கெல்லாம் மிகுந்த மகிழ்ச்சி.

வய்தாகி அவரும் ஒரு நாள் இறந்து போனார். அவர் போன பிறகு, ஊரிலுள்ள நோயாளிகளுக்கு மருந்து கொடுக்க யாருமில்லை. அந்த டாக்டர் மீது இருந்த மரியாதையினால், மக்கள் அவருக்கு ஒரு கோயில் கட்டி அவரை வழிபட்டனர்.

யாருக்காவது அவ்வூரில் நோய் வந்தால் அந்தக் கோவிலில் வந்து, டாக்டர் சாமி நீதான் எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று கும்பிட்டு விழுவார்கள். அங்கப் பிரதட்சிணம் செய்வார்கள்: காவடி எடுப்பார்கள்: அலகு குத்துவார்கள்: மாலை போட்டு மலைக்குப் போவார்கள். ஆனாலும் கூட நோய்க்குச் சரியான மருந்தை அந்த சிலையாக இருந்த டாக்டர் சாமி கொடுக்கவில்லை. நோயும் குணமாகவில்லை.

நோய், குணமாகாத போது, டாக்டர் சாமிக்கு நம் மீது கோபம் என்றோ அல்லது நாம் சரியாக நம்பிக்கை வைத்து சாமி கும்பிடவில்லை என்றோ நினைத்துக் கொண்டார்கள்.

அந்த ஊருக்குப் புதிதாக வந்த ஒருவன். டாக்டர் வாழ்ந்திருந்த காலத்தில் செய்த மருந்து ஆராய்ச்சிகளையெல்லாம் ஒரு ஓலைச்சுவடியில் எழுதி வைத்திருப்பதைப் பார்த்து, அதன்படி மருந்துகளைச் செய்து மக்களுக்குக் கொடுத்தான். மக்களுக்கு நோயும் தீர்ந்தது.

அந்த நல்ல டாக்டர் தான் கண்ணன். அவர் செய்த ஆராய்ச்சி தான் பகவத்கீதை. டாக்டர் சொன்னபடி மருந்து செய்து உண்டால் மட்டுமே நோய் போகும் என்பது போல, கண்ணனின் கீதையைப் படித்து அதன்படி நடந்தால் வாழ்க்கை வளம் பெறுமே தவிர, கண்ணனுக்குக் கோயில் கட்டிக கும்பிட்டால் மட்டும் கீதையின் பலன் நமக்குக் கிடைத்து விடாது.

**மகாபாரதத்ததில் மாயா ஜாலம்.**

மகாபாரத கதையில் வரும் இயற்கை நியதிக்கு ஒவ்வாத கதைகளைக் கற்பனை என்று ஒதுக்கி விட்டோம். ஆகவே திரு. வீரமணி அவர்கள் இம்மாதிரி கற்பனைக் கதைகள் மீது செய்யும் விமர்சனங்களுக்கு நாம் பதில் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் சில விஷயங்களுக்கு நாம் அறிவுப் பூர்வமாக பதிலைச் சொல்ல முடியும். இந்த அறிவு பூர்மான பதிலை அறிவுள்ளவர்கள் நிச்சயம் ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

**கீதை போர்க்களத்தில் உபதேசிக்கப்பட்டதா?**

இது நியாயமான கேள்வி தான். இரண்டு தரப்பிலும் ஏராளமான படைவீரர்கள், போர் தொடங்கக் கடைசி எச்சரிக்கையும் செய்யப்பட்ட பிறகு (ஸஹ ஸைவாப்ய ஹன்யந்த ஸ சப்த ஸ் துமுலோபவத் = திடீரென்று முழங்கிய (போர்ப்பாறை) ஒலி பேரொலியாக இருந்தது, 1 : 13) சாவகாசமாக அர்ஜுனனும், கண்ணனும் உட்கார்ந்து பதினெட்டு அத்தியாயம் உள்ள கீதையின் 700 சுலோகங்களையும் சொல்லவும், கேட்கவும் செய்தார்கள் என்றால் அது நம்புவதற்கு ஏற்புடையதாக இல்லை.

ஒரு தகவலைச் சொல்வதற்காக களம் ஒன்று அமைக்கப்படும்போது, அதற்கு ஒரு காட்சியாகவே

போர்க்களத்தில் கீதை என்ற வகையில் வியாசர் அமைத்தார் என்று பார்ப்பதே பொருத்தமுடையதாக இருக்கும்.

அர்ஜுனன் திடீரென்று போர்க்களத்தில், தன் எதிரில் நின்ற உறவினர்களைக் கண்டு மனம் பேதலித்து போர் செய்ய மறுத்தான் என்று சொல்லப்படுவதை அறிவு பூர்வமாக ஆராய்ந்து பார்ப்போம்.

பழைய நாட்களில் போர் ஒன்று நடப்பதாக இருந்தால், அதுவும் தர்மப் போர் ஒன்று நடப்பதாக இருந்தால் இரு தரப்பாரும் ஒருவருக்கொருவர் தெரியும்படியாகவே தயாரிப்புகளை செய்வார்கள். கொள்ளையடிப்பவர்கள் கூட இடம், நேரம் முதலியவற்றை முன் கூட்டியே அறிவித்து அதன் பிறகுதான் கொள்ளையில் ஈடுபடுவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறோம்.

நியாயம் தங்கள் பக்கம் இருக்கிறது என்று நம்பிய அர்ஜுனனின் கண் முன்னாலேயே தன்னுடைய சொந்தக்காரர்களும் கூட (சல்லியன்) துரியோதனன் பக்கம் சேர்ந்து கொண்டது போன்ற செயல்களெல்லாம் அர்ஜுனனின் மனதை உறுத்திய நிலையில் அர்ஜுனனின் மனது ஊசலாட ஆரம்பிக்கிறது. இதைப்புரிந்து கொண்ட கண்ணன் அர்ஜுனனை சில நியாயங்களை சொல்லி உற்சாகப்படுத்தி போர் செய்ய வைக்கிறார்.

சுருக்கம் கருதி வியாசர், இந்த சம்பாசனையை ஒரே இடத்தில் நடந்ததாக எழுதியிருக்கிறார் என்பதே உண்மை அதிலும், பக்தி யோகம், ஞான யோகம் போன்ற பகுதிகள் கண்ணனின் வாழ்நாளில் அவர் மக்களுக்குச் சொல்லிய தத்துவங்கள் தான். இவற்றையெல்லாம் தொகுத்துச் சொல்லும் போது, வியாசர் எல்லாவற்றையும் ஒன்றாக ஒரே நூலில் ஒரே சந்தர்ப்பத்தை பயன்படுத்திச் சொல்லியிருக்கிறார் என்று எடுத்துக் கொள்வதே அறிவுடமை.

போர்க்களத்தில் கண்ணன் சொன்னவை மிகக் கொஞ்சமே என்றும், மற்ற பகுதிகள் கண்ணனின் பொதுவான உபதேசங்கள், பல்வேறு நேரங்களில் சொன்னவை என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

**சஞ்சயனுக்கு ஞானக்கண் கிடைத்தது என்றால் என்ன?**

குரு சேத்ர போர்க்களத்துக்கும் தலைநகரான அஸ்தினாபுரத்திற்கும் இடைப்பட்ட தூரம் 100 கிலோ மீட்டர் (80 மைல்கள்) அஸ்தினாபுரத்தில் இருந்து கொண்டே திருதிராஷ்டிரனுடைய அமைச்சன் சஞ்சயன் போர்க்கள நிகழ்ச்சிகளை நேரடியாகப் பார்த்துச் சொல்வதற்கு வசதியாக அவனுக்கு ஞானக்கண் கொடுக்கப்பட்டது என்றும், அதைப் பயன்படுத்தி கிருஷ்ணன் சொன்ன கீதையை அதாவது கிருஷ்ணார்ஜுன சம்பாசனையை நேரடியாகக் கேட்டு திருதராஷ்டிரனுக்குச் சொன்னதாகவும் சொல்லப்படுகிறது.

**என்னது இந்த ஞானக்கண்?**

போர் ஆரம்பித்த பத்தாவது நாள் கௌரவர்களின் படைத் தலைவரான பீஷ்மர் படுகாயமடைந்து அம்புப் படுக்கையில் விழுந்து விடுகிறார்.

இந்த செய்தியை சஞ்சயன் தனது மன்னனான திருதராஷ்டிரனுக்குச் சொல்ல வருகிறான். இதைக் கேட்டு திகைத்துப் போன திருதராஷ்டிரன், "ஐயய்யோ, பீஷ்மரே விழுந்து விட்டாரா? அப்படியானால் என் மக்கள் தோற்று விடுவார்களா?" என்று வியந்து போய் சஞ்சயா! ஆரம்பத்திலிருந்து போர்க்களத்தில் நடந்தவற்றையெல்லாம் என்னிடம் விலாவாரியாகச் சொல் என்று சஞ்சயனுக்கு உத்தரவிடுகிறான்.

இதுவரையிலும் தன் மக்களான கௌரவர்களின் வெற்றியில் கொஞ்சமும் சந்தேகப்படாமல் இருந்த

திருதராஷ்டிரனை பீஷ்மரின் வீழ்ச்சி பயமுறுத்திய பிறகே. அதாவது, போர் துவங்கிய பத்தாவதுநாள் தான் சஞ்சயனிடம் ஆரம்பததிலிருந்தே நடந்த விபரங்களைக் கேட்கிறான் (பீஷ்ம பர்வம் : 13)

இதிலிருந்து அவ்வப்போது போர்க்களத்தில் நிகழச்சிகள் நடக்க நடக்க சஞ்சயன் நேரடி ரிப்போர்ட் (Live Commentary) கொடுத்து கொண்டிருக்கவில்லை என்பது தெளிவாகிறது.

தர்ம க்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ : /
மாமகா : பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்சய //

கீதை : 1 - 1

(தர்மச் சேத்ரமாகிய குருச் சேத்ரத்தில் யுத்தம் செய்வதற்காகக் கூடியுள்ள நம்மவர்களும் பாண்டவர்களும் என்ன செய்தார்கள் என்று திருதராஷ்டிரன் கேட்டான்)

பகவத்கீதையில் வரும் இந்த முதல் ஸ்லோகத்தில் திருதராஷ்டிரன், போர்களத்தில் என்ன நடந்தது என்று சஞ்சயனிடம், போர் ஆரம்பித்து 10 - வது நாள் தான் கேட்கிறான்.

ஆக குறைந்த பட்சம், திருதராஷ்டிரனிடம் போர்க்கள நிகழ்ச்சியை, அதிலும் குறிப்பாக கிருஷ்ணார்ஜுன சம்பாசனை, போர் துவங்குவதற்கு முன்பாகவே நடந்து முடிந்து விடுவதால் சஞ்சயன் திருதராஷ்டிரனிடம் சொன்னது நேரடி ரிப்போர்ட் இல்லை என்பது தெளிவாகிவிடுகிறது.

கீதையின் 11-வது அத்தியாயத்தில் 8 - வது ஸ்லோகத்தில், "எனது யோக மகிமையை உன்னுடைய ஊனக்கண்ணினால் பார்க்க முடியாது. ஆகையால் உனக்கு ஞானக்கண்ணைக் (திவ்யம் ததாமி தே சக்ஷு) கொடுக்கிறேன்" என்று கண்ணன் சொல்கிறார். ஞானக்கண் என்பது அறிவுக்

கண் என்று புரிந்து கொள்வதில் நமக்குக் கஷ்டமேதுமில்லை. ஏனெனில் இறைவனின் விஸ்வரூபத்தை ஞானக்கண்ணால் பார்க்கும் அர்ஜுனன், எங்கும், எதிலும், எப்பொழுதும் இந்த உலகில், இருப்பதும், நடப்பதும் அனைத்தும் இறைவனே என்று பார்க்கிறான். இதுவே உண்மை ஞானியின் பார்வை. எனவே ஞானக்கண் என்பது அறிவப்பூர்வமான பார்வை என்றே பொருள்படும்.

இதேபோல் சஞ்சயனுக்கு வியாசர் ஞானக்கண்ணைக் கொடுத்தார் என்றால், போர் நிலவரங்களை உடனுக்குடன் அரசனுக்குச் சொல்லும்படி, அமைச்சன் தயார் நிலையில் இருக்க வேண்டும் என்பதற்கான விபரங்களை விளக்கமாக சஞ்சயனுக்கு வியாசர் உபதேசித்தார் என்பதே பொருள்.

இதன் படி புத்தி பூர்வமாக சஞ்சயன் பல ஒற்றர்களின் மூலமாக போர்க்களச் செய்திகளை உடனுக்குடன் அறிந்து மன்னனுக்குச் சொன்னான் என்பதே உண்மை. ஆகவே ஞானக்கண் என்பது ஏதோ மந்திரமோ மாயமோ அல்ல என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

சஞ்சயன் திறமையான ஒற்றர்களின் மூலம் எப்படிச் செயல்பட்டான் என்பதை சத்ரபதி சிவாஜியின் வாழ்க்கையில் நடந்த சம்பவத்தின் மூலம் புரிந்து கொள்ளலாம்.

டெல்கி அருகில் பந்தேல்கண்ட் என்று ஒரு ராஜ்ஜியம். இதன் இந்து ராஜாவின் பெயர் சத்ரசால். இவர் ராஜ்யத்தை அபகரிக்க நினைத்த அவுரங்கசீப் சத்ரசாலை ஆக்ராவுக்கு அழைத்து நிர்பந்தம் கொடுக்க முயன்றான். அவுரங்கசீப்பின் நிர்ப்பந்தங்களுக்குப் பணியாத சத்ரசால் ஆக்ராவில் இருந்து அவுரங்கசீப்பின் கட்டுப்பாட்டை மீறி தப்பியோடி நேராகப் பூனாவிலிருந்த சிவாஜியைப் பார்க்க வந்தார்.

சத்ரசாலை வரவேற்றபோது சிவாஜி சொன்ன

விபரங்கள் சத்ரசாலை மிகுந்த ஆச்சர்யத்துக்குள்ளாக்கியது. சிவாஜி சொன்னார், "ஆக்ராவில் நடந்ததனைத்தும் அறிவேன்: நீ அவுரங்கசீப்பை எதிர்த்துப் பேசி பணிய மறுத்தது. பின் தப்பி வந்தது அனைத்தையும் அறிவேன்" என்றார்.

சிவாஜயின் ஒற்றர்கள் எவ்வளவு திறமையானர்வர்களாகவும், வேகமுடையவர்களாகவும் இருந்திருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்ட சத்ரசால் சிவாஜியின் மீது முன்னிலும் அதிகமாக மரியாதை கொண்டான்.

இங்கு ஆக்ராவில் நடந்தவற்றை சிவாஜி பூனாவிலிருந்து கொண்டே பார்க்க முடிந்ததென்றால், அது அவர் அறிவு பூர்வமாக ஏற்பாடு செய்திருந்த ஒற்றர் படையால் மட்டுமே முடிந்தது. அவருடைய ஒற்றர் படை தான் சிவாஜியின் ஞானக்கண்ணாக விளங்கியது.

**கீதை கொலை நூலா?**

ஆம். கீதை போர் செய்யத் தூண்டிய நூல் தான். அதர்மத்தை அழிக்க, தர்மத்தைக் காக்க போர் செய்ய வேண்டியது இந்த உலகியல் வாழ்க்கையில் தேவை தான். ஆகவே உலகியல் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறவர்களுக்குப் போர் தவிர்க்க முடியாதது.

போர் செய்யத் தேவையில்லாதவர்கள் ஞானிகளும், சந்நியாசிகளும் மட்டுமே. ஏனென்றால் இவர்கள் உலகியல் வாழ்வில் இருந்து விடுபட்டவர்கள்.

கண்ணன் ஞானி. ஆகவே அவர் போரில் நேரடியாகக் கலந்து கொள்ளவில்லை.

உலகியல் தர்மம் காக்கப்பட வேண்டும் என்று, உலகவாழ்வில் மூழ்கி இருப்பவர்களுக்காக அவர் ஆலோசனையும் உற்சாகமும் கொடுத்தார்.

"யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய ந லிப்யதே/
ஹத்வாபி ஸ இமான் லோகாந் ந ஹந்தி ந நிபத்த்யதே//"

கீதை 18:17

நான் செய்கிறேன் என்கிற எண்ணம் யாருக்கு இல்லையோ, யாருடைய மனம் பற்றற்றதோ, அவன் இந்த உயிர்களனைத்தையும் கொன்றாலும், கொன்றவன் ஆகமாட்டான். அந்த செயலால் வரும் பலனாகிய பாபங்களால் அவன் பந்தப்படுவதுமில்லை.

இதே கருத்தை கீதை ஸ்லோகம் 4-22ம் சொல்கிறது.

ஆக ஞானி நிலையில், அல்லது அனைத்தையும் கடந்த பக்குவ நிலையில் கண்ணன் இருந்ததால் இந்த ஸ்லோகத்தின் முழுப் பொருளுக்கும் ஏற்புடையவராகக் கண்ணன் இருந்தார்.

நம் போன்றவர்களும் இந்த நிலையை அடைய முடியும். அதற்கான வழிகாட்டிதான் கீதை.

அரைக்காசுப் பிரச்சனையில் ஆயிரம் கொலைகளைச் செய்யத் தயங்காதவர்களெல்லாம், கீதையைக் கொலை நூல் என குற்றம் சாட்ட வருவது தான் வேடிக்கை.

ஆத்மா அழிவற்றது என்று போதிக்கும் கண்ணனுக்கு உடல் அழிந்து போவது கொலை என்று எப்படி படும்?

போர் என்று வந்துவிட்டால் பின் வாங்காமல் தர்மம் காக்க போர் செய் என்பதே கீதையின் உபதேசம்.

**பாண்டவர்கள் பக்கம் நியாயம் உண்டா?**

நிச்சயம் உண்டு. பெரியோர்கள் அனைவரும் சேர்ந்து தான் தருமனை இளவரசனாக்கி, பின்னால் இந்திரப்பிரஸ்தம் (இப்போதைய டெல்லி) பகுதியில் பாகம் பிரித்து கொடுத்தனர்.

காட்டை நாடாக்கியது மட்டுமல்லாமல் தம்பியரின் துணையினால் தருமன் ஒரு புதிய சாம்ராஜ்யத்தையே உருவாக்கினான்.

சூதாட்டத்தில் துரியோதனன் பறித்துக் கொண்டது பாண்டவர்கள் உருவாக்கிய புதிய சாம்ராஜ்யத்தைத்தான் என்பதால் வனவாசம் முடிந்து திரும்பிய பிறகு, அவர்களுடைய நாட்டை அவர்கள் திருப்பிக் கேட்டதில் எந்தத் தப்பும் இல்லை.

**பாண்டவர்களை அதர்மப் போரில் கண்ணன் ஈடுபடுத்தினாரா?**

தர்மத்தை நிலைநாட்ட முயலும் போது அதர்மிகள் அழிக்கப்பட்டே ஆக வேண்டும்.

அமைதியை நிலைநாட்டும் போது கொலைகாரர்களையும், பயங்கரவாதிகளையும், திருடர்களையும் தண்டித்தேயாக வேண்டும்.

கொலைகாரன் என்று முத்திரை குத்தித் தண்டனை வழங்கப்பட்ட பிறகு, அவனை மின்சாரத்தில் கொன்றால் என்ன? அல்லது தூக்கில் போட்டால் என்ன?

துரியோதனாதியர்கள் அதர்மிகள்: அழிக்கப்பட வேண்டியவர்கள் என்று முடிவு கட்டிய பிறகு போர்க்களத்தில் ஒப்பாரி எதற்கு?

விளையாட்டுகளில் நியதிகள் கடைபிடிக்க வேண்டியது நியாயம். ஏனென்றால் இரு தரப்பும் நியதி தவறாமல் விளையாடும் நிர்பந்தம் இருக்கிறது.

நல்லவனுக்கும் தீயவனுக்கும் போர் நடக்கும் போது நல்லவன் மட்டும் நியதிகளைக் கடைபிடிக்க வேண்டும். தீயவர்கள் எப்படி வேண்டுமானாலும் போர் செய்யலாம் என்று

யாராவது சொன்னால், இப்படிச் சொல்கிறவன் தீயவனின் கையாள் என்று புரிந்து கொள்வதில் சிரமமிருக்காது.

போர் என்பதோ படை என்பதோ என்ன என்பதே தெரியாத, சினிமாவுக்கு மட்டும் கதையும் வசனமும் எழுதத் தெரிந்தவர்களுக்குப் போர்க்கள நியாயங்கள் பற்றிப் பேசுவதற்கு எந்தத் தகுதியும் கிடையாது.

இந்த அடிப்படையில் மகாபாரதக் கதை சம்பந்தமாக திரு. வீரமணி எழுப்பியுள்ள அத்தனை சந்தேகங்களுக்கும் நாம் அறிவு பூர்வமான பதில்களைக் கொடுக்க முடியும்.

சரி இனி கீதைக்குள்ளே புகுவோம்.



# 5. கீதையின் முதல் அத்தியாயம் அன்றைய சமுதாயத்தை விளக்கும் கண்ணாடி

**கண்ணனின் காலம்**

கீதையின் காலம் பற்றி அதிகமாகவே ஆராய்ச்சியாளர்கள் என்று சொல்லிக் கொண்டவர்கள் குழப்பமடைந்து இருக்கிறார்கள்.

திரு. வீரமணியின் புத்தகத்தில் ஆராய்ச்சியாளர்கள் என்ற பெயரால் சுட்டிக்காட்டியிருப்பவர்கள் அனைவருமே ஒன்றிலோ கடவுள் இல்லை என்னும் கொள்கையுடையவர்கள், அல்லது கம்யூனிஸ்டுகள், அல்லது இந்து மதத்தின் வளர்ச்சியால் கிறிஸ்து மதம் பாதிக்கப்பட்டு விடும் என்று அஞ்சிய ஐரோப்பியர்கள்.

ஆகவே அவ்வாராய்ச்சியாளர்களுடைய கண்ணோட்டம் அத்தனையுமே ஒரு தலைப்பட்சமானதும், காழ்ப்புணர்ச்சி கொண்டவையும் தான்.

மத ஈடுபாடில்லாத சரித்திர ஆராய்ச்சியாளர்கள் வேதத்தின் கர்ம காண்டம் தோன்றிய காலத்தை, கி.மு.6000 ஆண்டுகளுக்கும், உபநிடதங்கள் தோன்றிய காலத்தை கி.மு.4000 ஆண்டுகளுக்கும், கீதை தோன்றிய காலத்தை கி.மு.3000 ஆண்டுகளுக்கும் என்று சற்றேறக்குறைய கணிக்கிறார்கள்.

இந்தியாவின் வரலாற்றைக் குறிப்பதற்கு, புராணங்களிலும், ஜோதிட வானியல் சாஸ்த்திரங்களிலும், போதிய ஆதாரங்கள் இருந்த போதிலும் இவற்றை நம்ப முடியாது என்று ஒதுக்கித் தள்ளிய ஆங்கிலேயர்கள் இந்துக்களின் நாகரிக காலத்தைப் பின்னுக்குத் தள்ள எல்லா முயற்சிகளிலும் ஈடுபட்டனர்.

ஆனாலும் கூட வானசாஸ்திர, ஜோதிட மற்றும்

கல்வெட்டுக் குறிப்புகள் மகாபாரதப் போர் நடந்தது இன்றிலிருந்து 5000 ஆண்டுகளுக்கு முன் அதாவது கி.மு.3000ல் என்று சரியாக உறுதி செய்திருக்கின்றனர்.

மகாபாரதப் போர் முடிந்து 36 ஆண்டுகள் கழித்து கலி சகாப்தம் தொடங்கியதும் உறுதி செய்யப்பட்டிருக்கிறது.

இன்னும் கீதை புத்தருக்கு முந்தையது என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

உபநிடதக் கொள்கைகள் சரியாகப் பரப்பப்படாமல், ஜாதி பிராமணர்களின் கர்ம காண்ட யாகங்களும், மனுதர்ம சாஸ்த்திரத்தின் ஜாதிப் பிரிவினையும் கோலோச்சி தாண்டவமாடிய காலத்தில் தான் பகவத்கீதை அவற்றிற்கு எதிராகத் தோன்றி, அன்றிருந்த ஜாதி அமைப்பை அறிவு பூர்வமாக மாற்றி அமைத்திட முயன்றது, என்பதும் கீதையின் முதல் அத்தியாயத்திலிருந்து தெளிவாக விளங்குகிறது.

கீதையின் முதல் அத்தியாயத்தில் அர்ஜுனன் கேட்கும் கேள்விகள் எல்லாமே அந்த கால சமூக அமைப்பை நம் கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்துகின்றன.

கண்ணனின் காலம் பற்றி சுவாமி விவேகானந்தர் மிகுந்த ஆராய்ச்சிக்குப் பின் செல்வது கவனிக்கத்தக்கது. அவர் சொல்கிறார்,

"கண்ணனது மகத்தான செயல்திறனின் சுவடு இன்னும் அழியாமல் இருக்கிறது. ஐயாயிரம் ஆண்டுகள் கழிந்து விட்டன. கோடிக்கணக்கான மக்களின் மீது இன்றும் அவரது தாக்கம் இருக்கிறது. பரிபூரணமாகத் தெரிந்த அவரது புத்திக்கு எனது வணக்கங்கள். அந்த மூளையில் ஒட்டடை மண்டிக்கிடக்கவில்லை. மூடநம்பிக்கை இல்லை. ஒவ்வொன்றின் பயனும் அவருக்குத் தெரியும். ஒவ்வொன்றிற்கும் உரிய இடத்தை அளிக்க வேண்டிய

அவசியம் ஏற்படும் போது அவர் வருகிறார். அந்த இதயம் புத்தருக்கு நெடுங்காலத்திற்கு முன்பே மதத்தின் கதவை (அன்றிலிருந்து) ஒவ்வொரு ஜாதிக்கும் திறந்து வைத்த முதல் மனிதர் அவர்.

ஆக கண்ணன் புத்தருக்கும் நெடுங்காலம் முந்தியவர் என்பது தெளிவாகிறது. விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால், கண்ணன் வாழ்ந்தது கி.மு.3000: புத்தர் வாழ்ந்தது கி.மு.450.

திரு.வீரமணி சொல்வது போல் புத்தரின் போதனையால் பிராமணீயம் அழிந்தபோது, அவர்களது ஜாதிக் கொள்கையைத் தூக்கி நிறுத்தவே கீதை தோன்றியது என்ற கருத்து இரண்டு காரணங்களால் ஏற்புடையதல்ல.

ஒன்று, புத்தருக்கு நெடுங்காலம் முந்தியவர் கண்ணன்.

இரண்டு, பிராமணீயத்தின் ஜாதிக் கொள்கையைக் காப்பாற்ற அல்ல, அதை உடைத்தெறியவே கண்ணன் புத்தருக்கு முன்னால் தோன்றினார்.

கண்ணன் வாழ்ந்த கால கட்டமும், மகாபாரதப் போர் நடந்த ஆண்டும் மிகத் துல்லியமாக இந்து சரித்திர ஆராய்ச்சியாளர்கள் மறுக்க முடியாத ஆதாரங்களோடு நிருபித்துள்ளார்கள்.

அவற்றில் ஒன்று இதோ,

1200 ஆண்டுகள் பழமையான ராஜஸ்தானில் உள்ள ஜெய்சால்மர் கோவிலில் ஒரு கல்வெட்டு உள்ளது. அதில் இந்த கோவில் யுதிஷ்டிரர் (தரும புத்திரன்) பட்டம் கட்டிக் கொண்ட 3898 ஆண்டுகளுக்கு பின்னாலும், விக்ரம சகாப்தம் 1719 ம் கட்டப்பட்டது என்று உள்ளது.

அந்த மாதிரியான கல்வெட்டு, வான சாஸ்திரக் குறிப்புகள், காஷ்மீர சரித்திரத்தைச் சொல்லும் கல்கணர்

எழுதிய ராஜதரகங்கிணி போன்ற சரித்திரக் குறிப்புகள் ஆகிய அத்தனை ஆதாரங்களும் மகாபாரதப் போர் இன்றிலிருந்து (கி.பி.2004 ல் இருந்து) 5108 ஆண்டுகளுக்கு முன்னால் நடந்தது என்று துல்லியமாக குறித்துள்ளன.

ஆகவே திரு. வீரமணி சொல்லி வருவதுபோல் மகாபாரதப் போர் பொய்யானதோ அல்லது கண்ணனது காலம் புத்தருக்குப் பிந்தியதோ அன்று.

ஐயா, கீதை என்று ஒன்று இன்று இருக்கிறததல்லவா, அதை ஆக்கியவன் ஒருவன் இருந்திருக்க வேண்டுமல்லவா? அவன் தான் கண்ணன்.

**அன்றைய சமுதாய நிலை**

அர்ஜுனன் சொல்கிறான், "கண்ணா! போரில் ஆண்களெல்லாம் இறந்து போவார்கள். குலமும், காலம் காலமாக பாதுகாக்கப்பட்டு வரும் குலதர்மமும் அழிந்து போகும். குலம் அழிகின்ற போது பெண்கள் கற்பை இழந்து விடுவார்கள். இதனால் ஜாதிக்கலப்பு உண்டாகி விடும். ஜாதிக் கலப்பினால் குலத்தை அழித்தவருக்கும் குலத்தினருக்கும் நரகமே கிடைக்கும். அவர்கள் நரகத்தில் நெடுங்காலம் வாழ வேண்டி வரும் என்று கேள்விப்பட்டிருக்கிறோம்."

(கீதை 1 : 40 முதல் 44 வரை)

அர்ஜுனனுடைய அந்த வார்த்தைகளில் இருந்து அவன் வாழ்ந்த அன்றைய சமுதாயத்தில் ஜாதி இருந்தது என்றும், இந்த ஜாதிகள் ஒன்றோடொன்று கலந்துவிடாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும், அப்படி கலந்து விட்டால் குலம் அழிந்து விடும் என்றும், குலத்தினர் நரகத்துக்குள் போவார்கள் என்றும் அர்ஜுனன் போதிக்கப்பட்டிருக்கிறான் என்பது அப்பட்டமாகத் தெரிகிறது.

ரிக் வேதம் கர்ம காண்டம் 10 - வது மண்டலத்தில்

வரும் புருஷ சூத்தகத்திலும், மனு தர்ம சாஸ்திரத்திலும் சொல்லப்பட்டிருப்பது போன்ற அதாவது பிராமணன் பிரம்மாவின் வாயிலிருந்தும், சத்ரியன் தோளிலிருந்தும், வைசியன் வயிறு அல்லது தொடையிலிருந்தும், சூத்திரன் கால்களிலிருந்தும் தோன்றினர் என்பதும், இவர்களில் பிராமணன் எல்லோரிலும் உயர்ந்தவன் என்றும் சொல்லப்பட்ட ஜாதிமுறையே அப்பொழுது இருந்தது தெரிகிறது.

அந்தக் காலகட்டத்தில் மனுநீதியால் உருவாக்கப்பட்ட ஜாதிக் கொடுமையை நினைத்து தான் அர்ஜுனன் மிகுதியும் பயப்படுகிறான். குலத்தை அழித்தவன் மாண்டு போவான் என்று சொல்வதோடு விட்டிருந்தால் கூட பரவாயில்லை. அவனும் அவனது குலமும் நெடிது நாள் நரகத்தில் கிடந்து உழல வேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பது யாரையும் பயமுறுத்தத்தான் செய்யும். அது மட்டுமல்லாமல் இறந்து போன முன்னோர்களும் கூட அவர்கள் சென்ற இடத்தில் பராமரிப்பு இல்லாமல் கஷ்டப்படுவார்களாம்.

இப்படிப்பட்ட பயங்கர அச்சுறுத்தல்கள் அத்தனையும் ஜாதிகள் ஒன்றோடொன்று கலந்து விடுவதால் உண்டாகிவிடும் என்று சொல்கிறார்களே என்று அர்ஜுனன் பயப்படுகிறான்.

அதாவது ஒரு ஜாதிக்கும் இன்னொரு ஜாதிக்கும் இடையில் இவ்வளவு பெரிய வேறுபாடு அன்றைய காலகட்டத்தில் இருந்தது என்பதையே அர்ஜுனனின் சந்தேகங்கள் நிரூபிக்கின்றன. இப்படிப்பட்ட கொடுமையான ஜாதிச்சட்டங்கள் இருந்த கால கட்டத்தில் தான் கண்ணன் தோன்றி கீதையைச் சொல்கிறார்.

அர்ஜுனனுக்குப் பதில் சொல்லத் துவங்கியக் கண்ணன், அர்ஜுனனது சந்தேகங்களும், கவலைகளும் நியாயமானவை என்று ஏற்றுக் கொள்ளவில்லை.

ஜாதிக்கலப்பு உண்டாகுமானால் எல்லோரும்

நரகத்துக்குப் போவார்கள் என்றோ, ஏற்கனவே இறந்து போனவர்கள் கூட நரகத்தில் தொடர்ந்து கிடந்து உழல்வார்கள் என்றோ சொல்லவில்லை.

மாறாக அந்த காலகட்டத்தில் இருந்த ஜாதி சம்மந்தப்பட்ட கர்ம காண்ட மற்றும் மனு நீதிக் கொள்கைகள் அத்தனையையும் சம்மட்டியால் அடித்து உடைத்தெறிகிறான் கண்ணன்.

கீதையின் முதல் அத்தியாயத்தில் ஏழாவது பாடலில் த்விஜோத்தமா' என்று துரோணரை துரியோதனன் விளிக்கிறான். த்விஜோத்தமா என்பது உத்தமமான பிராமணரே என்று அர்த்தம்.

துரோணர் பரத்வாஜர் என்ற முனிவருடைய மகன். அன்றைய கால கட்டத்தில் பரத்வாஜர் பிராமணஜாதி என்று அழைக்கப்பட்டதால் அவருடைய மகனான துரோணரையும் அர்ஜுனன் பிராமணரே என்று அழைக்கிறான்.

ஆனால் துரோணர் என்பவர் ஆரம்பத்தில் இருந்தே இளவரசர்களுக்குக் போர்கலையைக் கற்பிப்பவராகவும். குருச்சேத்திர போர்க்களத்தில் ஒரு பெரும் தளபதியாகவும் செயல்படுகிறவர்.

துரியோதனன் வாயினால் பிராமணரே என்று அழைக்கப்பட்ட பிறகும், கீதை முழுவதிலும் துரோணரை மட்டுமல்லாது வேறு எந்த பிராமணர்களையும் கண்ணன் ஜாதி பிராமணர்களாகச் சொல்லவே இல்லை என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

ஒட்டுமொத்த சமுதாயத்திலிருந்தும், பிராமண ஆதிக்கத்தை துடைத்தெறிவதற்காகவும், அறிவு பூர்வமான விஞ்ஞான அடிப்படையில் மக்களின் மனதை ஆராயவும், வாழ்க்கையின் உயர்வு தாழ்வுகளை ஒவ்வோர் மனிதனும்

எவ்வாறு எதிர்கொள்ள வேண்டும் எனவும் கண்ணன் தனது கொள்கைகளை கீதையில் விளக்குகிறார்.

கண்ணனின் இந்த அற்புதமான தூய சிந்தனைகளுக்குத் தவறான விளக்கமளித்த அதே பழைய காலத்து மனுவாதி (நீதி) பிராமணர்கள் மறுபடியும் இந்து சமுதாயத்தைத் தங்களது ஆதிக்கத்துக்குள் வைத்துக் கொள்ளவே முயலுகின்றனர்.

கண்ணனின் தெளிவான சிந்தனைகளைக் கூட இவர்கள் தங்களது ஜாதி ஆதிக்கத்தால் மாசுபடுத்தி விஷமாக்கி வருகின்றனர்.

இன்றும் கூட கீதைக்குப் பொருள் சொல்லும் ஜாதி பிராமணர்களும், அவர்களது ஆதிக்கத்திற்குட்பட்டவர்களும், அர்ஜுனன் காலத்துக் கர்ம காண்ட பிராமண ஆதிக்கத்தையே முன்னிறுத்தி கீதைக்குப் பொருள் சொல்லுகின்றனர்.

அப்படிச் சொல்லி வருவதோடு மட்டுமல்லாமல் அவர்களது ஆதிக்கத்தையும் சமுதாயத்தில் நிலை நிறுத்தி வ்ருகிறார்கள்.

இன்றும் கூட மக்களால் பெரிதும் பாராட்டப்படும் நிலையிலுள்ள வினோபா பாவே, சுருதி சேவாஸ்ரமத் தலைவர் தயானந்த சுவாமி, பிர்லா உதவியோடு செயல்படும் கோரக்பூர் கீதா பிறஸ், ஹரே கிருஷ்ணா இயக்கத் தலைவர் ஆகியோர் கீதைக்குப் பொருள் சொல்லும்போது குலத்தையும், தொழிலையும் போட்டுக் குழப்பி ரிக் வேத கர்ம காண்ட காலத்து ஜாதி வெறியையே நிலை நாட்டி வருகின்றனர். (இவர்கள் என்னென்ன சொல்கிறார்கள் என்பதைப் பின்னால் பார்ப்போம்)

ஆனால் இந்த மனுவாதி ஆதிக்கத்துக்கு அடிமையாகாத சுவாமி சித்பவானந்தரும், சுவாமி

சின்மயானந்தரும் கண்ணன் கொண்டு வந்த சீர்திருத்தத்துக்குச் சரியான விளக்கம் கொடுத்து நம்மைப் புரிந்துகொள்ள வைக்கிறார்கள்.

டாக்டர். ராதாகிருஷ்ணன், ஸ்ரீராமானுஜாச்சாரியார், ராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த சுவாமி ஆசுதோஷானந்தர் போன்றோரும் கண்ணனின் கருத்தை கீதைக்குப் பொருள் சொல்வதன் மூலம் சரியாக பிரதிபலிக்கின்றனர்.

இப்படி அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சரியான பொருள் சொன்னவர்கள் இருந்தாலும் கூட கீதையின் கருத்தில் விஷத்தைக் கலந்த மனுநீதி ஜாதிப் பிரச்சாரமும் மேலோங்கி இருந்ததால் சமுதாயத்தில் தீண்டாமையும் மற்ற கொடுமைகளும் தலைவிரித்தாடின.

**ஒரு உதாரணம் பார்ப்போம்.**

பிறப்பால் வருவதில்லை வர்ணம் என்பது கீதை கொள்கை.

அதே போல குலத்தால் வருவதில்லை தொழில், என்பதும் கீதையின் அசைக்க முடியாத கொள்கை.

சூத்திரன் என்ற பெயரில் ஒரு ஜாதி, அதாவது பிறப்பால் வந்த குலம் கிடையாது. வைசியன் என்ற பெயரிலும், சத்ரியன் என்ற பெயரிலும் ஒரு ஜாதியும் குலமும் கிடையாது.

ஆனால் பிராமணன் என்று கீதையில் சொல்லப்பட்ட வர்ணத்துக்கு மட்டும், பிராமண ஜாதி என்று ஒன்றை நடைமுறையில் வைத்துக் கொண்டனர்.

பிறப்பால் அப்பனுக்கு மகன் என்று பரம்பரையாக வருவதல்ல வர்ணம் என்ற கண்ணனின் கீதைக் கருத்துக்கு மாறாக இவர்கள் பரம்பரையாக வரும் தங்களது ஜாதிக்கு பிராமண ஜாதி என்று பெயர் வைத்துக் கொண்டனர்.

இதனால் என்னவாயிற்று?

பிறப்பால் பரம்பரையாக் வருவது அல்ல. வர்ணம் என்ற கீதையின் கருத்து சாதாரண மக்கள் மத்தியில் எடுபடாமல் போய், கண் முன்னால் பார்க்கும் பிராமண ஜாதி என்று சொல்லிக் கொண்ட, உபநயனம் செய்து பூணூல் போட்டுக் கொண்டவனையே பிராமணன் என்று ஏற்றுக் கொள்ளும் நிலை உண்டாயிற்று.

கீதையில் சொல்லப்படும் பிராமணனுக்கு உண்டான குணங்கள் மற்றும் தொழில்கள் அனைத்துக்கும் நாங்கள் தான் சொந்தக்காரர்கள் என்று இந்த ஜாதி பிராமணர்கள் உரிமை கொண்டாடியதால் சாதாரண மக்கள் கீதை சொல்லும் பிராமணர்கள் இவர்கள் தான் போலும் என்று நினைத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள்.

இதற்கு வசதியாக, சமஸ்கிருதத்தில் இருந்த பகவத்கீதையை ஜாதி பிராமணர்களாக இருந்தவர்கள் மற்ற யாரையும் படிக்க அனுமதிக்கவில்லை. அப்படி மீறி யாராவது படித்தால் அவனது நாக்கை அறு, காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்று என்று கடும் தண்டனை கொடுத்தனர்.

ஒன்றை மட்டும் நாம் நிச்சயமாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

அது,

பகவத்கீதையைச் சொன்ன கண்ணன், பிரம்மன் வாயிலிருந்து தோன்றிய ஜாதி பிராமணன் என்று தன்னைச் சொல்லிச் கொண்டவரல்ல.

கண்ணனின் கீதையை எழுத்தில் வடித்த வியாசனும் ஜாதி பிராமணன் இல்லை. கீதையைக் கண்ணனிடமிருந்து கேட்ட அர்ஜுனனும் ஜாதி பிராமணனில்லை.

இத்தனை இருந்தும் சாதாரண மக்களால் உருவாக்கப் பட்ட கீதையையே ஜாதி பிராமணர்கள் அபகரித்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் அதற்குக் குதர்க்கமான பொருள் கொடுத்து மக்களையும் ஏமாற்றி விட்டனர்.

உண்மையை உணர்ந்து கொள்ள வேண்டுமானால் கீதையை அதன் மூல மொழியில் நாம் சரியாகக் கற்றுப் பொருளுணர்ந்து பிறருக்கும் சொல்ல வேண்டும்.

திரு. வீரமணி போன்றவர்கள் கீதையை எதிர்ப்பதற்குக் காரணம் உண்டு. முதலாவதாக அவரது "கீதையின் மறுபக்கம்" நூலில் அவர் எடுத்துக்காட்டியிருக்கும் மேற்கோள்கள் அனைத்துமே ஜாதி பிராமணர்கள் சார்புடையோர் சொன்ன கீதை உரைகள் தான்.

இரண்டாவது அவர் கீதை சொல்லப்பட்ட மூல மொழியைப் படித்து ஆராய்ச்சி செய்யவில்லை.

மூன்றாவது அவரைப் போன்றவர்கள், ஜாதி பிராமணர்களின் ஜாதிக் கொள்கையால் கடந்த 5000 ஆண்டுகளாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

**அக்கிரகாரம்**

கடவுளுக்கு முதல் மாலை என்று சொல்லப்படும் அக்கிரகாரம் வீடுகளில் ஆலயத்தை சுற்றி அவர்களது வாழ்க்கை, பக்கத்திலேயே குளம், கோவில், ஓசியிலேயே கோவிலில் மூன்று வேளையும் நெய் வழிய சாப்பாடு, அரசனுக்கு ஆலோசகர் என்ற அந்தஸ்து, கடவுளின் பிரதிநிதி என்ற பெருமை போன்ற சமுதாயத்தின் உச்சாணிக் கிளைகளில் வாழ்ந்தவர்கள் இந்த ஜாதி பிராமணர்கள். படிப்பதும், ஆடுவதும், ஆராய்ச்சி செய்வதும் போன்ற அனைத்து சுகபோகங்களுக்கும் அவர்களே சொந்தக்காரர்களாக இருந்தனர்.

## மற்றவர்கள் நிலை

ஆனால் மற்ற ஜாதியார் என்று சொல்லப்பட்ட, ஜாதி பிராமணன் அல்லாதவர்களுடைய நிலை எப்படி இருந்தது?

சொந்தமாக நிலம் கிடையாது. உழைப்புக்கு ஏற்ற ஊதியம் கிடையாது. உயர் வகுப்பார் தெருவுக்குள் நுழையக்கூடாது. கோவிலுக்குள் நுழைந்து விடவே கூடாது. வேதங்களைப் படிக்கக்கூடாது. சமஸ்கிருதம் படிக்கக்கூடாது. அடிமைத் தொழில் புரிய வேண்டும். காடுகளில் வெகுதூரத்தில் தான் குடியிருக்க வேண்டும். கல்லாலோ மண்ணாலோ வீடு கட்டக் கூடாது; பாதைகளில் நடுவில் நடந்து போகக் கூடாது. எதிரே ஜாதி பிராமணன் வந்தால் அவன் கடந்து போகும் வரை நம் காற்று கூட அவன் பக்கம் வீசி விடாதபடி ஓடி ஒளிந்து கொள்ள வேண்டும். பெண்கள் மார்பில் துணி போட்டு மறைக்கக் கூடாது.

இவை பிராமணரல்லாதார் அனுபவித்த கொடுமைகளில் மிகச்சில.

ஆனால் ஜாதி பிராமணனை அண்டி வாழ்ந்த சில ஜாதியாருக்கு மட்டும் சில சலுகைகள் கிடைத்தன. ஒட்டுண்ணிகளாக வாழ்ந்த இவர்கள், எல்லா அவமானங்களையும் சகித்துக்கொண்டு இவர்களுக்கும் கீழே உள்ள இந்துக்களை தங்களால் முடிந்தவரைக் கொடுமைப்படுத்தி ஜாதி பிராமணர்களிடம் நல்லபெயர் வாங்கினர்.

## மனுநீதி சம்ஹிதைகள் சொல்லும் ஜாதி பிராமணன்

பிள்ளை பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக ஒரு பூணூல் போட்ட (Twice born - இரு பிறப்பாளன்) பிராமணன் சூத்திரப் பெண்ணை மணந்து கொள்ள கூடாது. தன்னுடைய உடல் இச்சையைத் தணித்துக் கொள்வதற்காக

(Satisfaction of his carnal appetites) வேண்டுமானால் சூத்திரப் பெண்ணை மணந்து கொள்ள(வைத்துக் கொள்ள)லாம். ஆனால் அந்தப் பெண்ணுக்கு ஆண் குழந்தை பிறக்குமானால் அதற்கு அப்பனுடைய சொத்தில் எந்த உரிமையும் கிடையாது. (யக்ஞ வல்க்கிய சம்ஹிதை பாட்டு 56)

ஜாதி பிராமணன், பிராமண, சத்திரிய, வைசிய ஜாதிகளில் இருந்து ஜாதிக்கொன்றாக மூன்று பெண்களை மணந்து கொள்ளலாம். (அதே சம்ஹிதை பாட்டு 57)

நான்கு வர்ணங்களாலான பிராமணன், சத்ரியன், வைசியன், சூத்திரன் ஆகியோர் முறையே புருஷனின் (பிரம்மனின்) வாயிலிருந்தும், தோள்களிலிருந்தும், தொடைகளிலிருந்தும், கால்களிலிருந்தும் தோன்றினர். (அதே சம்ஹிதை பாட்டு 126)

பிரம்மன் தனது வாயிலிருந்து பாபம் சிறிதும் இல்லாத பிராமணனையும், தோள்களிலிருந்து சத்ரியனையும், தொடைகளிலிருந்து வைசியனையும் படைத்தார். (ஹரிதா சம்ஹிதை பாட்டு 11 : 12)

பிராமணன் என்பவன் பிராமணனால், பிராமணப் பெண்ணிடம் பிறப்பவன் என்று ஸ்ம்ருதிகள் சொல்கின்றன. (ஹரிதா சம்ஹிதை பாட்டு 15)

பயிற்றுவித்தல், ஆன்மீகப் படிப்பு, பூஜாரியாக இருந்து பலியிடும் விழாக்களை நடத்துதல், பலி தானத்தைக் கொண்டாடுதல், பரிசுகள் கொடுத்தல், வாங்குதல் ஆகிய ஆறு விதமான வேலைகளும் பிராமணனுக்கு உரியவை.

பிறப்பால் ஒருவன் பிராமணனாகிறான். ஸமஸ்காரங்களால் அவன் இரு பிறப்பாளனாக (த்விஜன்) ஆகிறான். படிப்பினால் விப்ரன் ஆகிறான். இம்மூன்றும் சேர்ந்தால் ச்ரோத்ரியன் ஆகிறான். (அத்ரி சம்ஹிதை பாட்டு 140).

பலியிடும் பூஜை செய்யும் பிராமணன் (பலியிட்ட மிருகத்தின்) இறைச்சியை உண்ணவில்லையானால் அவன் தரம் தாழ்த்தப்படுவான். (வியாச சம்ஹிதை பாட்டு 56)

பூஜையில் பலியிடப்படாத எந்த மிருகத்தின் இறைச்சியையும் பிராமணன் சாப்பிட்டால் அவன் பெரும் பாபத்தை அடைகிறான். (வியாச சம்ஹிதை பாட்டு 58)

சூத்திரன் சமைத்த உணவை உண்டு அது வயிற்றிலிருக்கும் போது இறந்து போனால் அந்த பிராமணன் தொடர்ந்து வரும் பண்ணிரண்டு பிறவிகளுக்கு, வெட்டுவதற்காக வீட்டில் வளர்க்கப்படும் பன்றியாகவும், ஏழு பிறவிகளுக்கு நாயாகவும் பிறப்பான் என்று மனு சொல்கிறார். (வியாச சம்ஹிதை பாட்டு 65)

பசுவை பலியிடுவதும், காளை மற்றும் குதிரையைப் பலியிடுவதும், பலி தான உணவை தயாரிப்பதும் ஸ்ராவண மாத முழு நிலவு நாளில். (காத்யாயனசம்ஹிதை பாட்டு 1 : 2)

இன்னொரு புத்தகத்தில் பசுவைப் பலியிடுவது மார்க பாலையா நாளிலும், குதிரையைப் பலியிடுவது நிராஜனா நாளிலும் என்று சொல்லப்படுகிறது. (காத்யாயன சம்ஹிதை பாட்டு 8)

கொலை (பலியிடுதல்) செய்யும் போதோ, பரிசு பெறும் போதோ அல்லது வரவேற்பில் செல்லும் போதோ சுத்தமாக இருக்க வேண்டும். (பராசர சம்ஹிதை பாட்டு 28)

அறுகம்புல்லினால் இடுப்பில் கயிறு போல் கட்டிய பிறகு (கோவணம் கட்ட பயன்படும் அரைஞாண் கயிறு - மௌஞ்சி பந்தனம்) பிராமணன் இரு பிறப்பாளனாக (த்விஜன்) மாறுகிறான். (யக் ஞ வல்கிய சம்ஹிதை பாட்டு 39) இதுவே பிற்காலத்தில் தோளை சுற்றிப் போடும் பூணூலாக மாறி விட்டது.

பருத்தி நூலில் மூன்று இழைகள் பிராமணனுக்கும், சணல் நாரினால் சத்ரியருக்கும், ஆட்டு மயிரினால் வைசியனுக்கும் பூணூல் போட்டுக் கொள்ள அனுமதிக்கப்பட்டது. (உசான சம்ஹிதை பாட்டு 6)

ஒரு சூத்திரன் மற்ற மூன்று வர்ணத்தவருக்கும் ஊழியம் செய்ய வேண்டும். குறிப்பாக பிராமணனுக்கு வேலைக்காரனாக வேலை செய்ய வேண்டும். (ஹரிதா சம்ஹிதை பாட்டு 22)

சூத்திரன் கிழிந்து போன கந்தல் துணியை உடுக்க வேண்டும். பிராமணன் உண்டு மிச்சம் வைத்த எச்சிலைத்தான் உண்ண வேண்டும். தன் மனைவியைத் தவிர வேறொருவன் மனைவியிடம் இன்பம் அடையக் கூடாது. இந்த வேலைகளைச் சூத்திரன் தனது மனம், பேச்சு, செயல்களினால் (முழு மனதோடு) செய்யவேண்டும்.



# 5. சாதுர் வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்

"சாதுர் வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குண கர்ம விபாசக : /
தஸ்ய கர்த்தாரமபிமாம் வித்ய கர்த்தார மவ்யயம் //

கீதை 4 : 13

கீதையின் இந்த ஸ்லோகம் தான் எல்லா வித தாக்குதலுக்கும் உள்ளாகிக் கொண்டிருக்கிறது.

இந்த ஸ்லோகத்தையும் 18 - ம் அத்தியாயத்தில் வரும் 42, 43, 44 ஆகிய ஸ்லோகங்களையும் உள்ளடக்கிப் பொருள் சொல்லி அவரவர்கள் தங்களுக்குத் தேவைப்படுகின்ற கருத்துக்களை உரை என்கின்ற பெயரில் எழுதி வைத்திருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| சாதுர் | - | நான்கு |
| வர்ண்யம் | - | வர்ணப்பிரிவுகள் |
| மயா | - | என்னால் |
| ஸ்ருஷ்டம் | - | ஏற்படுத்தப்பட்டன |
| குண | - | குணம் |
| கர்ம | - | மற்றும் செயல் |
| விபாகச : | - | வேறுபாட்டிற்கு ஏற்ப |
| தஸ்ய | - | அதற்கு |
| கர்த்தாரம் அபி | - | கர்த்தா எனினும் |
| மாம் | - | என்னை |
| வித்தி | - | அறிவாயாக |
| அஹர்த்தாரம் | - | செயலில் ஈடுபடாதவன் |
| அவ்யயம் | - | மாற்றம் இல்லாதவன் (என்றும்) |

"குணம் மற்றும் செயல்களின் வேறுபாட்டிற்கு ஏற்ப நான்கு வர்ணங்களை நான் படைத்தேன். இதை நானே செய்தேன், என்றாலும் நான் செயலில் ஈடுபடாதவன் என்றும் மாறாதவன் என்றும்ட அறிவாயாக"

இது தான் ஸ்லோகத்தின் நேரடியான பொருள்.

இந்த ஸ்லோகத்தின் முதலடிக்குண்டான விரிவான பொருளை மட்டும் இப்போது பார்ப்போம்.

உலகில் பிறந்துள்ள ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனியான குணங்களே உள்ளன. சற்றும் வேறுபாடு இல்லாத ஒரே குணமுடைய இரு நபர்களைக் கண்டு பிடிப்பது இயலாத காரியம்.

ஆக, குணத்தின் அடிப்படையில் மக்களுக்குள் வேறுபாடுகள் உண்டு என்பதில் எந்த மாற்றுக் கருத்தும் இல்லை.

இப்படி பல்லாயிரம் வேறுபாடுகள் உள்ள மக்களைக் கண்ணன் அவர்களது குணத்தின் அடிப்படையில் வெறும் நான்கே பகுதியாகப் பிரிக்கிறார். ஒவ்வொரு பகுதிக்குள்ளே இருப்பவர்களுக்கிடையே கூட வேறுபாடுகள் இருக்கும் என்றாலும் பொதுப்படையாகக் கண்ணன் நான்காக மட்டும் பிரிக்கிறார்.

இந்தப் பிரிவுக்கு ஒரு தகுதி, குணம்.

இன்னொரு தகுதியையும் கண்ணன் இந்தப்பிரிவுகளுக்குக் கொடுக்கிறார். அந்தத் தகுதி, செயல்பாடுகள்.

ஒரு மனிதன் செய்வது போன்று அச்சு அசலாக இன்னொரு மனிதன் செயல்படுவதில்லை.

ஆக செயல்படுவதிலும் பல வேறுபாடுகள் இருந்தாலும் அவர்களையும் அந்த நான்கு பகுதிக்குள்ளே கண்ணன் அடக்குகிறார்.

எத்தனையோ வேறுபாடுகள் உள்ள போதிலும் ஏன் நான்கு பிரிவாக மட்டும் கண்ணன் பிரிக்க வேண்டும்?

இதற்குக் காரணம் இருக்கிறது.

மக்களை இப்படி பல பிரிவுகளாகப் பிரித்து சந்தோஷப்பட வேண்டும் என்பது கண்ணனின் நோக்கமல்ல.

கண்ணன் தோன்றுவதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே ரிக் வேதத்தின் கர்ம காண்ட காலத்திலிருந்தே மனிதர்களை, பிரம்மாவின் முகத்திலிருந்தும், தோள், தொடை, கால்களிலிருந்து பிறந்தவன் என்றும் நான்காகப் பிரித்து விட்டார்கள்.

பிரித்து வைத்தது மட்டுமல்ல, ஒவ்வொரு ஜாதியும் பரம்பரை பரம்பரையாக அப்பனுக்குப் பிள்ளை, பேரன் என்று தான் வருவார்கள் என்றும் மனுநீதி என்ற சும்ஹிதையில் எழுதி வைத்து விட்டார்கள்.

வெறுமனே எழுதி வைத்ததோடும் விடவில்லை.

சூத்திரன் என்பவன், பிராமணன் சாப்பிட்டு வைத்த எச்சிலைத்தான் சாப்பிட வேண்டும் என்பன போன்ற கொடுமைகளை சமுதாயத்தில் உருவாக்கி விட்டனர்.

பிறப்பின் அடிப்படையில் பரம்பரையாக வந்து கொண்டிருந்த இந்த ஜாதி முறை அறிவுக்கும், விஞ்ஞானத்துக்கும் ஏற்புடையதல்ல என்று கண்ணன் கண்டார்.

மனிதர்களிடம் வேறுபாடுகள் இருக்கின்றன. ஆனால் அது பரம்பரையாக வரும் பிறப்பினாலல்ல.

ஒரே தகப்பனுக்கு பிறந்த நான்கு பிள்ளைகள் நான்கு விதமான குணநலன் உடையவர்களாக இருக்கிறார்கள்.

பல நேரங்களில் தகப்பனின் குணத்திற்கும் மகனின் குணத்திற்கும் மிகப்பெரிய வேறுபாட்டுடன் குடும்பங்கள் அமைகின்றன.

இன்னும் சொல்லப் போனால் ஒரே குடும்பத்தைச்

சார்ந்த இரத்தபந்தமுள்ளவர்கள் ஒன்றாக சேர்ந்து நடத்தும் அமைப்புகள் குழப்பமுடையவைகளாகவே அமைகின்றன.

ஆக குணம் என்பது அப்பனிடமிருந்து பிள்ளைக்குப் பரம்பரையாக வருவது இல்லை.

இப்படி அப்பனுக்கும் பிள்ளைக்கும் வேறு வேறு குண நலன்கள் அமையும் போது அவர்கள் இருவரையும் சேர்த்து ஒரே ஜாதி என்று அமைத்து வைத்தது தவறு என்பது தான் கீதை சொல்லும் உண்மை.

**இதன்படி பார்க்கும் போது மனிதனைக் கண்ணன் பிரித்த வர்ணம் என்பது, பரம்பரை அடிப்படையில் இல்லை என்பதும், அவர்களது குணநலன்களின் இயல்புக்கு ஏற்ப அவர்களுடைய பிறப்பு எங்கு வேண்டுமானாலும் அமையும் என்பதும் புரியும்.**

உதாரணமாக மிகச்சிறந்த பண்பும், அறிவும், அன்பும், கடவுள் பக்தியும் உடைய தகப்பனுக்குத் தறுதலைப் பிள்ளைகள் வந்து பிறக்கிறார்கள்.

இந்தத் தகப்பனையும் பிள்ளையையும் ஒரே வர்ணமாகக் கண்ணன் வைக்கவில்லை.

உடல் கூறு என்பது டிஎன்.ஏ. (D.N.A.) எனப்படும் உயிர்த் தொகுப்புகளால் உருவாக்கப்படுகின்றன. இது இறைவனால் உருவாக்கப்படுகின்றன. இந்த D.N.A. எனப்படும் உயிர்த் தொகுப்பு இறைவனால் உருவாக்கப்பட்டு இன்னின்னாருக்கு இப்படி அமைய வேண்டும் என்று அமைக்கப்படுகிறது.

பரம்பரையாக வரும் நோய்கள் குடும்பத்தில் உள்ள அனைவருக்குமே வருவதில்லை. ஏதோ சில இடங்களில் மட்டும் நூற்றுக்கு ஒன்று என்ற விகிதத்தில் தான் வருகிறது.

சிலருக்குப் பரம்பரையாகவே இளமையில் தலைமுடி நரைத்து விடும். ஆனால் இதுவும் கூட அண்ணன் தம்பி

நான்கு பேர் இருந்தால் ஏதோ ஒருவருக்குத் தான் அப்படி நடக்கிறது. இந்த பரம்பரை பாதிப்பும் கூட நோயாக இருந்தாலுமே சில தலைமுறைக்குத்தான் வரும், என்று கற்றறிந்த டாக்டர்கள் சொல்கிறார்கள்.

ஆக, ஒத்த குணம் உடையவன் எந்த குடும்பத்தில், எந்த குலத்தில், எந்த பரம்பரையில் வேண்டுமானாலும் பிறக்கிறான் என்பதால், குணத்தில் அடிப்படையில் வர்ணம் உருவாக்கப்படும்போது, அது பரம்பரையாக வரும் ஜாதி இல்லை என்பதே கண்ணனின் கொள்கை.

**இதன் மூலம் குடும்பம் குடும்பமாக, பரம்பரை பரம்பரையாக ஜாதி என்ற வகையில் மேலாதிக்கம் செய்து கொண்டிருந்த ஜாதி பிராமணர்களின் ஆதிக்கத்தை கண்ணன் உடைத்தெறிந்தார்.**

அதே போல காலம் காலமாகப் பிறப்பின் அடிப்படையில் கொடுமைக்குள்ளாக்கப்பட்டு வந்த தாழ்ந்த ஜாதியினரின் துன்பத்துக்குக் கண்ணன் வர்ணக் கொள்கை முடிவைத் தந்தது.

இதன்படி பாடம் சொல்லும் ஆசிரியனாகவும், பூஜைவைக்கும் புரோகிதனாகவும், சூத்திரத் தன்மையுடைய ஒருவனின் மகன் ஆக முடியும்.

அதே போல இராஜ குருவாகவும், மேலோனாகவும் இருக்கும் ஒருவனுடைய மகன் குணக்கேடனாகி சூத்திரத் தன்மையுடையவும் முடியும்.

செயலின் அடிப்படையில் வர்ணம்.

நல்ல புத்தியுள்ளவன் நல்ல செயல்களையே செய்வான். கெட்ட குணமுடையவன் கெட்டதையே செய்வான்.

ஒருவனுடைய செயல் என்பது அவனுடைய குணத்தைப் பொறுத்தே அமைகிறது.

புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது என்றும், சங்கு சுட்டாலும் வெண்மை தரும் என்றும் பழக்கத்தில் முன்னோரின் வாக்கியங்கள், குணத்தில் நல்லவர்களாக இருப்பவர்கள் என்றும் நல்ல செயல்களையே செய்வார்கள் என்பதையே சுட்டிக்காட்டுகின்றன.

அட்டையைப் பிடித்துத் தொட்டிலில் போட்டால் கிடக்குமா என்றும், பன்றியைக் குளிப்பாட்டி பல்லக்கில் வைத்தாலும் அது சேற்றில் தான் சென்று அளையும், என்றும் சொல்லப்படும் பழமொழிக்கேற்ப குணக்கேடன் கெட்ட செயல்களிலேயே ஈடுபடுவான். இது இயற்கை.

குணத்தின் அடிப்படையில் கெட்டவனாக இருக்கிறவன் பொதுவாக கெட்ட செயலிலேயே ஈடுபடுவான் என்பது தான் உண்மை.

இந்த குணம் சத்துவ, ரஜஸ், தமோ குணங்களின் சேர்க்கையால் எப்படி உருவாகிறது என்பதைப் பிறகு பார்க்கப் போகிறோம்.

நல்ல குணம் உள்ளவனாகி பிராமணனாக இருக்கிறவன், என்றும், எப்பொழுதும் நல்லவனாகவே இருப்பான் என்று உறுதி சொல்லமுடியாது.

முக்குண சேர்க்கைக்கு ஏற்ப குணம் மாறுபடும்போது பிராமணத் தன்மையுள்ளவன் கூட சில நேரங்களில் சூத்திரத் தன்மையுடையவனாக மாறக் கூடும்.

காலமும் தேசமும் சந்தர்ப்ப சூழ்நிலைகளும், பயிற்சியும் ஒருவனுடைய அடிப்படை குணத்தையும் அதன் அடிப்படையில் உருவான செயலையும் மாற்றியமைக்க முடியும் என்றாலும், இந்த மாற்றம் மிகவும் மெதுவாகவே நடக்கிறது.

அதாவது இந்தப் பிறவியில் பெறும் பயிற்சியும்

முயற்சியும் குறைந்தது அடுத்த ஜென்மத்தில் நல்ல பலனைக் கொடுக்கிறது.

இப்படிப்பட்ட பயிற்சியும், முயற்சியும் அடுத்த ஜென்மத்தில் முக்குணங்களின் சேர்க்கையில் மாறுதலை ஏற்படுத்துகிறது.

குணம் வெளிப்படுவதற்கு ஏற்ப ஒருவன் காலையில் பிராமணனாகவும், மாலையில் சூத்திரனாகவும் தற்காலிகமாக மாறி செயல்படக்கூடும்.

அதே போல ஒரே தகப்பனுக்குப் பிறந்த நான்கு பிள்ளைகளில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு வர்ணத்தவனாகவும் இருக்கக் கூடும்.

அடிப்படையில் உருவான பிறவிக் குணமே பொதுவாக அவனது வாழ்நாளில் அவனது வர்ணத்தை முடிவு செய்யும்.

குணம், கர்மம் இவற்றின் அடிப்படையில் வர்ணத்தைப் படைத்தேன் என்று கண்ணன் சொன்னதால் ஜாதியின் பெயரால் மக்களை தீண்டத் தகாதவர்கள் என்று தள்ளி வைக்கும் கொடுமைக்கு வாய்ப்பு இல்லாமல் போயிற்று.

குணத்தின் அடிப்படையிலே செயலும் அமையுமாதலால் 'குண கர்ம விபாகச' என்று கண்ணன் சொன்னார்.

மனிதர்களிடமிருக்கும் இயற்கையை (குணத்தை) நாம் இல்லாமலாக்கி விடமுடியாது. நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இயற்கை மாறப் போவதில்லை. இப்படி இயற்கையில் அமைந்த குணங்களை தவறாக பயன்படுத்தி மக்களின் ஒரு பகுதியினரைக் கொடுமைக்குள்ளாக்கியதைத் தடுத்து நிறுத்துவது தான் கண்ணனின் விஞ்ஞான விளக்கம் உருவாக்கும் நன்மை.

ஒன்றாவது அத்தியாயம் 41வது ஸ்லோகத்தில் அர்ஜூனன் சொன்ன ஜாதிக் கலப்பு, மனுநீதி உருவாக்கிய ஜாதியின் கலப்பு. அதாவது பிறப்பின் அடிப்படையில் பரம்பரையாக அப்பனுக்குப் பிள்ளையாகவும், பேரனாகவும் பிறப்பவரெல்லாம் ஒரே ஜாதி என்று சொல்லுகிற மனுநீதியின் ஜாதிக் கலப்பு என்பது தான் அது.

இந்த வகை ஜாதியிலுள்ள ஜாதி பிராமணன் மற்ற ஜாதியரோடு மண உறவு வைத்துக் கொள்ளக் கூடாது. அப்படி வைத்துக் கொண்டால் அது தான் மனுநீதி ஜாதிக் கலப்பு. இப்படி அதுவரையிலும் நடைமுறையில் இருப்பதைத் தான் அர்ஜூனன் இந்த ஸ்லோகத்தில் கேட்கிறான்.

இதன்படி பிராமணன் என்று அவர்களாகவே தங்களுக்கு பெயர் வைத்துக் கொண்ட ஒரு கூட்டத்தினர் தான் பரம்பரை பரம்பரையாக ஆசிரியர்களாகவும், பூஜாரிகளாகவும், அக்ரகாரத்தில் வசிப்பவர்களாகவும் இருப்பார்கள்.

இவர்களுக்கிடையில் வேறு யாராவது புகுந்து விட்டால் அது தான் மனு நீதியின் ஜாதி கலப்பு.

சாதுர் வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் என்று கண்ணன் சொன்ன ஸ்லோகத்தின் அடிப்படையில், குணத்தின் அடிப்படையிலும், செயலின் அடிப்படையிலும் எவன் தகுதியுள்ளவனோ அவன் ஆசிரியனாகவோ, புரோகிதனாகவோ, அரசனாகவோ, ஆராய்ச்சியாளனாகவோ மாறுவான்.

ஒரு குடும்பம் ஒரு குலம் என்ற வகையில், தகுதி இல்லாதவனெல்லாம் அனுபவித்துக் கொண்டிருந்த விஷயங்கள் அனைத்தும் கீதையின் படி தகுதியின் அடிப்படையில் மட்டுமே கிடைக்கும்.

அதைப் போல தகுதி (குண கர்ம) அடிப்படையில் பிராமணனாக இருந்தும் குலத்தால் சூத்திரன் என்று சொல்லிக் கொடுமைக்குள்ளாக்கப்பட்டவன், அவனது உண்மையான தகுத்திக்குத் தகுந்த அந்தஸ்தைப் பெற வேண்டும் என்று கீதை சொல்கிறது.

**கண்ணனது பதில்**

"சங்க ரஸ்ய ச கர்த்தா ஸ்யாம்" கீதை 3 : 24

அதாவது ஜாதிக் கலப்புக்கும் நான் கர்த்தா ஆகிவிடும் ஆபத்து வந்து விடும் என்று இந்த ஸ்லோகத்தில் கண்ணன் சொல்கிறார்.

கண்ணன் படைத்த வர்ணத்தின் அடிப்படையில் ஜாதிக் கலப்பு எப்படி ஏற்படும்?

மக்கள் மத்தியில் பிரிவினை, பரம்பரை ஜாதி அடிப்படையில் இல்லையே தவிர, குணத்தின் அடிப்படையிலும் செயலின் அடிப்படையிலும் பிரிவு உண்டு என்பதுதான் கீதை சொல்லும் உண்மை.

மக்களிடையே நல்லவர்களும், கெட்டவர்களும், அறிவாளிகளும், மூடர்களும், புரிந்து கொள்கிறவரும், புரிந்து கொள்ள முடியாதவரும் என்றுமே உண்டு என்பது மறுக்க முடியாத உண்மை.

இப்படி குணத்தாலும் செயலாலும் வேறுபாடு உடையவர்கள் அவர்களுக்கு சம்பந்தமே இல்லாத வேறு குணமும் செயலும் உள்ள இடத்தில் புகுந்து வேலை செய்யும் போதும், ஆலோசனை சொல்லும் போதும், முடிவெடுக்க முயற்சிக்கும் போதும் உண்டாவது தான் கீதையின்படி ஜாதிக் கலப்பு.

எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவர் இருந்தார். அவர்

இன்றுள்ள தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர். காலம் காலமாகக் கீழே போட்டு அமுக்கப்பட்ட அவரும், அவரது குடும்பமும் இன்றைய சுதந்திர இந்தியாவில், அவரது குணம் மற்றும் குணத்தின் அடிப்படையிலான செயல் ஆகியவற்றால் எம்.ஏ.பி.எல் தேறி மிகச்சிறந்த வழக்கறிஞராக செயல்படுகிறார்.

இவருடைய குணமும் செயலும் புறக்கணிக்கப்பட்டு பரம்பரையின் அடிப்படையில், பன்றி மேய்க்கும் தொழில் தான் செய்ய வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டிருந்தால், அது தான் கண்ணன் சொல்லும் வர்ணக் கலப்பு.

மு.கருணாநிதி அவர்கள் ஒரு பெரிய அரசியல்வாதியாக இருக்கிறார். அவருடைய குண இயல்புப் படியும், அதற்குண்டான செயலின் அடிப்படையிலும் அவர் ஒரு கட்சியின் தலைவராகத் தொடர்ந்து இருக்க முடிகிறது.

திரு. கருணாநிதி இருக்கும் நிலையையும், தொழிலையும் திரு. வீரமணி செய்ய நினைத்தால் அவர் வெற்றிபெற முடியாது. அப்படி அவர் செய்ய நினைத்தால் அது தான் கண்ணன் சொல்லும் வர்ணக்கலப்பு.

கருணாநிதி காமராஜர் போல் செயல்பட நினைத்தால் அது வர்ணக்கலப்பு.

நாட்டை ஆட்சி செய்ய வேண்டிய பெரிய பதவியில் அதற்குத் தகுதியுள்ளவன் இல்லாமல் தகுதியற்றவன் வந்தால் அது வர்ணக்கலப்பு.

உயர்ந்த ஆராய்ச்சியில் ஈடுபடவேண்டிய விஞ்ஞானி பதவிக்குப், பணத்தைக் கொடுத்து, ஒன்றுக்கும் உதவாத மந்திரியின் மைத்துனனை நியமித்தால் அது வர்ணக்கலப்பு.

வியாபாரம் செய்து லாபம் சம்பாதிக்கக் வேண்டிய ஒரு கடையில், ஆட்சியும் அதிகாரமும் செய்யும் தகுதி படைத்த சத்ரியனை வேலைக்கு வைத்தால், அவன் கடையில் சாமான்

வாங்க வந்தவன் இடக்கு மடக்காக பேசினால் இழுத்துப் போட்டு அடித்து வியாபாரத்தையே கெடுத்து விடுவான். இது வர்ணக் கலப்பு.

கவிதை எழுதும் கவிஞன் கையில் மண்வெட்டியைக் கொடுத்து வெட்டி வரப்பு வைக்கச் சொன்னால், அவன் நிழலில் அமர்ந்து குருவிகளைச எண்ணிக் கொண்டிருப்பான். இங்கே இது வர்ணக் கலப்பு.

ஆக அவனவன் தனது குண இயல்புக்கு இணங்கி செயல்பட்டால் அவனும் சந்தோஷமாக இருப்பான். நாடும், சமுதாயமும் கூட சந்தோஷமாக இருக்கும்.

இதைத்தான் கண்ணன் கீதையில் சொல்கிறார்.

**குணத்தின் அடிப்படையில் செயல்**

அவனவன் குணத்தின் அடிப்படையில் அமைந்த செயலை அவனவன் செய்தால் அதுதான் அவனது ஸ்வதர்மம் என்று கீதை சொல்கிறது.

ஒருவன் தன்னுடைய ஸ்வதர்மத்தைச் செய்யும்போது அவன் முழு திருப்தியுடையவனாக இருப்பான்.

மனிதனின் வாழ்க்கையில் சுகம் பெறுவதை அவன் அடையும் திருப்தியை வைத்துத் தானே அளவிடுகிறோம்.

தங்க ஊசி என்பதற்காகக் கண்ணில் குத்திக் கொள்ள முடியுமா? என்று ஒரு பழமொழி உண்டு.

சர்க்கஸ்காரனுக்கு ஆகாயத்தில் விளையாடுவது இன்பம். அதை நினைத்து விளையாட்டில் ஆர்வமே இல்லாத ஒருவனுக்கு ஆகாயத்தில் விளையாடும் ஆசை வந்தால் அது ஏற்புடையதல்ல.

இப்படி குணங்களின் அடிப்படையில் யார் யார் எந்தெந்த செயல்களில் ஆர்வமுடன் ஈடுபடுவார்கள் என்று

விளக்குவது தான் 18ம் அத்தியாயத்தில் உள்ள 42.43,44ம் ஸ்லோகங்கள்.

மாறாக மனுதர்மத்தின் அடிப்படையிலும், ரிக் வேதத்தின் கர்ம காண்டத்தின் அடிப்படையிலும் பிரச்சாரம் செய்யப்பட்டு, பல ஆயிரம் ஆண்டுகளாக நடைமுறைப்படுத்தப்பட்டு பிறப்பின் அடிப்படையிலும், பரம்பரையின் அடிப்படையிலும் ஜாதியைப் படைத்து, அந்த ஜாதிகளுக்கு தகுதியான வேலைகள் இன்னின்ன என்று நிர்ணயிக்கப்பட்டன.

அதாவது பிராமணனுக்கு பிறந்தவன் பிராமணன் தான் என்று முடிவு செய்து விட்டு அந்த பிராமணனுக்கு, புரோகிதம் செய்வது தான் வேலை என்று முடிவு செய்தனர்.

ஆனால் கண்ணனின் முடிவின்படி, ஒரு மனிதன் தன் மனப்பக்குவத்திற்கேற்ப அவனைத் திருப்தி செய்யும் வேலையைத்தான் செய்வான்.

உதாரணமாக சத்துவ குணம் மேலோங்கிய நல்லவன் ஒருவன் நல்ல செயலில் மட்டுமே ஈடுபடுவான். அவனது குணத்தையும், செயலையும் வைத்து மட்டுமே அவனது வர்ணத்தைக் கண்ணன் முடிவு செய்தார்.

இதன்படி நான்கு வர்ணத்தவரின் ஸ்வபாவங்களின் அடிப்படையில் என்னென்ன செயல்களில் அவர்கள் விருப்பமுடன் ஈடுபடுவார்கள் என்பதைக் கண்ணன் கோடிட்டுக் காட்டுகிறார்.

## இந்த செயல்களையுடையவன் பிராமணன்

சமோ தமஸ்தப: சௌசம் க்ஷாந்திர் ஆர்ஜவம் ஏவ ச/
ஜ்ஞானம் விஜ்ஞானம் ஆஸ்திக்யம் ப்ரம்ம கர்ம ஸ்வபாவஜம்//

கீதை: 18.42

பொருள்

மனதைக் கட்டுப்படுத்தி வைத்தல், புலன்களை அடக்குதல், தவம் செய்தல், எல்லா வகையிலும் தூய்மையாய் இருத்தல், பொறுமையைக் கடைபிடித்தல், எந்த சூழ்நிலையிலும் நேர்மை தவறாதிருத்தல், ஆன்மீக அறிவு, விஞ்ஞான அறிவு, கடவுள் பக்தி ஆகியவை இயல்பாகவே பிராமணனுடைய சுபாவமாகும்.

பிராமணனுக்கு கீதை சொல்லும் இலக்கணத்தையும், கீதை தோன்றுவதற்கு முன்னால் மனுநீதியும், புருஷசூக்தமும் கொடுத்த இலக்கணத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் கண்ணன் செய்திருக்கும் மாற்றம் தெரிந்து விடும்.

இந்த கீதை சொல்லும் குண நலன்கள் உடையவன் அதற்கு இசைவான செயல்களில் மட்டுமே ஈடுபடுவான் என்பது எளிதாகப் புரிந்து கொள்ள முடியும்.

இங்கு நாம் முக்கியமாகப் புரிந்து கொள்ள வேண்டியது, பிராமணன் என்பவன் பூணூல் போட்டுக் கொள்வான் என்றோ, உபநயனம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்றோ, தீண்டாமையைக் கடைபிடிக்க வேண்டுமென்றோ, பிராமணனுக்கு மட்டுமே பிறப்பான் என்றோ, கண்ணன் இந்த ஸ்லோகத்தில் மட்டுமல்ல, கீதையின் வேறு எந்த இடத்திலும் சொல்லவில்லை என்பதாகும்.

கீதை இப்படிச் சொன்னாலும் நடைமுறையில் மனுநீதியின் அடிப்படையில் உள்ள ஜாதி தானே இருந்தது. அந்த வகையில் பாமர இந்துக்கள் துன்பத்திற்கு உள்ளாக்கப்படுவது உண்மைதானே என்று வீரமணி கேட்டால் அந்தக் கேள்வி நியாயமானது தான்.

நாம் முன்பே சொன்னது போல, பிராமணன் என்ற பெயரிலேயே தங்கள் ஜாதியை வைத்துக் கொண்டவர்கள்.

பிராமணன் பிறப்பால் பரம்பரையாக வருவான் என்று உலகத்திற்கு காட்டியதாலும், பாமர மக்களையும், மன்னனையும் எளிதாகக் கடவுள் பெயரைச் சொல்லி ஏமாற்றி யாகம், யக்ஞம், பலி, சடங்கு, பரிகாரம் போன்றவற்றைச் செய்து வந்ததாலும் அந்தக் காலத்தில் மக்கள் கீதையைப் பின்பற்றியதை விடவும் மனுநீதி ஜாதி பிராமணர்களின் ஏமாற்று வித்தைக்கு அதிகம் பலியாயினர்.

அன்று மட்டுமல்லாமல் இன்றும் கூட பாமர மக்கள் பூஜையையும் யாகம், யக்ஞம் என்ற பெயர்களினால் செய்யப்படும் நிகழ்ச்சிகளைத்தானே அதிகம் விரும்புகிறார்கள்.

அறிவுபூர்வமான சிந்தனையைத் தூண்டும் கீதையின் படி மக்களை நடக்க வைக்க வேண்டுமானால் அதற்கு பெரிய பிரச்சாரமும் முயற்சியும் தேவை.

10.10.2004 தேதியிட்ட ஆனந்த விகடனில் பிரபல எழுத்தாளர் சுஜாதா இப்படி எழுதுகிறார். பிறக்கும் போது எல்லோரும் சூத்திரர்களே, பண்பாடு, கல்வி, அறிவு இவை வந்தடையும் போது தான் மனிதன் உயர் ஜாதியாகிறான்.

பிறப்பின் போது எல்லோரும் சூத்திரன் தான் என்றால் பிராமணனால் பிராமணப் பெண்ணுக்குப் பிராமணன் பிறப்பான் என்று சொல்லி அதே அடிப்படையில் பிறந்ததிலிருந்தே பிராமண ஜாதி என்று சொல்லி இந்த சுஜாதா கூட தன்னை அந்த ஜாதியைச் சார்ந்தவன் என்று சொல்லிக் கொள்கிறாரே அதெப்படி?

ஜாதி, பிறப்பினால் வருவதில்லை என்று இவர் ஒத்துக் கொண்டால் கடந்த ஐயாயிரம் ஆண்டுகளாக தீண்டாமையும், ஜாதிக் கொடுமையும் இருந்ததே அது எப்படி?

இன்றைக்கு ஜாதி பிறப்பினால் வரவில்லையென்னும் கீதைக் கொள்கையை ஏற்றுக்கொள்வது போல் நடிக்கும்

இவர்கள், இத்தனை காலமும் ஜாதியின் பெயரால் நடத்தப்பட்ட அத்தனை அராஜகங்களுக்கும் தாங்களும் தங்கள் பேராசை மற்றும் ஏமாற்றுச் சிந்தனையும் தான் காரணம் என்பதை வெளிப்படையாக ஒத்துக் கொண்டு அதற்காக மன்னிப்புக் கேட்டு தங்களைத் திருத்திக் கொள்வார்களா?

இந்த ஜாதி பிராமணர்கள் அப்படி செய்ய மாட்டார்கள்.

இன்றும் கூட ஜாதி ஒழிய வேண்டுமென்று சொல்லி வேஷம் போடும் இந்து முன்னணித் தலைவர் திரு. ராம கோபாலன் போன்றவர்கள் தங்களது பிராமண ஜாதியை அடையாளம் காட்டும் பூணூலை அகற்றி விட சம்மதிக்கவில்லையே!

அது மட்டுமா? ஏதோ காரணத்தினால் ஆர்.எஸ்.எஸ். ல் இருந்து சில ஜாதி பிராமணர்கள் பூணூல் போட்டுக் கொள்ளாமல் இருந்தனர். ஆனால் எந்த காரணம் கொண்டும் பிராமண ஜாதியின் அடையாளமான பூணூலை விட்டு விடக் கூடாதென்று ஜாதி அமைப்பின் தலைமை உத்தரவிட்டதும், மறுபடியும் பூணூல் போட்டுக் கொண்டார்களே இது எதனால்?

ஆக கீதையை ஓரம் கட்டி விட்டு மனுநீதியைப் பின்பற்றிய ஜாதி பிராமணர்கள் மட்டுமே அத்தனை ஜாதிக் கொடுமைகளுக்கும் காரணம் என்று சொன்னால் அது மிகையாகாது.

ஜாதிப் பிரிவினாலும், தீண்டாமையினாலும் சீரழிந்து போன இந்து மதத்தில் ஒற்றுமையை உருவாக்க வேண்டுமென்று முயற்சி செய்வதாகச் சொல்லிக் கொள்ளும் R.S.S. இந்து முன்னணி போன்றவற்றிலுள்ள தலைவர்களும் தங்களது தோளில் தொங்கும் பூணூலைக் கழற்றி விடவோ, பிராமணன் என்னும் தங்களது ஜாதி அடையாளத்தை மாற்றிக் கொள்ளவோ தயாராக இல்லை.

மற்ற எல்லா ஜாதியும் அழிந்து விடவேண்டும். ஆனால் தங்களது பிராமண ஜாதி மட்டும் நிலைத்து நிற்க வேண்டும் என்பதுதான் இன்றும் ஜாதி பிராமணர்களுடைய ஆசையாக இருக்கிறது.

இந்த ஜாதி பிராமண வகுப்பினர் இன்றும் கீதைக்குப் பொருள் சொல்லும் போது சொல்லியிருக்கும் தவறான விளக்கத்தைக் கொஞ்சம் பார்ப்போம்.

**வினோபா பாவே**

'பெற்றோரின் தொழில் பிள்ளைக்கு இயற்கையிலேயே பரம்பரை சொத்தாய்க் கிடைப்பது. அதையே தொடர்ந்து செய்து வருதல் வருண முறையில் உள்ள ஒரு சிறப்பாகும்' இன்னும் சொல்கிறார் பாருங்கள்,

"மனிதன் ஆரம்பத்தில் இருபத்தைந்து ஆண்டுகள் கல்வி கற்றுக் கொள்கிறேன் என்று சொல்லி வாழ்க்கையை வீணாக்குவதைவிட, பரம்பரை ஜாதித் தொழிலையே செய்தால் நல்லது. இதனால் தான் இந்து தர்மம் வர்ண முறையைக் கண்டுபிடித்தது" என்கிறார்.

ஆக இவர் கண்டு பிடித்த வர்ண முறைப்படி பூஜை செய்கிறவனது மகன் பூஜை செய்ய வேண்டும். துப்புரவுத் தொழிலாளியின் வம்சம் துப்புரவுத் தொழிலையே செய்ய வேண்டுமென்கிறார்.

**கோரக்பூர் கீதாபிறஸ்**

இங்கு வெளியிடப்படும் கீதையின் உரையாசிரியர் தன்னை பிராமணரல்லாதவர் என்று சொல்லிக் கொள்கிறார். ஆனால் இவர் எழுதியிருப்பது அத்தனையும் ஜாதி பிராமணர்களின் சிந்தனை மட்டுமே.

இவர் சொல்கிறார், "பிராமண ஜாதியில் பிற ஜாதியின்

கலப்பு இல்லாதிருக்கும் வரையிலும் பரம்பரை பரம்பரையாக எல்லோரும் பிராமணர்களாகவே பிறப்பார்கள். பிறப்பும் தொழிலும் ஒரு ஜாதியை நிர்ணயிப்பதாக இருந்தாலும் முக்கியமாக பிறப்பே ஜாதியை நிர்ணயிக்க வேண்டும். கடவுளே இவர்களை (மனுதர்மத்தின் படி) அந்தந்த ஜாதியில் தான் பிறக்க வேண்டுமென்று நிர்ணயித்திருப்பதால் அதை மாற்ற முடியாது. ஜாதியை விட்டு விட்டு குணத்தை மட்டும் வைத்து அவனது வர்ணத்தை நிர்ணயிக்க முடியாது. ஆகையால் அவன் பிறந்த ஜாதியே அவனது வர்ணமாக முடியும்".

"குணத்தின் அடிப்படையில் ஜாதியை முடிவு செய்தால் தங்களைக் கீழ் ஜாதியென்று யாரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இதனால் ஜாதிக்கலப்பு உண்டாகி, பெரும் தவறுகள் நேர்ந்து சமுதாய வாழ்க்கையே கெட்டுப்போகும்"

கோரக் பூர் கீதாபிறஸ்காரர்கள் வெளியிட்டுள்ள கீதையில் இப்படிச் சொல்லியுள்ளதன் மூலம் கீதையின் உண்மையான பொருளைத் தங்களது சுய ஜாதி பாதுகாப்புக்காகத் திரித்து மறைத்திருக்கிறார்களென்பதை அவர்களே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

**ஸ்ருதி ஸேவா ட்ரஸ்டின் தலைவர்**
**தயானந்த ஸரஸ்வதி சுவாமிகளின் கூற்று**

இவர் வீடு தோறும் கீதை என்னும் பெயரில் பல வால்யூம்களில் கீதைக்கு அற்புதமாகப் பொருள் சொல்லியிருக்கிறார்.

ஆதி சங்கரரின் பாஷ்யத்தை ஒட்டி சொல்லப்படும் இவரது கீதை உரை பல பகுதிகளுக்கு மிக நன்றாகப் பொருந்துகிறது.

ஆனால், இவரும் கூட ஜாதி என்று வரும் போது

தனது ஜாதியை விட்டுக் கொடுக்க மனமில்லாமல் சறுக்கி விடுகிறார்.

இவர் சொல்கிறார்,

"எவர் பிராமணக் குடும்பத்தில் பிறந்து..............சம்யச் சடங்குகளைச் சரிவர செய்தும் தம் முன்னோர்களைப் போன்றும் வாழ்கிறார்களோ அவரே உண்மையான பிராமணர் ஆவார்"

அதாவது பிராமணக் குடும்பம் என்பது, பிராமணர்களால் ஆன குடும்பம் அந்தக் குடும்பத்தில் அனைவருமே பிராமணர். இதுதான் மனுநீதி பிராமணக் குடும்பம்.

அந்தக் குடும்பத்தில் முன்னால் வாழ்ந்த தமது முன்னோர்களைப் போல வாழ்ந்தால் அவரே உண்மையான பிராமணர் என்கிறார் இவர். அதாவது குடும்பமும், முன்னோர்களும் எல்லோருமே பிராமணர்கள் என்பது தான் பிராமண ஜாதி என்று இவர்கள் வைத்துக் கொண்ட பரம்பரையாக வரும் ஜாதி.

ஆனால் கீதை இப்படிக் குடும்பமாகவும் பரம்பரையாகவும் வர்ணம் அமையும் என்று சொல்லவில்லை.

இதை விடவும் இன்னும் கொடுமையான விளக்கமொன்றைத் தயானந்த ஸரஸ்வதி கொடுத்திருக்கிறார் பாருங்கள்.

"நமக்கு எது சிறந்த தொழில் என்று மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டாம். ஏனெனில் அவரவர்களின் முன்னோர்கள் எந்த தொழிலை செய்து வந்தார்களோ அதுவே அவர்களுக்கு ஏற்ற தொழிலாகும். இதுதான் இவ்வித வர்ணப்பிரிவின் முதல் நன்மையாகும். அதாவது ஒருவர் பிறக்கும் போதே அவருடைய தொழில் நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது எனலாம்". என்கிறார்.

இவர் இப்படிச் சொல்வதன் அர்த்தம் உங்களுக்குப் புரிந்திருக்கும். அவனவன் அப்பன் தொழிலைத்தான் மகனும் செய்ய வேண்டும் என்கிறார். இவர் கீதைக்கு விளக்கம் சொல்கிறேன் என்ற போர்வையில் ஜாதி பிராமணர்களின் மனுநீதியை அப்படியே புகுத்துகிறார்.

இவர் சொல்லும் பரம்பரைத் தொழிலுக்கும் கண்ணன் கீதையில் சொன்ன வர்ண தர்மத்திற்கும் கொஞ்சம் கூட சம்பந்தமே இல்லை.

கண்ணனின் பெயரையும் கீதையின் பெயரையும் பயன்படுத்தி காலம் காலமாக மக்களை ஏமாற்றி வந்த மனு தர்ம ஜாதியை கீதைக்குப் பொருள் சொல்கிறேன் என்னும் பெயரில் இவர் புகுத்தி விடுகிறார் பாருங்கள்.

இந்த தயானந்தர் சொல்லுவது தான் இராஜாஜி கொண்டு வந்த குலக்கல்வித் திட்டம். அதாவது பனையேறுகிறவன் பிள்ளை வாத்தியாராகிவிடக் கூடாது, பன்றி மேய்க்கிறவன் பிள்ளை போலீஸ்காரனாகி விடக்கூடாது. விவசாயியின் பிள்ளை டாக்டராகிவிடக் கூடாது என்று தடுப்பது தான் இவர்களின் திட்டம்.

கீதை சொல்லாத, உண்மையில் கண்ணன் தடுத்து அழிக்க விரும்பிய குலத்தொழில், குலக்கல்வி முறையை, கீதையின் பெயராலேயே இவர் வியாபாரம் செய்வது கொடுமையிலும் கொடுமையில்லையா?

இப்படியெல்லாம் கீதைக்கு தவறான பொருள் சொல்லியதால் கீதையின் பெயரை பயன்படுத்தி தங்களது மனுநீதி ஆதிக்கத்தையும், தீண்டாமை என்ற பெயரால் பிறரைக் கொடுமைப்படுத்தியதையும் நேரடியாக அனுபவித்து பாதிக்கப்பட்ட திரு. வீரமணி போன்றோர் இன்று கீதையைத் தவறான கண்ணோட்டத்துடன் பார்க்கும் நிலை உண்டாகி விட்டது.

ஆனாலும் தாங்கள் பாதிக்கப்பட்டோம் என்பதற்காக உண்மையான குற்றவாளிகளை விட்டு விட்டு எல்லா இந்துக்களுக்கும் சொந்தமான கீதையையும், உபநிடதங்களின் வழி வந்த இந்து மதத்தையும் குறை சொல்லும் வீரமணி போன்றோரின் செயல் நியாயமானதல்ல.

மனுநீதியின் வழி வந்த ஜாதி பிராமணன் செய்த தவறுக்காக கீதையையும் கண்ணனையும் மதிக்கும் கோடானுகோடி இந்துக்களையுமம குற்றம் சாட்டுவதில் நியாயமில்லை.

உண்மையான இந்துவாக இருந்துகொண்டு கீதையின் சரியான பொருளைப் படித்துத் தெளிந்து, அதன் பிறகு கீதைக்குத் தவறான பொருள் சொன்னவர்களை வீரமணி சாடியிருந்தால் அவரை நிச்சயம் பாராட்டியிருக்கலாம்.

**வர்ணம் பற்றி திருவள்ளுவர்**

திருக்குறளில் திருவள்ளுவர் கீதையில் கண்ணன் சொன்ன வர்ணாசிரம நீதியை அப்படியே அச்சுப் பிறழாமல் திருப்பிச் சொல்லுகிறார் பாருங்கள்.

நான்கு வர்ணங்களில் ஒரு வர்ணமான பிராமணனைப் பற்றி 'நீத்தார் பெருமை' என்னும் அதிகாரத்தில் பத்தாவது குறளில் சொல்லுகிறார்,

'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுகலான்"

பிராமணன் என்ற சமஸ்கிருத வார்த்தைக்குத் தமிழில் அந்தணன் என்று பொருள்.

குணத்தின் அடிப்படையிலும் அந்த குண இயல்பை ஒட்டிய செயலின் அடிப்படையிலும் வர்ணத்தை (அந்தணனை) படைத்தேன் என்று கண்ணன் கீதையில் சொன்னான்.

வள்ளுவரும் அதே போல, அறத்தன்மை என்று குணத்தின் அடிப்படையிலும், எல்லா உயிருக்கும் நன்மை செய்தல் என்ற செயலின் அடிப்படையிலும் அந்தணன் என்பவன் அமைவான் என்று இந்த குறளில் சொல்கிறார்.

கீதை சொன்னதை அப்படியே அச்சு அசலாகத் திருவள்ளுவரும் சொல்லியிருப்பது, இந்து மத சிந்தனைகள் எல்லோரிடமும் சரியாக ஒரே மாதிரியாக இருந்தது என்பதையே காட்டுகிறது.



# 6. கடவுள் வர்ணத்தை மாற்ற இயலாதவரா?

"தஸ்ய கர்த்தாரம் அபிமாம் வித்தியகர்த்தாரம் அவ்யயம்" //

கீதை : 4:13

இது இந்த ஸ்லோகத்தின் இரண்டாவது அடி-

பொருள்

"அதை (வர்ணப்பிரிவை) செய்தவன் நானே எனினும், நான் செயலில் ஈடுபடாதவனென்றும், மாற்றமில்லாதவனென்றும் அறிவாயாக".

சில உயர்ந்த சித்தாந்தங்களை அரைகுறை அறிவோடு அல்லது எதிர்மறை உணர்வோடு படிக்கும் போது, புரிந்து கொள்வதில் தவறுகள் ஏற்படுவதுண்டு.

இப்படிப்பட்ட தவறுதான் இந்த அடிக்குப் பொருள் சொல்லும் பொது திரு. வீரமணிக்கு உண்டாகி இருக்கிறது.

"நான்கு வர்ணங்களை நானே படைத்தேன் என்றாலும் அதை மாற்றுவதற்கு என்னால் கூட முடியாது" என்பதுதான் இவர் சொல்லும் பொருள். அதாவது,

நான்கு வர்ணங்கள் கடவுளால் படைக்கப்பட்டது ஆகையால் அந்தந்த ஜாதியில் பிறந்தவன் அந்தந்த ஜாதிக்குண்டான இன்ப துன்பங்களை அனுபவித்து தான் ஆக வேண்டும். அப்படிப்பட்ட நிலமையைக் கடவுளே முயன்றால் கூட மாற்ற முடியாது. அந்த அளவுக்கு இந்த வர்ண தர்மம் தவிர்க்க முடியாதது என்று கீதை சொல்கிறது, என்று சொல்ல வருகிறார் வீரமணி.

கண்ணன் வர்ணப் படைப்பை எப்படி செய்தான் என்பதை இந்த ஸ்லோகத்தின் முதல் அடியின் விளக்கத்தின் மூலம் பார்த்து விட்டோம்.

இப்பொழுது திரு. வீரமணி இரண்டாவது அடிக்குச் சொல்ல வரும் பொருளும் முற்றிலும் தவறானது.

என்னைச் செயலில் ஈடுபடாதவன் (அகர்த்தாரம்) என்றும், மாறாதவன் (அவ்யயம்) என்றும் அறிவாயாக என்று கீதை சொல்வதை, செய்ய இயலாதவன் என்று நினைத்து இவர் பொருள் எழுதியுள்ளார்.

கீதையும், உபநிடதங்களும் சொல்லும் கடவுளால், செய்ய முடியாத காரியமே கிடையாது. வேறு விதமாகச் சொல்ல வேண்டுமென்றால் எல்லாவற்றையும் எல்லா இடத்திலும் எல்லா நேரத்திலும் செய்து முடிக்கும் சக்தி படைத்து, கால தேச வர்த்தமானங்களைக் கடந்து எல்லாவற்றுக்கும் ஆதாரமாகவும், சிந்தனைக்கெட்டாததாகவும் அனைவர் உள்ளத்திலும் வெளியிலும் யார் இருக்கிறானோ அவனுக்குத் தான் இந்து மதத்தில் கடவுள் என்று பெயர்.

கடவுளுக்கு இப்படி விளக்கம் கொடுக்கும் கீதை, வர்ண தர்மத்தை கடவுளே நினைத்தாலும் மாற்ற முடியாது என்று சொல்லும் வாய்ப்பில்லை.

கடவுள் மாறாதவன். கடவுள் ஏன் மாறாதவனாக இருக்கிறான். ஏனென்றால் மாறுகின்ற ஒரு பொருள் நிலையானதாகவும் நம்பிக்கைக்கு உரியதாகவும் இருக்காது. மாறுகின்ற எந்த வஸ்த்துவும் ஒரு நாள் அழிந்து போகும்.

ஆனால் இறைவன் அழிந்து போகிறவன் அல்ல. ஆகவே அவன் மாறாதவன்.

இந்த உலகத்தில் நம்முடைய புலன்களால் கண்டு கொள்ளும் வஸ்த்துக்கள் அனைத்துமே மாறும் தன்மையுடையவைகள் தான், உலகமும், இந்த அண்ட சராசரம அனைத்துமே மாறிக் கொண்டிருப்பவைதான்.

மாறும் தன்மையுடைய இந்த உலகத்தைப் படைக்க மாறாத தன்மையுடைய ஒருவனால் தான் முடியும். அவன் தான் இறைவன். நான் செயல்படாதவன் என்று வருவதற்கு என்ன பொருள்?

மாற்றமே செயல். செயல் தான் மாற்றம். செய்யப்படுகின்ற பொருள் மாற்றமடையும், அழியும் தன்மையுடையது.

கடவுள் அழியாதவன். ஆகவே அவன் செயல்படாதவன். இந்த பொருளுடன் கூடிய ஸ்லோகங்கள் கீதையில் இன்னும் பல இடங்களில் வருகின்றன.

சரி, செயல்படாதவன் எப்படி வர்ணத்தை நானே படைத்தேன் என்று சொல்கிறான்?

இதை விளக்க சுவாமி சின்மயானந்தர் ஒரு உபமானம் சொல்கிறார்.

ரயிலில் உட்கார்ந்து நான் 50 கிலோ மீட்டர் தூரம் பிரயாணம் செய்தேன் என்று ஒருவன் சொல்கிறான். சும்மா ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தவன் இவ்வளவு தூரத்தை எப்படி கடக்க முடியுமென்று நாம் சொல்வதில்லை. இங்கு அவன் சும்மாவே உட்கார்ந்திருந்தாலும் ரயில் ஓடிக் கொண்டிருந்தது.

கடவுள் சும்மாவே இருந்தாலும் நம்முடைய மனதின் உருவகமான இந்த உலகம் முக்குணமயமானதும் செயல்படும் தன்மையுடையதமாகும்.

நெருப்பில் கையை வைத்தால் சுடும். நெருப்பிடம் கேட்டால் அது நான் சுட்டேன் என்று சொல்லாது. சுடுவது அதன் தன்மை. சுட்டுக் கொண்டது நாம்.

அதுபோல இறைவனின் தன்மையாகிய மாயையே இந்த உலகமாக இருக்கிறது.

நீங்களும் நானும் இந்த உலகக் கட்டுக்குள் மாட்டிக் கொண்டிருக்கிற வரையிலும் செயலுண்டு.

முக்குணமயமான இந்த உலகை கடந்து விட்ட பிறகு அங்கு மாற்றம் எதுவுமில்லாத இறைவன் மட்டுமே உண்டு.

இதே கருத்தை கீதையின் 2-45 மற்றும் 4-18 போன்ற ஸ்லோகங்களில் காணலாம்.

மகாஞானியாக வாழ்ந்து கீதைக்கு ஞானேஸ்வரி என்னும் உரை எழுதிய ஞானேஸ்வரர் கீதை ஸ்லோகம் 4-13 ன் இரண்டாம் அடிக்கு இப்படி உரையெழுதுகிறார்.

"செயல்படுவது ப்ரக்ருதி (மாயை) மட்டுமே முக்குணங்களால் ஆட்டிப்படைக்கப்படும் ஜீவன் தன்னுடைய வினைப்பயனை அடைவதற்காக மறு பிறவி பெறுகின்றன. இப்படி மறு பிறவி பெறும்போது, அடையும் நிலை (மனிதனானால் வர்ணம்) அந்த ஜீவனுடைய வினை பயனின் படியே அஅமையுமாதலால் இதில் இறைவன் தலையிட்டு செய்வதற்கு ஒரு வேலையுமில்லை.

நல்ல வினை செய்தவன் நற்கதியையும், தீவினை செய்தவன் தீக்கதியையும் அடுத்து வரும் பிறவிகளில் அடைவது நியாயம் தானே" என்கிறார் ஞானேஸ்வரர்.

இந்த ஸ்லோகத்தில் நான் என்று வரும் வார்த்தை இறைவனைக் குறிக்கும். ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஆத்மாவாக இருப்பது இறைவனே என்பது கீதை சொல்லும் செய்தி ஜீவன் முக்தன் என்ற நிலையான அந்த இறை நிலையை கண்ணன் அடைந்தவன். ஆதலால் கடவுளைக் குறிக்க நான் என்ற பதம் பயன்படுத்தப்படுகிறது.



# 7. குலத்தொழில்

ஸத்ருசம் சேஷ்ட்டதே ஸ்வஸ்யா ப்ரக்ருதேர் ஞானவானபி /

கீதை : 3-33

இந்த ஸ்லோகம் கீதை 3-33 ன் முதலடி

"அறிவாளியும் தனது மனப்பக்குவத்திற்கேற்ப செயல்படுகிறான் என்பதே இந்த அடியின் பொருள்"

ஒருவனுடைய செயல் அவனது மன இயல்பின் அடிப்படையில் தான் அமையும் தன்னுடைய இயல்புக்கு மாறாக ஒருவன் செயல்பட முயன்றால் அவனுடைய செயல் முழு முயற்சியுடையதாகவும், முழு வெற்றியைக் கொடுப்பதாகவும் அமையாது.

எல்லோரும் சொல்கிறார்களே என்பதற்காக லஞ்சம் வாங்காத நல்லவன் ஒருவன் ஒருநாள் லஞ்சம் வாங்கினால் அவன் அன்றே லஞ்ச ஒழிப்புத்துறை அதிகாரியிடம் மாட்டிக் கொள்வான்.

லஞ்சம் வாங்குவது ஒருவனது மனப்போக்குக்கு சரி என்று தோன்றி அதை அவன் செய்தால் அவன் எளிதில் மாட்டிக் கொள்ள மாட்டான்.

அவனது மனப்போக்கிற்கேற்ப அவன் செயல்படும் வரை அவனது அமைதி கெடாது.

ஒவ்வொருவரின் மன இயல்பும் அவனவனுடைய வர்ணத்திற்கேற்ப மாறுபட்டதாக இருக்கும்.

ஒருவனின் இந்த மன இயல்புக்கு ஏற்புடைய செயலே அவனது ஸ்வதர்மமாகும்.

மீண்டும் ஒரு விஷயத்தில் நாம் கவனமாக இருக்க வேண்டும். இங்கு நாம் சொல்லும் சுய தர்மம் பரம்பரையாக

வந்த குலத்தொழில் அல்லது வயிற்றுப்பிழைப்புக்காக வேண்டி தன்னுடைய மன இயல்பினால் உண்டாகும் ஆசை அபிலாசைகளை எல்லாம ஒதுக்கி வைத்து விட்டு வேறு வழியில்லாமல் செய்யும் தொழிலல்ல அல்லது அப்பன் தொழிலையே மகனும் செய்தாக வேண்டும் என்ற கட்டாயத்தின் அடிப்படையில் செய்யப்படும் தொழிலும் அல்ல.

ஒவ்வொரு மனிதனுக்கும் பிறவிக்குணம் என்றொரு குணம் உண்டு. இந்த பிறவிக்குணத்தின் உந்துதலினால் செய்யப்படும் செயல்களே அவனது சுய தர்மம் என்று கீதை சொல்கிறது.

மனித இயல்புகளை உள்ளது உள்ளபடி ஆராய்ந்து சொன்ன நூல் தான் கீதை. இதைத் தவறாக பயன்படுத்தியவர்களைக் குற்றம் சாட்டுவதை விட்டு விட்டு கீதையைக் குறை சொல்வதோ இந்து மதத்தைக் குறை சொல்வதோ அறிவுடைமை ஆகாது.

இந்த ஸ்வதர்மத்தைப் பற்றி கீதை என்ன சொல்கிறது?

"ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண : பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் /
ஸ்வதர்மே நிதனம் ச்ரேய பரதர்மோ பயாவக : //

கீதை 3-35

பொருள்

ஸ்வதர்மம் குணமற்றதாயினும் சிறந்தது. நம்முடைய குண இயல்புக்கு சம்பந்தமில்லாத ஒரு வேலையை சிறப்பாக செய்வதாக நினைத்தாலும், நம்முடைய ஸ்வதர்மமே சிறந்தது. ஸ்வதர்மம் செய்து அதில் மரணமடைந்தாலும் அது சிறந்ததே. பிற தர்மம் பயத்தைக் கொடுக்கக் கூடியது."

இந்த ஸ்லோகத்தின் பொருளை குலம், குலதர்மம், பரம்பரைத் தொழில் என்று மனுநீதியின் அடிப்படையில் பொருத்திப் பார்த்தால், திரு. வீரமணி போன்றவர்கள் ஆயிரம்

ஆண்டுகள் கொடுமைப்படுத்தப்பட்டதற்கான ஜாதி ஏற்பாடு வந்துவிடும். அப்படித்தான் வந்துவிட்டது.

ஆனால் கீதை சொல்லும் சுயதர்மம் அதுவல்ல. இது குடும்பம் அத்தனைக்கும், பரம்பரையாக, ஜாதி என்று சொல்லப்படும் அமைப்பிலுள்ள அத்தனைபேருக்கும் ஒன்று போல வருவதல்ல.

கீதையின் சுயதர்மம் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உரியது. அதே மாதிரி குண இயல்புடையவன் எங்கு எந்த குடும்பத்தில் எந்த நாட்டில் எந்த காலத்தில் வேண்டுமானாலும் பிறக்கலாம்.

ஒருவன் இயற்கையை ரசித்துக் கொண்டும் கவிதையை எழுதிக் கொண்டும் சந்தோசமாக இருக்கிறான். கற்பனை செய்வது அவனுக்குப் பேரானந்தமாக இருக்கிறது. ஆனால் இவனுடைய கவிதையும் கற்பனையும் அவனுக்கும் அவனது குடும்பத்துக்கும் எதிர்பார்த்த அளவு சோறு போடவில்லை. வருமானம் குறைவு.

பெண்டாட்டி நச்சரிக்கிறாள். பேசமால் ஒரு வியாபாரம் தொடங்குங்கள் நிறைய வருமானம் வரும் என்கிறாள்.

அவனும் ஒரு வியாபாரம் செய்யத் தொடங்குகிறான். அவனுடைய அறிவுக்கும் திறமைக்கும் வியாபாரமும் நன்றாகவே நடக்கிறது. கற்பனை செய்வதும் கவிதை எழுதுவதும் அவனுக்கு சுய தர்மம், வியாபாரம் அவனுக்கு பரதர்மம்.

சுய தர்மத்தில் வருமானமில்லை. பரதர்மத்தில் நிறைய லாபம் வருகிறது. இந்த இடத்தில் கீதை என்ன சொல்கிறது? நிறைய வருமானம் வந்தாலும் வியாபாரம் உனக்கு நல்லதில்லை. வருமானம் அதிகம் இல்லாவிட்டாலும் சுய தர்மமே உனக்குச் சிறந்தது என்று சொல்கிறது. எப்படி?

என்னதான் வியாபாரத்தில் லாபம் வந்தாலும் அவனது மனம் அதில் ஒட்டாமலேயே நிற்கும். வியாபாரத்தின் காரணமாக சொல்ல வேண்டிய பொய்களும் செய்ய வேண்டிய தகிடுதத்தங்களும் அவனுக்கு மிகுந்த மன வேதனையையே கொடுக்கும். இதனால் மனதின் நிம்மதி போய்விடும்.

நிம்மதி கெட்டுப் போவதால் மன அழுத்தம் அதிகமாகி, காலப்போக்கில் வாழ்க்கையே நரகமாகி விடும்.

மாறாக சுயதர்மத்தில் வருமானம் குறைவாக இருந்தாலும மன நிம்மதியோடு நிறைவாக வாழலாம். மனதுக்குத் திருப்திக் கொடுக்கும் வேலையைச் செய்து. அதனால் மரணமடைந்தால் அதுவே சிறந்தது.

சுதந்திரப் போராட்டத்தில் ஆயிரமாயிரம் தேச பக்தர்கள் மகிழ்ச்சியோடு மரணத்தைக் தழுவினார்களே. அவர்கள் தூக்கு மேடையில் அடைந்த இன்பம் அவர்களது சுயதர்மம் கொடுத்த இன்பம் தான். நமது இயல்புக்கு ஒவ்வாத செயல்களைச் செய்யும்போது எப்போதும் பயமும் சந்தேகமும் இருந்து கொண்டே இருக்கும். [illegible]

சுயதர்மம் என்பதை குலத் தொழில் என்று பொருள் கொண்டதால் வந்த வினை தான் இந்து மதத்தின் இத்தனை ஜாதிக் கொடுமைகளுக்கும் காரணமாக அமைந்து விட்டது என்பது இப்பொழுது புரிந்திருக்கும்.

கீதையின் 18.42, 43, 44 வது ஸ்லோகங்கள் சொல்லும் தொழில்

"சமோ தமஸ்தப: சௌசம் க்ஷாந்திரார்ஜவ மேவ ச|
ஜ்ஞானம் விஜ்ஞானம் ஆஸ்திக்யம் ப்ரம்ம

ஆண்டுகள் கொடுமைப்படுத்தப்பட்டதற்கான ஜாதி ஏற்பாடு வந்துவிடும். அப்படித்தான் வந்துவிட்டது.

ஆனால் கீதை சொல்லும் சுயதர்மம் அதுவல்ல. இது குடும்பம் அத்தனைக்கும், பரம்பரையாக, ஜாதி என்று சொல்லப்படும் அமைப்பிலுள்ள அத்தனைபேருக்கும் ஒன்று போல வருவதல்ல.

கீதையின் சுயதர்மம் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உரியது. அதே மாதிரி குண இயல்புடையவன். எங்கு எந்த குடும்பத்தில் எந்த நாட்டில் எந்த காலத்தில் வேண்டுமானாலும் பிறக்கலாம்.

ஒருவன் இயற்கையை ரசித்துக் கொண்டும் கவிதையை எழுதிக் கொண்டும் சந்தோசமாக இருக்கிறான். கற்பனை செய்வது அவனுக்குப் பேரானந்தமாக இருக்கிறது. ஆனால் இவனுடைய கவிதையும் கற்பனையும் அவனுக்கும் அவனது குடும்பத்துக்கும் எதிர்பார்த்த அளவு சோறு போடவில்லை. வருமானம் குறைவு.

பெண்டாட்டி நச்சரிக்கிறாள். பேசமால் ஒரு வியாபாரம் தொடங்குங்கள் நிறைய வருமானம் வரும் என்கிறாள்.

அவனும் ஒரு வியாபாரம் செய்யத் தொடங்குகிறான். அவனுடைய அறிவுக்கும் திறமைக்கும் வியாபாரமும் நன்றாகவே நடக்கிறது. கற்பனை செய்வதும் கவிதை எழுதுவதும் அவனுக்கு சுய தர்மம், வியாபாரம் அவனுக்கு பரதர்மம்.

சுய தர்மத்தில் வருமானமில்லை. பரதர்மத்தில் நிறைய லாபம் வருகிறது. இந்த இடத்தில் கீதை என்ன சொல்கிறது? நிறைய வருமானம் வந்தாலும் வியாபாரம் உனக்கு நல்லதில்லை. வரும்மானம் அதிகம் இல்லாவிட்டாலும் சுய தர்மமே உனக்குச் சிறந்தது என்று சொல்கிறது. எப்படி?

என்னதான் வியாபாரத்தில் லாபம் வந்தாலும் அவனது மனம் அதில் ஒட்டாமலேயே நிற்கும். வியாபாரத்தின் காரணமாக சொல்ல வேண்டிய பொய்களும் செய்ய வேண்டிய தகிடுதத்தங்களும் அவனுக்கு மிகுந்த மன வேதனையையே கொடுக்கும். இதனால் மனதின் நிம்மதி போய்விடும்.

நிம்மதி கெட்டுப் போவதால் மன அழுத்தம் அதிகமாகி, காலப்போக்கில் வாழ்க்கையே நரகமாகி விடும்.

மாறாக சுயதர்மத்தில் வருமானம் குறைவாக இருந்தாலும மன நிம்மதியோடு நிறைவாக வாழலாம். மனதுக்குத் திருப்திக் கொடுக்கும் வேலையைச் செய்து, அதனால் மரணமடைந்தால் அதுவே சிறந்தது.

சுதந்திரப் போராட்டத்தில் ஆயிரமாயிரம் தேச பக்தர்கள் மகிழ்ச்சியோடு மரணத்தைக் தழுவினார்களே. அவர்கள் தூக்கு மேடையில் அடைந்த இன்பம் அவர்களது சுயதர்மம் கொடுத்த இன்பம் தான். நமது இயல்புக்கு ஒவ்வாத செயல்களைச் செய்யும்போது எப்போதும் நமக்கு பயமும் சந்தேகமும் இருந்து கொண்டே இருக்கும்.

சுயதர்மம் என்பதை குலத் தொழில் என்று பொருள் கொண்டதால் வந்த வினை தான் இந்து மதத்தின் இத்தனை ஜாதிக் கொடுமைகளுக்கும் காரணமாக அமைந்து விட்டது என்பது இப்பொழுது புரிந்திருக்கும்.

கீதையின் 18.42, 43, 44 வது ஸ்லோகங்கள் சொல்லும் தொழில்

"சமோ தமஸ்தப: சௌசம் க்ஷாந்திரார்ஜவ மேவ ச/
ஜ்ஞானம் விஜ்ஞானம் ஆஸ்திக்யம் ப்ரம்ம கர்ம
ஸ்வபாவஜம்//"

கீதை: 18-42

### பொருள்

மனக்கட்டுப்பாடு, புலனடக்கும், தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, கற்றறிவு, அனுபவ அறிவு, ஆன்மீக நாட்டம் ஆகியவை பிராமணனுடைய இயல்பான ஸ்வபாவங்கள்.

"சௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம்/
தானமீச்வரபாவச்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம்//"

கீதை: 18-43

### பொருள்

பராக்கிரமம், மன ஆற்றல், செயல்திறன், சாதுர்யம், போரில் புறங்காட்டாமை, கொடை, ஆளும்திறமை, ஆகியவை சத்ரியனுடைய இயல்பான ஸ்வபாவங்கள்.

"க்ருஷீ கௌரஜ்ய வாணிஜ்யம் வைச்ய கர்ம ஸ்வபாவஜம்/
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்//"

கீதை: 18-44

### பொருள்

விவசாயம், மாடுகளைக் காத்தல், வாணிபம் ஆகியவை வைசியனுக்கு இயல்பாக வரும் செயல். குற்றேவல் செய்வது சூத்திரனுக்கு இயல்பான செயல்.

ஜாதி பிராமணர்களாலும், மனுநீதியாலும் நடத்திக் காட்டப்பட்ட குலதர்மம் என்ற குழப்பம் நீங்கிய பிறகு இந்த ஸ்லோகங்களை படித்தால் திரு. வீரமணியின் அத்தனைக் குற்றச்சாட்டுகளும் இடிந்து தகர்ந்து போய்விடும்.

சூத்திரன் தமோ குணம் அதிகமான தன்மையை உடையவனாக இருப்தால், சோம்பேறியாகவும், தூக்க குணமுடையவனாகவும், சிந்திக்கும் திறனற்றவனாகவும் இருப்பான்.

தமோ குணமும், ரஜோ குணமும் அதிகமாக இருப்பதால் வைசியன் சுய நலமுடையவனாகவும், பொருள் சம்பாதிப்பதில் கவனமுடையவனாகவும் இருப்பான். ரஜோ குணம் மேலோங்கியிருக்கும் சத்ரியன் சுறுசுறுப்புடையவனாகவும், அநியாயத்திற்கு தலை வணங்காதவனாகவும் இருப்பான்.

சத்வ குணம் மேலோங்கியிருப்பதால் பிராமணன் நல்லவனாகவும், சிந்திக்கும் திறனுடையவனாகவும் இருப்பான். இந்த குணங்களும் செயல்களும் அந்தந்த வர்ணத்தவருக்கு அணிகலன்களாக இருக்கும்.

ஒரு ஊரில் ஒரு பிராமணன் இருந்தான். அவன் மிகுந்த துஷ்டனாகவும், துன்மார்க்கனாகவும் இருந்தான் என்று நமது புராணங்களில் எல்லாம் ஏராளமான கதைகள் வரும். இந்த கதைகள் எல்லாமே மூளையை அடகு வைத்து விட்டவர்கள் எழுதிய கதைகளே.

நல்லவனாக இருந்தால் தான் அவன் பிராமணன். துன்மார்க்கன் துன்மார்க்கன் தான். அவன் ஒரு நாளும் பிராமணனாக முடியாது. இவர்களாக பிராமணன் என்பவனைக் குலத்தளவில் உருவாக்கி வைத்து விட்டு கீதையில் (18-42) வரும் செயல்களை அவன் செய்ய வேண்டுமென்று சொல்வது கொஞ்சமும் ஏற்புடையதல்ல.



# 8. பெண்களைப் பற்றி கீதை (வீரமணியின் திரிபுவாதம்)

திரு. வீரமணி அவர்களின் அளவு கோல் வேடிக்கையானது. அவருக்கு ஏற்புடைய கருத்தை யாராவது சொல்லியிருந்தால் அவர்களை இந்திரன், சந்திரன் என்று புகழ்கிறார். வேறு யாராவது அவரால் மறுக்க முடியாத நியாயமான கருத்தையே சொல்லியிருந்தாலும் இவர்கள் மக்களை ஏமாற்றுவதற்காகச் சொல்கிறார்கள் என்கிறார்.

எப்படிச் சொன்னாலும் தவறு கண்டுபிடித்தே ஆக வேண்டுமென்னும் முடிவோடு செயல்படும் இவரிடம் நியாயம் கிடைக்குமென்று எதிர்பார்ப்பதே கஷ்டம் தான். கீதைக்கு எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் சரியான விஞ்ஞான விளக்கத்தைக் கொடுத்திருப்பவர் சுவாமி சின்மயானந்தர் அவர்களே.

கீதைக்குத் தவறான பொருள் சொல்லி மக்களை ஏமாற்றிய ஜாதி பிராமணர்களைப் போலிப் பண்டிதர்கள் என்றும், அறிவும் பண்பும் கெட்டுப் போனவர்கள் என்றும் கடுமையாகச் சாடியவர் இவர். இப்படிப்பட்ட சுவாமி சின்மயானந்தரின் வார்த்தைகள் என்று சிலவற்றை மேற்கோள் காட்டி தன் தலையிலேயே வீரமணி மண்ணை வாரிப் போட்டுக் கொண்டிருக்கும் விபரத்தைப் பார்ப்போம்.

"மாம் ஹி பார்த்த வியபாச்ரித்ய யேபி ஸ்யு பாபயோனய:/
ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா சூத்ரா: தேபி யாந்தி பராம் கதிம்//"

கீதை. 9-32

பொருள்

யார் இழிந்த பிறவிகளோ அவர்களும், பெண்கள், வைசியர்கள் மற்றும் சூத்திரர்களும் என்னைச் சார்ந்திருந்து நிச்சயமாக மேலான கதியை அடைகிறார்கள்.

திரு. வீரமணி சொல்கிறார். டாக்டர். ராதாகிருஷ்ணன் போன்ற அறிவு ஜீவிகள் தங்களுக்குரிய ஆற்றலைக் கொண்டு மொழியாக்கத்திலும், விளக்கத்திலும் சில திரிபு வாதங்களையும் மேற்கொண்டனர் என்கிறார். டாக்டர். ராதாகிருஷ்ணன் உண்மையைச் சொன்னாலும் அது இவருக்கு திரிபு வாதமாகத் தெரிகிறது. டாக்டர். ராதாகிருஷ்ணன் இந்த ஸ்லோகத்திற்கு கொடுக்கும் பொருளும் விளக்கமும் என்ன என்று பார்ப்போம்.

"கீதை சொல்லும் செய்தி, இனம், பால் மற்றும் ஜாதிக்கு அப்பாற்பட்டு வித்தியாசமில்லாமல் எல்லோருக்கும் பொதுவானது. பெண்களையும், சூத்திரர்களையும் வேதம் படிக்கக் கூடாதென்று தள்ளி வைப்பதை இந்த ஸ்லோகம் ஆதாரிப்பதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. கீதை சொல்லப்பட்ட காலத்திலிருந்த நிலைமையையே இந்த ஸ்லோகம் சொல்கிறது. கீதை இவ்விதமான நடைமுறையை ஏற்றுக் கொள்ளவில்லை."

டாக்டர். ராதாகிருஷ்ணன் இப்படி உண்மையைச் சொல்வதைத்தான் திரிபு வாதம் என்கிறார் வீரமணி.

கீதையின் முதல் அத்தியாயத்தில் அர்ஜுன் வாயிலாகச் சொல்லப்படும் குலம், குலதர்மம், ஜாதிக் கலப்பு போன்ற செய்திகள் அந்த காலகட்டத்தில் நடைமுறையில் இருந்தவை என்பதையும், கீதை அப்படிப்பட்ட நடைமுறையை அடித்து உடைப்பதற்காக உருவாக்கப்பட்டது என்பதையும் நாம் இந்த நூலில் முன்னாலேயே பார்த்து விட்டோம். அந்த செய்தியின் தொடர்ச்சியாகவே இந்த ஸ்லோகமும் அமைந்திருக்கிறது.

அன்றைய நிலையில் கீழானவர்கள் என்று ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த பெண்கள் வைசியர், சூத்திரர் போன்றவர்களும் இறைவனைச் சார்ந்திருந்தது உயர்ந்த நிலையை அடைய முடியும் என்று கண்ணன் சொல்கிறான்.

கீதையின் இந்த வாக்கு அன்றைய நிலையில் கீழ்ானவர்களாக நினைத்து ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த இவர்களைக் கீழானவர்கள் இல்லை என்றும் அவர்களும் மற்றெல்லோரையும் போல உயர் நிலையை அடைய முடியும் என்றும் கண்ணன் சொல்வது பாராட்டப்பட வேண்டியதே அன்றி குறை கூறத்தக்கதல்ல.

கண்ணன் பெண்களைப் பற்றி என்ன அபிப்ராயம் வைத்திருந்தான் என்பதை இன்னொரு ஸ்லோகத்தின் மூலமும் அறிய முடியும். ஸ்லோகம் 10-34 ன் இரண்டாவது அடியைப் பாருங்கள்.

கீர்த்தி: ஸ்ரீர்வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர் மேதா த்ருதி: க்ஷமா//

**பொருள்**

"பெண்களிடத்தில் கௌரவம், அகஅழகு, இனிய பேச்சு, துல்லிய நினைவு, கூரிய அறிவு, உறுதிப்பாடு, பொறுமை ஆகிய பண்புகளாக நானிருக்கிறேன்" பெண்களிடம் அமைந்திருக்கும் இத்தனை சிறப்புகளாகவும் இறைவன் இருக்கிறான் என்று கண்ணனே சொல்லும் போது, அவர்கள் கீழான பிறவிகள் என்று அவன் சொல்லியிருக்கும் வாய்ப்பே இல்லை.

**சின்மயானந்தர் மீது குறைகாணுதல்**

9-32 வது ஸ்லோகம் பற்றி ஸ்வாமி சின்மயானந்தர் சொன்னதாக ஒரு கருத்தை திரு. வீரமணி சொல்கிறார். அது, பாபயோனியிலிருந்து பிறந்தவர்கள் என்று மனித இனத்தில் பெரும்பான்மையினராக உள்ள பெண்கள், வணிகர்கள், உழைப்பாளிகள் ஆகியோரைக் குறித்து அவர்களுக்கு எதிராக கூறப்பட்ட இந்த சொற்கள் மரியாதைக் குறைவானவை. இது ஒரு தெய்வீக தீர்க்கதரிசி திருவாய் மலர்ந்தருளியதாகவே இருப்பினும், மன்னிக்க முடியாத குற்றமேயாகும் என்று

சின்மயானந்த சுவாமிகள் சொல்லியிருக்கிறார். சுவாமி சின்மயானந்தர் சொல்லியிருப்பதாக இந்த வரிகளைப் போட்டு விட்டு, கீதையின் 9-32 ஸ்லோகத்தை சுவாமிகள் ஏற்றுக் கொள்ளவில்லை, குறை சொல்கிறார் என்பது போன்ற ஒரு கருத்தை திரு. வீரமணி ஏற்படுத்த முயன்றிருக்கிறார்.

ஆனால் சுவாமி சின்மயானந்தரின் இந்த விளக்கத்தை இவர் முழுமையாகப் படிக்காததால் வந்தது தான் இந்த வினை. உண்மை என்ன? "இது ஒரு தெய்வீக தீர்க்கதரிசியின் வாயிலிருந்து வந்ததாக இருப்பினும்" ................ என்று தான் சுவாமிஜி சொல்கிறார். அதாவது கண்ணன் அப்படி சொல்லியிருந்தால் தான் அது தவறு என்பதே சுவாமிஜியின் வாதம். ஆனால் கண்ணன் சொன்னதே வேறு. சுவாமி சின்மயானந்தரின் "புனித கீதை" (ஆங்கிலம்) பக்கம் 574ல் இதே கீதை, 9-32வது ஸ்லோகத்திற்கு சொல்லியிருக்கும் விளக்கம் இதோ, "பெண்கள், வணிகர்கள், உழைப்பாளிகள் ஆகியோரைத் தாழ்ந்த பிறப்புடையவர்கள் என்று குற்றம் சாட்டுவது, மதத்தின் முக்கிய மரியாதை, சமுதாயத்திலுள்ள ஒரு சிறிய பகுதியினருக்கு மட்டுமே சொந்தம் என்பது போலாகிவிடும். இப்படிச் சொல்வது கண்ணன் ஆரம்பத்திலிருந்தே கீதையில் சொல்லி வரும் கருத்தை மறுப்பதாக ஆகி விடும்" என்கிறார்.

உண்மையில் கீதையின் இந்த ஸ்லோகத்தின் மூலம் இந்த மூன்று வகுப்பார் மீதும் அன்றைய காலகட்டத்தில் ஏற்றி வைக்கப்பட்டிருந்த பழியை மறுப்பதும் அவர்களையும் எல்லோருக்கும் சமமான அந்தஸ்த்தில் கொண்டு வருவதையும் தான் கண்ணன் செய்திருக்கிறான் என்ற அற்புதமான விளக்கத்தையும் தனது நூலிலே கொடுக்கிறார்.

ஆக பெண்களையும் மற்றவர்களையும் இந்த ஸ்லோகத்தில் குறைத்துச் சொல்லவில்லை என்பதை சுவாமிஜி விரிவாக விளக்கியிருக்கிறார் என்பதே உண்மை. அவர்

சொன்னதில் பாதியை மட்டும் எடுத்து எதிர்மறை பொருள் கொடுத்து திண்டாடுவது வீரமணிக்கு அழகல்ல.

கீதை தோன்றிய காலத்தில் பெண்கள், வைசியர், சூத்திரர் என்ற போர்வையில் சமுதாயத்தின் கணிசமான ஒரு பகுதியினரை மனுநீதியின் பெயரால் இழிந்த பிறவியினர் என்று சொல்லி ஒதுக்கப்பட்டிருந்த நிலை இருந்தது. இந்த கொடுமையினை மாற்றி அவர்களும் எந்த வகையிலும் தாழ்ந்தவர்கள் அல்ல என்பதை உலகுக்குக் காட்டவே அவர்களும் இறைவனை அடைவார்கள் என்று கண்ணன் சொல்கிறான். இதன் மூலம் அந்த புராதன காலத்திலேயே கண்ணன் செய்த மாபெரும் புரட்சி தெளிவாகிறது.



# 9. புரிந்து கொள்ள வேண்டாமா?

கீதை மிகவும் நுணுக்கமான நூல். இந்த உலகத்தைப் பற்றியும், எளிதில் உணர முடியாத இறைவனைப் பற்றியும் சொல்லும் நூல்.

இதை தப்பாகவும் பயன்படுத்தினார்கள், தவறாகவும் கூட புரிந்து கொண்டார்கள்.

உலகத்தில் வாழும் எல்லா மனிதர்களும் ஒரே அளவு அறிவு வளர்ச்சி பெற்றவர்களாக இல்லை.

அவரவர் அறிவு வளர்ச்சிக்கேற்பவே ஒவ்வொருவரும் கீதையைப் புரிந்து கொள்ள முடியும்.

அதிகம் புரிந்து கொண்டவன் அதிகம் நன்மையடைவான், புரிந்து கொள்ள முடியாதவனுக்கு கீதையினால் எந்த நன்மையும் இல்லை.

மனிதர்கள் கீதையைப் புரிந்து கொண்டாலும் இல்லாவிட்டாலும் அதனால் கீதைக்கு எந்த லாபமோ; நஷ்டமோ இல்லை.

நல்ல மருந்தை உட்கொண்டால் நோய் குணமாகும் அதை உட்கொள்ள மறுத்தால் மருந்துக்கு எந்தக் நஷ்டமுமில்லை.

ஏற்கனவே புரிந்து கொள்வதில் கஷ்டமான கீதையை, வேண்டா வெறுப்புடனும், எதிர் சிந்தனையுடனும் படிக்க முயன்றால் படிக்கிறவனுக்கு எந்த பயனும் ஏற்படாது.

மாறாக கீதையை நேசிக்கிறவர்களின் வெறுப்பு மட்டும்தான் கிடைக்கும்.

கீதையின் பத்தாவது அத்தியாயத்திற்கு விபூதி யோகம் என்று பெயர்.

இந்த உலகமே இறைவன்தான். இறைவன் இல்லாத இடமே இல்லை என்று காட்டுவதற்காகவும், நமக்கு எளிதில் புரிந்துகொள்ளும் வாய்ப்புள்ளதாகவும் காணப்படும் பொருட்களிலெல்லாம் நான் இருக்கிறேன் என்கிறான் கண்ணன்.

நம்மால் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் எல்லா சிறப்பான வஸ்த்துகளிலும் என்னைக் காண்பாயாக என்கிறான்.

"எனது தெய்வீக மகிமைகளுக்கு முடிவு இல்லை. கோடிட்டுக் காட்டுவது போல இதுவரை சிலவற்றைச் சொன்னேன்" (கீதை : 10-40) என்கிறான் கண்ணன்.

இப்படிச் சொன்ன பிறகு அவன் ஆலமரத்தில் இருப்பானா? அல்லது அரச மரத்தில் இருப்பானா? என்பன போன்ற ஆராய்ச்சி செய்தால் அது அறிவுடைமையாகாது.

கீதையின் பதினொன்றாவது அத்தியாயம் விஸ்வரூபம் தர்சன யோகம்.

பத்தாவது அத்தியாயத்தில் எல்லா பொருட்களிலும் இறைவன் இருக்கிறான் என்று காட்டியது போல 11 - வது அத்தியாயத்தில் அண்டசராசரம் அனைத்தும் இறைவனிடத்தில் இருக்கிறது என்கிறான் கண்ணன்.

அர்ஜுனன் இறைவனுடைய வி ஸ்வரூபத்தைப் பார்ப்பதாக இந்த அத்தியாயத்தில் வருகிறது.

அர்ஜுனன் கடவுளை எப்படிப் பார்க்கிறான்?

(நாம் முன்பே சொன்னது போல்) அர்ஜுனனுக்கு ஞானக்கண் கொடுக்கப்படுகிறது. ஞானக்கண் என்பது புரிந்து கொள்ளும் அறிவு என்பது தான்.

அர்ஜுனனுக்கு ஞானக்கண் கொடுப்பதாக வருவது, அவனை முகாந்திரமாக்கி உலகத்துக்கு இறைவனின் மகிமையை வெளிப்படுத்த வேண்டும் என்பதற்காகத்தான்.

இல்லையென்றால் ஞானக்கண் பெற்ற அர்ஜுனன் அப்பொழுதே இறை நிலையை அடைந்து ஜீவன் முக்தனாக ஆகியிருக்கக் கூடும். ஞானக்கண் பெற்ற அர்ஜுனன் இறைவனின் வி ஸ்வரூபத்தைக் கண்டு ஆச்சர்யப்படுகிறான்.

உண்மையில் அவன் இந்த உலகத்தைத்தான் காண்கிறான். உலக நடைமுறையை, அன்றாட செயல்பாட்டை நேற்றும், இன்றும், நாளையும் நடக்கப் போகும் காரியங்களைத்தான் விஸ்ரூபத்தில் காண்கிறான்.

ஞானிகளுக்கு உலகத்தில் அனைத்துப் பொருட்களும் கடவுள் தான். எங்கு நோக்கினும் அவர்களுக்கு கடவுளின் திருவடிவமே தெரியும். எல்லாமே அவர்களுக்குக் கடவுள்தான்.

மகா யோகி அரவிந்தர் ஒருமுறை குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டு ஆங்கிலேய நீதிபதிகளால் விசாரிக்கப்பட்டார்.

அப்பொழுது அரசு வக்கீல் சாட்சிக் கூண்டில் நின்ற போலீஸ் இன்ஸ்பெக்டரைப் பார்த்து இவர் யார்? என்று கேட்க, அரவிந்தர் அவர் பகவான் ஸ்ரீகிருஷ்ண் என்று பதில் சொன்னார். குழம்பிப் போன வக்கீல் ஆங்கில நீதிபதியைக் காட்டி அவர் யார் என்று கேட்க அவரையும் ஸ்ரீகிருஷ்ணர் என்றார் அரவிந்தர். கடைசியில் ஒரு தூணைக் காட்டி கேட்ட போது அதுவும் பகவான் ஸ்ரீகிருஷ்ணனே என்றார்.

அவருக்கு எல்லாமே இறைவனாகவே காட்சியளித்தன. அந்த நிலைதான் ஞான நிலை.

எதிரிகளையெல்லாம் நான் முன்னமையே அழித்து விட்டேன் (மயை வைதே நிகதா : பூர்வமேவ. கீதை 11 : 33) என்று கண்ணன் சொல்லுவது ஒரு ஞானியால எளிதில் புரிந்து கொள்ளக் கூடியது தான்.

மனிதர்களுடைய வினையையும் வினைப்பயனையும் அறிந்தவன் இறைவன். யார் யாருக்கு என்னென்ன வினைப்பயன் எப்பப்போ விளையுமென்பதை கடவுள் அறிந்திருந்தான் என்று வருவதைப் புரிந்து கொள்வதற்கு சாதாரண அறிவு இருந்தால் கூட போதும்.

திரு. வீரமணியின் நூலில் 212 - ஆம் பக்கத்தில் 3 வது பாராவில், 33 - வது ஸ்லோகத்தில் என்று ஆரம்பித்து சொல்லப்படும் பொருள் அப்படி அந்த ஸ்லோகம் 11-33-ல் இல்லை.

ஆனால் அவர் சொல்லும் பொருள் வேறு ஸ்லோகங்களில் வருகிறது.

அதாவது,

எல்லோருக்கும் விளையும் பயன், அவர்கள் செய்த வினையின் விளைவே தவிர அவற்றைக் கடவுள் கொடுப்பதில்லை. ஒருவன் கொல்லப்பட்டாலும் கூட அதுவும் அவனது வினையின் பயன் என்பதே உண்மை என்பது தான் கீதையின் போதனை.

ஆகவே நாம் நல்ல பயன் அடைய வேண்டுமானால் நல்ல செயல்களைச் செய்ய வேண்டும் என்பது தான் இந்து மத சித்தாந்தம். இதில் என்ன தவறு? உலகில் பூகம்பங்கள் நடக்கின்றன. பல்லாயிரக்கணக்கான மக்கள் இறக்கின்றனர். கார், ரயில், விமான விபத்துக்கள் நடக்கின்றன. இதில் எல்லாம் மக்கள் புழு பூச்சிகளைப் போல் மடிகின்றனர். இதே போல் உயிர்ப்பிராணிகளும் இலட்சக்கணக்கில் தினம்தோறும் பிறக்கின்றன. தினந்தோறும் இறக்கின்றன. இயற்கையில் இந்த செயல்களையெல்லாம் கூர்ந்து கவனிக்கின்றவன் தான் அறிவாளி.

"அமீச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா
ஸர்வே ஸகைவாவனிபால ஸங்கை : /
பீஷ்மோ த்ரோண ஸூதபுத்ரஸ்ததாஸௌ
ஸகாஸ்மதீயைரபி யோத முக்யை : //"
கீதை : 11-26.

"வக்த்ராணி தே த்வரமாணா விசந்தி
தம்ஷ்ட்ராகராலானி பயான்கானி /
கேசித் விலக்னா தசனாந்த ரேஷூ
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதை ருத்தமாங்கை: // "
கீதை : 11 - 27

**பொருள்**

இதோ திருதராஷ்டிரனுடைய பிள்ளைகள், மன்னர் கூட்டம், பீஷ்மர், துரோணர், கர்ணன், நம்மவர்களுள் முக்கிய வீரர்கள் என்று அனைவரும் பயங்கரமான வளைந்த பற்களையுடைய உனது வாயில் பரபரப்பாக புகுகிறார்கள். சிலர் தூளாக்கப்பட்ட தலைகளுடன் பல் இடுக்களில் அகப்பட்டுக் கிடக்கிறார்கள்.

இறைவனின் உடம்பு என்று சொல்லப்பட்ட விஸ்வரூபத்தில் அர்ஜூனன் இவ்வாறு கண்டான் என்று சொல்வது இந்த ஸ்லோகம். அர்ஜூனன் இந்த உலகமாகிய இறைவனின் உடலில் (விஸ்வரூபத்தில்) நடக்கும் அழிவுகளையெல்லாம் காண்கிறான். இந்த காட்சி அர்ஜூனனுக்கு மட்டுமல்ல கொஞ்சம் சிந்திக்கத் தெரிந்த யாருக்குமே எளிதில் விளங்கக்கூடியது தான், துரியோதனாதியர்களும் மற்ற எதிரிகளும் இறந்து போவதை அர்ஜூனன் முன் கூட்டியே கண்ணனின் விஸ்வரூபத்தில் பார்க்கிறான் என்பதையும், இவர்களையெல்லாம் அர்ஜூனா நான் முன்னாலேயே சம்காரம் செய்து விட்டேன், என்று கண்ணன் சொல்வதையும் அர்ஜூனன் வெறுமனே ஒரு கருவி

தான் என்பதையும் ஒரு ராணுவ கண் கொண்டு கூட நாம் பார்க்க முடியும். அதாவது எதிரிகளை முறியடிப்பதற்கு அர்ஜுனன் ஆயுதங்களைத்தான் தீட்டினான். ஆனால் கண்ணன் அறிவைத் தீட்டினான்.

பீஷ்மரைக் கொல்ல சிகண்டியையும், துரோணரைக் கொல்ல அஷ்வத்தாமாவையும், கர்ணனைக் கொல்ல குந்தி தேவியையும் கண்ணன் பயன்படுத்திக் கொண்ட முறை உலகிலேயே ராணுவ மொழியில் மிகப்பெரிய தந்திரமாக (Strategy) போர்க்கலை வல்லுநர்களால் கருதப்படுகிறது. (இது பற்றிய விபரம் "தர்மம் வெல்லுமா, எப்படி?" என்ற இதே ஆசிரியரின் நூலில் காண்க) போர்க் களத்தில் போர் செய்யும் வேலை சில நாட்களில் முடிந்து விடும். ஆனால் போருக்கான திட்டமிடும் வேலை பல மாதங்களாக செய்தாக வேண்டும். 1965 இந்திய பாகி ஸ்தான் போரில் (இப்போரில் உடனிருந்து அனுபவம் பெற்றவர் இந்நூல் ஆசிரியர்) பர்க்கி என்ற ஒரு நிலையைப் பிடிக்கும் படி இந்திய ராணுவத்தின் பிரிகேட் ஒன்றுக்கு உத்தரவு கொடுக்கப்பட்ட போது, முதல் இரண்டு மாதங்களும் வெறும் திட்டமிடுதல் வேலை மட்டுமே நடந்தது. இந்தத் திட்டமிடுதலில் எதிரியின் ஆயுத பலம், பின்னணி பலம், ஆள் பலம், எதிரி படை வீரர்களின் உணவுப்பழக்கம், கலாச்சாரம், ஆன்மீகப் பழக்கம் அத்தனையும் அலசி ஆராயப்பட்டன.

இந்த ஆராய்ச்சியின் மூலம் சேகரித்த விபரங்களின் அடிப்படையில் தாக்குதல் நடத்தி ஒரே நாள் இரவுக்குள் பர்க்கி என்ற பாகிஸ்தானிய நிலை பிடிக்கப்பட்டது. இது போல போரில் சக்தி வாய்ந்த எதிரிகளை வெல்வதற்கு அவர்களது அத்தனை குணாதிசயங்களையும் அலசி ஆராய்வதும், அவர்களது வாழ்க்கை சரித்திரத்தைத் தெரிந்து கொள்வதும் மிக மிக முக்கியம். இப்படி கண்ணனால் அலசி ஆராய்ச்சி செய்யப்பட்டதன் விளைவு தான் பீஷ்மர், துரோணர்

போன்றோர் கொல்லப்படக் காரணம். இவர்களைப் போர்க்களத்தில் கொன்றவன் அர் ஜுனனாக இருந்ததாலும், சரியாகத்திட்டமிட்டுப் போரின் முடிவை எழுதியவன் கண்ணன் என்பதால் தான்.

"மயை வைதே நிகதா : பூர்வ மேவ
நிமித்த மாத்ரம் பவ ஸவ்யசாசின் /"

கீதை : 11-33

(இவர்களை எல்லாம் நான் முன்பே கொன்று விட்டேன், நீ வெறும் கருவியாக மாத்திரம் இருந்து செயல்படு) என்று கண்ணன் சொல்வதாகவும் பொருள் கொள்ளலாம். அதர்மத்தை அழிக்க வேண்டுமென்று முடிவெடுத்த பிறகு அரை குறை முயற்சி கூடாது என்பதையே, கண்ணனின் இந்த செயல் சுட்டிக் காட்டுகிறது. இன்றைய தினம் தீவிரவாதிகளுக்கும் பெரும் கொலைகாரர்களுக்கும் சமூக விரோதிகளுக்கும் வக்காலத்து வாங்கிப் பேசும் வக்கிர புத்திக்காரர்கள் மட்டுமே கண்ணனின் செயலில் குறை காண முடியும்.

**முரண்பாடுகள்**

முரண்பாடுகள் என்ற தலைப்பில் கீதை ஸ்லோகம் 18-59 மற்றும் ஸ்லோகம் 3-33 ஆகியவற்றில் சொல்லப்பட்ட கருத்துக்கள் கர்ம யோகத்துக்கு ஏற்புடையதாக இல்லையே என்கிறார். திரு. வீரமணி நல்ல சந்தேகம்தான்.

"யதஹங்கார மா்ச்ரித்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே /
மித்யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி//"

கீதை : 18-59.

(அகங்காரத்தின் பொருட்டு போர் செய்ய மாட்டேன் என்று நினைத்தால் உனது அந்த முடிவு வீணானது. உன் மன இயல்பே உன்னைப் போரில் ஈடுபடுத்திவிடும்.)

"ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஞானவானபி /
ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி //"

கீதை 3-33.

அறிவாளியும் தன் மனப்போக்கிற்கு ஏற்பவே செயல்படுகிறான். மனிதர்கள் தங்கள் மன இயல்பையே பின்பற்றுகின்றனர். அடக்குவது என்ன செய்யும்?)

ஒரு உண்மையான சந்நியாசியைப் பார்த்து (சத்துவ குணம் மேலோங்கியனைப் பார்த்து) போர் செய் என்றோ, அப்படி செய்ய மறுத்தால் உன் இயல்பே உன்னைக் கட்டாயப்படுத்தி போர் செய்ய வைத்துவிடும் என்றோ கண்ணன் சொல்லவில்லை. அதே போல் தமோ குணம் மேலோங்கிய நிலையில் உள்ள ஒருவனிடமோ அல்லது வைசிய குணம் படைத்த ஒருவனிடமோ கண்ணன் போர் செய்யச் சொல்லவில்லை. ஒரு விஷயத்தை நாம் நன்றாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் அது. முதலில் போர் செய்யச் சொல்லித் தூண்டியது கண்ணனில்லை. இரு தரப்பார்க்கும் போர் நிச்சயம் என்று முடிவாகிவிட்ட பிறகு தர்மம் இருக்கிறது என்று கருதியதால் கண்ணன் பாண்டவர் பக்கம் நின்றான். எல்லா ஏற்பாடுகளையும் செய்து போர்க்களத்துக்கு வந்து விட்ட பிறகு போரில் இருந்து பின்வாங்குவது பற்றி அர்ஜுனன் மட்டுமே முடிவெடுக்கக் கூடாது என்பது தான் கண்ணனின் வாதம். இந்த போரில் இன்னும் எத்தனையோ தலைவர்கள் ஈடுபட்டிருக்கும் போது போர் செய்ய வேண்டாம் என்று அர்ஜுனன் முடிவு செய்தால் நியாயமாகாது. அவன் அனைவரையும் கலந்தாலோசித்து ஒரு முடிவுக்கு வந்திருக்க வேண்டும்.

அர்ஜுனன் அப்படிச் செய்யவில்லை. ஏன்? தன்னையே, தன் இயல்பையே தன் பக்கமுள்ள தர்ம நியாயத்தையே கூட அவன் கலந்தாலோசிக்கவில்லை. எதிர்தரப்பில் தன்னுடைய

நெருங்கிய சுற்றத்தாரைப் பார்த்துவிட்டதால் சம நிலை தவறிப்போன அர்ஜுனனின் மனம் குழம்பிய நிலையில் கண்ணனைச் சரணடைந்து ஆலோசனைக் கேட்கிறான். அர்ஜுனனது இயல்பு ரஜோ குணம் நிரம்பியது. துடிப்பும் வேகமும், செயல்திறனும், ஆண்மையும் கொண்டது. அவனால் அநியாயத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியாது.

தர்மத்தை நிலை நாட்டியே ஆக வேண்டும் என்னும் உலகாயத எண்ணம் நிறைய உடையவன் அவன். போர் வேண்டாமென்று அவனது மனதில் தோன்றிய எண்ணம் முற்றிலும் தற்காலிகமானது. பிரசவ வைராக்யம், ஸ்மசான வைராக்யம் எல்லாம் தற்காலிகமானவை என்று சொல்வார்கள். குழம்பிய மனநிலையில் இருக்கும்போது முடிவு யார் எடுத்தாலும் அது சரியானதாக இருக்க முடியாது.

அதுவும் பற்றுதலுக்கும் பாசத்துக்கும் அடிமையாகிப் போன நிலையில், அர்ஜுனன் போர் செய்ய மறுப்பதால் அவனுக்கு நியாயத்தையும் நிதானத்தையும் ஊட்ட வேண்டியது கண்ணனுடைய கடமையாகிறது. அர்ஜுனனது இயல்பே அவனைப் போரில் ஈடுபடுத்திவிடும் (18-59) என்று கண்ணன் சொல்வதன் பொருள் இப்பொழு புரிந்திருக்கும். அவசர வேகத்தில் அவனுடைய அகங்காரத்தினால் அல்லது தான் என்னும் உள்ளுணர்வினால் மேலோட்டமாக அவன் எடுக்கும் முடிவு நிலையானதல்ல. அவனுடைய இயற்கையான இயல்புதான் அவனை நிரந்தரமாக வழி நடத்தும்.

ஒரு வேளை உணர்ச்சி வேகத்தில், சுற்றத்தாரை கொல்லக் கூடாது என்று போரிலிருந்து விலகி, காட்டில் சென்று அவன் வாழ்ந்தாலும், துரியோதனின் அக்கிரம செயல்களைக் கேட்டு அவனால் பல காலம் சும்மா இருக்கவே முடியாது. அது தான் ரஜோ குண இயல்பு. இதைத்தான் கண்ணன் ஸ்லோகம் 3-33 லும் 18-59 லும் சுட்டிக்காட்டுகிறான்.

இதே இடத்தில் திரு. வீரமணி அவர்கள் இறைவனின் முடிவு, கர்ம யோகம் போன்ற வார்த்தைகளைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருக்கிறார். பகுத்தறிவாளர்களின் அறிவுப்பூர்வமான வினாக்களுக்கு ஆத்திகர்கள் சரியான விளக்கம் கொடுப்பதில்லை என்றும் குறைபட்டுக் கொள்கிறார். அவருடைய வினா "எல்லாம் இறைவனால் முன்பே முடிவு செய்யப்பட்ட படிதான் நடக்குமென்றால் கர்மயோகம் என்ற கோட்பாடு எப்படி உண்மையானதாகும்?" என்பது தான்.

இதுவும் நல்ல சந்தேகம் தான். மூடத்தனமாக வெறும் நம்பிக்கையின் அடிப்படையில் மதத்தை நம்பி விடும் எத்தனையோ இந்துக்களை விடவும் வீரமணி போன்ற பகுத்தறிவாளர்களின் இந்த கேள்வி பாராட்டுக்குரியது தான். எல்லா வல்லமையும் உடையவர் என்பதுதான் கடவுளை நம்புகின்றவர்கள் அவருக்குக் கொடுக்கும் விளக்கம். கடவுளால் ஏதாவது ஒரு காரியம் முடியவில்லையென்றால் அல்லது அது அவருக்குத் தெரியவில்லையென்றால் நாம் அவரை கடவுள் என்று ஏற்றுக்கொள்ள மாட்டோம். கடவுள் படைத்தது இந்த உலகம். இயற்கை தான் இந்த உலகத்தைப் படைத்தது என்று நாத்திகர்கள் சொன்னால் அப்பொழுது அந்த இயற்கைக்குத்தான் கடவுள் என்று பெயர் என்று நாம் சொல்லுவோம்.

கடவுள் என்று ஒருவர் தேவையே இல்லை. உயிர் என்பது கிடையாது எல்லாம் இராசயன மூலக்கூறுகளும் DNA போன்ற உயிர்த் தொகப்புகளும் சேர்ந்து தான் இந்த உலகம் உருவாகிறது என்று நாத்திகர்கள் சொன்னால் அந்த இரசாயன மூலக்கூறுகளையும், DNA உயிர்த் தொகுதிகளையும் படைத்தவன் இறைவனே என்று நாம் சொல்லுகிறோம். ஆக கடவுளால் முடியாதது என்ற கருத்து ஏற்புடையதல்ல. இந்த உலகத்திலுள்ள அனைத்துமே மாறிக் கொண்டிருக்கின்றன. இந்த உலகமே மாற்றம் தான். (இது தான் புத்த மதக் கொள்கை)

இப்படி மாறிக் கொண்டிருக்கும் உலகத்தை உலகிலுள்ள மாற்றத்துக்குட்பட்ட ஒருவன் தயவால் உருவாக்க முடியாது. ஒரு எஞ்சினை இன்னொரு எஞ்சினால் உருவாக்க முடியாது. ஒரு கம்ப்யூட்டரை இன்னொரு கம்ப்யூட்டர் உருவாக்க முடியாது. இவற்றைச் செய்ய ஒரு உயிருள்ள மனிதன் வேண்டும். இது போல உயிருள்ள மனிதனைப் படைக்க மனிதனின் நிலைகள் அனைத்தையும் கடந்த சர்வ சக்தி வாய்ந்த ஒன்றால் தான் முடியும். ஒரு கம்ப்யூட்டரை வடிவமைப்பதற்கு எவ்வளவு அறிவாற்றல் தேவைப்படுகிறது. இதை ஒப்பு நோக்கும் போது கம்ப்யூட்டரையும் விட பலகோடி மடங்கு ஆச்சர்யமும், நுணுக்கமும் உடைய ஒரு மனித உடலையும், செயலையும் உயிரையும் படைப்பதற்கு எப்படிப்பட்ட அறிவாற்றல் தேவைப்பட்டிருக்கும்? இப்படிச் சிந்தித்துப் பார்ப்பவர்களுக்கு கடவுள் இருப்பது நிச்சம் தெரியும்.

**கர்ம யோகம்:**

செய்கின்ற வேலையைச் சிறப்பாகச் செய்வதற்கு கர்ம யோகம் என்று பெயர். ( யோக : கர்மஸு கௌசலம் - கீதை 2-50)

"ஸமத்வம் யோக உச்யதே" (கீதை 2-48)

அதாவது "சமநிலை, யோகம் என்று சொல்லப்படுகிறது" இந்த உலகில் பிறந்துவிட்ட நாம் சில இயற்கை குணங்களோடு பிறந்திருக்கிறோம். நம்முடைய வினை பயனால் நம்மோடு கூடவே பிறந்திருக்கின்ற நமது குண இயல்புகளின் படி சிறப்பாக சுய நலமில்லாமல் பலனைக் கருதாமல் செயல்பட்டால் அதற்கு கர்ம யோகம் என்று பெயர்.

நடிகர் சிவாஜி கணேசன் இருந்தார். அவருடைய இயல்பு நடிப்பு, நடிப்பதை விட்டு விட்டு இவர் கலெக்டர் உத்தியோகம் பார்த்திருந்தால் அவரது பிராராப்த கர்மம்

கரைந்திருக்காது. தன்னுடைய இயல்பை நடிப்பாக வெளிப்படுத்தி சிறப்பாக செய்ததால் அவர் அந்தத் தொழிலில் இமயத்தை எட்டினார். அவரது இயல்பினால் அமைந்த தொழிலைக் கடவுளாகவே நினைத்து செயல்பட்டார்.

ஆனால், அவர், தான் செய்த தொழிலை பலன் எதிர்பார்த்து செய்தார். பலனை எதிர்பாராமல் உலக நன்மைக்காகவே சுயநலமின்றி அவரது தொழிலை இறைவனுக்கு அர்ப்பணமாகச் செய்திருந்தால் அப்பொழுது அவர் ஒரு கர்மயோகி.

சுவாமி சித்பவானந்தர் இருந்தார். எத்தனையோ கல்வி ஸ்தாபனங்களை உருவாக்கினார். மக்களுக்கெல்லாம் ஆன்மீகத்தை போதித்தார். அவர் செய்தது அத்தனையும் சிறப்பாகச் செய்தார். ஆகவே அவர் ஒரு சுத்தமான கர்மயோகி. நீ செய்த பாவத்தின் பலனை நீ அனுபவத்தே தீர வேண்டும் என்பதுதான் கீதையின் கோட்பாடு. இதுபோல நீ செய்த புண்ணியத்தின் பலனையும் நீ அடைந்தே தீருவாய் என்பதும் இந்து மதத்தின் உறுதியான கோட்பாடு.

செய்த தவறுக்குத் தண்டனை உண்டு என்று சொல்லும்போது தவறு செய்தவர்களுக்கு அதை ஏற்றுக் கொள்வது கஷ்டமாகத்தான் இருக்கும். மக்களும் அரசாங்கமும் கொடுக்கும் தண்டனையிலிருந்து வேண்டுமானால் தப்பித்து விடலாம். ஆனால் இறைவன் கொடுக்கும் தண்டனையிலிருந்து தப்பவே முடியாது என்பதுதான் இந்து மதம்.

நீ கடவுளை நம்பினாலும் நம்பாவிட்டாலும் செய்த பாவத்துக்கு தண்டனை நிச்சயம் உண்டு. புத்தரும், வர்த்தமான மகாவீரரும், கடவுளைப்பற்றி சொல்லா விட்டாலும் தர்மமும் நீதியும் நேர்மையுமே சிறந்தது என்கின்றனர். நாம் அவர்கள் சொல்லும் தர்மம், நீதி, நேர்மை இவற்றிற்கே கடவுள் என்று பெயர் கொடுத்திருக்கிறோம்.

சாங்கிய கோட்பாட்டின் ஆசிரியர் கபில முனிவரும், அறிவே எல்லை என்கிறார். நாம் அவர் சொல்லும் அறிவையே கடவுள் என்கிறோம்.

"ஸர்வம் கர்மாகிலம் பார்த்த க்ஞானே பரிஸ மாப்யதே"

கீதை : 4-33

(எல்லா செயல்களும் ஞானத்தில் முடிவடைய வேண்டும்) நாம் ஆற்றும் கடமை நம்மை ஞானியாக்கினால் அதற்கு கர்ம யோகம் என்று பெயர். யாராவது ஞானியாக ஆவது தவறு என்று சொல்வார்களா? இறைவன் எல்லாவற்றையும் முன்பே முடிவு செய்துவிட்டான் என்றால், அவனுக்கு லஞ்சம் கொடுத்து சரி செய்து விடலாம் என்று நினைத்து விடக் கூடாது. நமக்கு வாய்க்கும் இன்பமும் துன்பமும் நமது செயல்களின் பயனே என்னும் போது, இங்கே கடவுள் முடிவெடுக்க வேண்டிய அவசியமே இல்லையே. நமக்கு நல்லது நடக்க வேண்டுமானால் நாம் நல்ல வினைகளைச் செய்ய வேண்டும். நாம் கெட்டது செய்தால் நமக்குக் கெட்டதே நடக்கும்.

ஆக நாம எப்படி இருக்க வேண்டுமென்பதை நாமே முடிவு செய்து கொள்ளலாம் என்பது தான் கீதை. கடவுள் பாரபட்சமில்லாதவன். ஓர வஞ்சனை அவனிடம் கிடையாது. நம்மில் ஒருவரை எல்லா இன்பத்துடனும், இன்னொருவரை துன்பத்தில் அடிபடும் படியும் பிறப்பிக்க வேண்டிய அவசியம் இறைவனுக்கு இல்லை.

அவன் எல்லோருக்கும் சர்வ நிச்சயமாக நியாயமே வழங்குவான். ஆனாலும் கூட உலகில் பல்வேறு விதமான துன்பங்களும் இன்பங்களும் இருப்பது உண்மை தானே? இறைவனின் நியாயமான ஆட்சியில் எப்படி ஒருவருக்கு இன்பமும், ஒருவருக்குத் துன்பமும் இருக்க முடியும்?

உலகிலுள்ள ஏற்ற தாழ்வுகளுக்கு எல்லோரையும் சமமாக பாவிக்கும் இறைவன் காரணமாக இருக்க முடியாது. ஆகவே நமது இன்பத்திற்கும், துன்பத்திற்கும் நாம் மட்டுமே தான் காரணமாக இருக்க முடியும். இந்த உலகின் நடைமுறைக்கு இப்படியொரு விளக்கத்தையன்றி வேறெதையும் சொல்லமுடியாது. நமக்கு நல்ல நண்பனும் நாமே, எதிரியும் நாமே என்று கீதை சொல்கிறது. (கீதை 5-6)

"உத்தரேதாத்மனாத்மானம் நாத்மான மவசாதயேத் /
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மன : //"

## பொருள்

உன்னை நீயே உயர்த்திக் கொள். "உன்னை நீயே இழிவு படுத்தாதே. நீயே உனக்கு நண்பன். நீயே உனக்குப் பகைவன்" இந்த வாழ்க்கையில் நடப்பவை எல்லாமே வினைப்பயன் என்றால் நம்முடைய சுய முயற்சியில் எதுவுமே நடக்காதா? என்று கேட்கலாம்.

நம்முடைய சுய முயற்சியால் நாம் இறை நிலையை அடையலாம். இதை கீதை.

"இந்த்ரியஸ் யேந்த்ரியஸ் யார்த்தே ராகத்வேஷௌ
வ்யவஸ்திதௌ/
தயோர் ந வசமாகச் சேத் தௌ ஹ்ய ஸ்ய பரிபந்திநௌ//"
(கீதை 3-34)

## பொருள்

பொருட்களில் விருப்பும் வெறுப்பும் கொள்வது புலன்களின் இயல்பு. யாரும் அவற்றிற்கு வசப்படக்கூடாது. ஏனெனில் அவை மனிதனின் எதிரிகள். நம்முடைய புலன்களின் மூலம் நமக்கு விருப்பு, வெறுப்புகள் உண்டாகின்றன. இந்த விருப்பு வெறுப்புக்கள் நமது ஸ்வபாவத்தால் உண்டாகின்றன. இந்த ஸ்வபாவமே நமது

இயல்பு, பிறவிக் குணம் என்று பார்த்தோம். நமது பிறவிக்குணமே நமது வினை பயனும் என்றும் பார்த்தோம். இந்த வினை பயன் நம்மைக் கட்டுப்படுத்தினாலும் நாம் அதன் வசமாகி விடாமல் அவற்றிற்கு அடிமையாகி விடாமல் இருக்க வேண்டும்.

விருப்பு வெறுப்புகள் ஸ்வபாவத்தால் உண்டானாலும் அவற்றை சரியாக எடை போட்டு விவேகத்துடன் செயல்படும் சுதந்திரம் மனிதப்பிறவிக்கு இருக்கிறது. இயல்பை மீறுவது கடினம். ஆயினும் அந்த இயல்பினால் உண்டாகும் செயலையே பற்றற்று பலனை எதிர்பார்க்காமல் தியாக மனப்பான்மையுடன் செய்யும் போது, நாம் வினை பயனையும் மீறி செயல்படும் நிலையை அடைகிறோம். இந்த செயல்முறைக்குத் தான் கர்ம யோகம் என்று பெயர்.

மனித பிறவியில் நாம் நமது பாவச்சுமைகளை அதிகமாக்கவும் செய்யலாம்.

பாவ மூட்டைகளை புதிதாக சேர்க்காமல் முன் பிறவிகளில் இருந்து கொண்டு வந்தவற்றைக் கரைக்கவும் செய்யலாம். இப்படி கொண்டு வந்த பாவ மூட்டைகளை இந்தப் பிறவியில் கரைத்து இல்லாமல் ஆக்குவதற்கான உபாயம் தான் கர்ம யோகம்.

மின்சாரம் மிகக்குறைந்த நஷ்டத்தோடு வெள்ளிக் கம்பியில் பாயும், அதைவிடக் கொஞ்சம் அதிக நஷ்டத்தோடு (Resistance) செம்புக்கம்பியிலும் அதற்கு அடுத்த படியாக அலுமினியக் கம்பிகளிலும் பாயும். இதே மின்சாரத்தை இரும்புக் கம்பியில் விட்டால் மின்சாரம் கடந்து செல்வதற்குப் பதிலாக சூடாகி இரும்புக் கம்பி பழுத்து உருகி விடும். மனிதனுடைய பூர்வ ஜென்ம பாவ மூட்டைகள் ஸ்வதர்மம் என்ற வெள்ளிக் கம்பி மூலமாக பாய்ச்சப்படும் போது, எல்லாம் வெளியேறி கரைந்து விடும். மாறாக பிற தர்மம் எனப்படும்

இரும்புக் கம்பி மூலமாக வெளியேற்ற முயன்றால் பாவ மூட்டை வெளியேறாதது மட்டுமல்லாமல் இரும்புக் கம்பி உருகுவது போல நாம் செய்யும் வினை அதிகமாகி புதிய பாவ மூட்டைகளை உருவாக்கி விடும்.

நம்முடைய சுயதர்மத்தையே நாம் செய்யும் போது, நமக்கு சந்தோசமும் மன நிம்மதியும் உண்டாகும். அதுவே இறைவனுக்கு அர்ப்பணமாக, கர்ம யோகமாகச் செய்யும் போது நாம் வினை பயனிலிருந்து முற்றிலுமாக விடுபடுகிறோம் என்பதுதான் கீதை சொல்லும் உபாயம்.

கீதையின் இந்த சிந்தனை அவ்வளவு எளிதாகப் புரிந்து விடக் கூடியதல்ல. ஏதோ சிலருக்கு இந்த சிந்தனைப் புரியவில்லை என்பதற்காக இது பொய்யானதும் இல்லை. கர்ம யோகம் என்பது அறிவினால் புரிந்து கொள்வதை விட, செயலினால் பழக்கத்திற்கு கொண்டு வந்து அனுபவத்தினால் புரிந்து கொள்வதே எளிது என்று பெரியோர்கள் சொல்கிறார்கள்.

**ஞானத்தினால் வினை பயன் எரிந்து சாம்பலாகும்.**

எல்லாமே வினை பயனால் தான் நடக்கிறது என்றால், நம்முடைய முயற்சி என்று எதுவும் இல்லாமல் போய் விடுகிறதே என்று சந்தேகப்படுகிறவர்களுக்கு கண்ணன் ஆணித்தரமாக பதில் சொல்கிறார் பாருங்கள்,

"யதை தாம்ஸி ஸமித்தோக்னிர் பஸ்மஸாத் குருதே அர்ஜுன/
க்ஞானாக்னி : ஸர்வ கர்மாணி பஸ்மஸாத் குருதே ததா //"
கீதை: 4-37.

பொருள்

அர்ஜுனா! கொழுந்து விட்டெரியும் நெருப்பு, விறகுகளை எப்படி சாம்பலாக்குகிறதோ அப்படி ஞானமாகிய நெருப்பு எல்லா வினை பயன்களையும் சாம்பலாக்குகிறது.

வினைப்பயன் தான் பிறவிக்குக் காரணம் உண்மையான ஞானம் கிடைப்பதால் பிறவியே இல்லாமல் போகிறது.

கர்மயோகம், ஒருவனை ஞானத்தில் கொண்டு போய் சேர்க்கும். ஞானம் அவனைப் பிறவித்தளையில் இருந்து விடுவிக்கும். ஞானம் பெறுவது என்பதும், இறைவனைப் புரிந்து கொள்வது என்பதும் ஒன்றுதான்.

இறைவனை அடைவதற்காக வேண்டுமானாலும், இந்த உலக வாழ்வில் துன்பமில்லாமல் வாழ வேண்டுமானாலும் சரி, அதற்கு ஒரே வழி நம்மிடம் உள்ள அறியாமையை அகற்றி ஞானம் பெறுவது ஒன்றே வழி.

## கண்ணன் சொன்ன காரணங்கள் நியாயமானவையா?

"நியாயமான கேள்விகள்" என்ற தலைப்பில் கண்ணன் சொல்லும் போர் செய்யத் தேவையான காரணங்கள் ஏற்புடையவை அல்ல என்று திரு. வீரமணி வாதிடுகிறார்.

அவற்றை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

**முதலில்:** ஆத்மாவின் இயல்பு பற்றிக் கூறிய கண்ணன், ஆத்மா அழியாதது : பிறவாதது : இறவாதது : மாறாதது : உடம்பு அழியும் போதும் ஆத்மா அழிவதில்லை. மனிதன் கிழிந்து போன ஆடையை மாற்றிக் கொள்வது போல ஆத்மா இந்த உடலை மாற்றிக் கொள்கிறது. (கீதை ஸ்லோககங்கள் அத்தியாயம் 2-18, 22, 23, 24, 25 etc.) என்று சொல்லி, அழிந்து போகும் இந்த உடலுக்காக வருந்துவது தகாது என்று சொல்கிறார்.

இதற்கு திரு. வீரமணி அவர்கள், "ஆத்மா அழியாதது என்றே வைத்துக் கொள்வோம். இன்றோ நாளையோ இந்த உடல் அழியப் போவதும் உண்மைதான். அதற்காக மற்றவர்களைக் கொல்வது எப்படி நியாயமாகும்? என்றோ, ஒரு

நாள் கௌரவர்கள் இயற்கை மரணம் அடையவேண்டியவர்கள் தானே என்பதே. அர்ஜுனன் அவர்களைக் கொல்ல வேண்டும் என்பதற்கு எப்படி நியாயமான காரணமாகி விடும்?" என்று வாதிடுகிறார்.

இந்த வாதத்தில் திரு. வீரமணி அவர்கள் தன் மனசாட்சிக்கு விரோதமாகப் பேசுகிறார் என்றுதான் நான் சொல்லுவேன்.

போர் என்று முடிவு செய்யப்பட்டு விட்டது. கண்ணனைத் தேர் ஓட்டும் சாரதியாக இருக்க வேண்டும் என்று அர்ஜுனன் கேட்டுக் கொண்டுள்ளான்.

துரியோதனக் கூட்டத்தாரை இனிமேலும் விட்டுவைக்கக் கூடாது என்று முடிவும் செய்யப்பட்டாகி விட்டது. அதர்மம் அழிக்கப்பட வேண்டும் என்று முடிவாகி விட்டது.

இந்த நிலையில் அர்ஜுனன் தன் தாத்தா மீதும், ஆசிரியர் மீதும், சொந்த பந்தங்கள் மீதும் எப்படி அம்பெய்வேன், அவர்கள் மீது அம்பு பட்டால் எனது மனம் வலிக்குமே என்பது போல உணர்ச்சி வசப்பட்டவனாகி விடுகிறான்.

அதர்மம் அழிக்கப்பட வேண்டுமானால் துரியோதனாதியர்கள் கொல்லப்பட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டு விட்ட பிறகு அவர்களைக் கொல்வதற்காக அம்பு போட்டால் அவர்களது உடலில் காயம் படுமே, வலிக்குமே, உடல் அழிந்து போகுமே, தாத்தா செத்துப் போவாரே என்கிறான். இது தான் போர்களத்தில் ஒப்பாரி வைப்பது என்பது.

இந்திய பாராளுமன்றத்திற்குள் பாகிஸ்தானிய தீவிரவாதிகள் புகுந்து விட்டார்கள். அவர்களது செயலை முறியடிக்க அவர்கள் கொல்லப்பட வேண்டும் என்று நமது

இராணுவம் செயல்படுகிறது. இந்த நேரத்தில் திரு. வீரமணி போன்றவர்கள், சரி தான் விடப்பா, இந்தத் தீவிரவாதி எப்போதாவது சாகத்தானே போகிறான், இவனுடைய உடல் அப்போது அழிந்து விட்டுப் போகட்டுமே, இப்போது ஏன் போய் அந்தத் தீவிரவாதிகளின் உடம்பைத் துப்பாக்கியால் சுட்டு அழிக்க வேண்டும் என்பாரா?

திரு. வீரமணியிடம் ஆலோசனை கேட்டால் இந்திய பாராளுமன்றமும், உள்ளே இருக்கும் 500 பாராளுமன்ற உறுப்பினர்களும், மந்திரிகளும் தப்புவார்களா? இந்திய நாட்டின் மானம் தான் தப்புமா?

அதுபோல துரியோதனாதியர்கள் சொல்லப்பட வேண்டியவர்கள். அவர்களைக் கொல்வதற்காகப் போர்க்களத்துக்கும் வந்தாகி விட்டது. இனிமேலும் காலம் தாழ்த்தினால், அவர்களது அக்கிரமம் எல்லை மீறி விடும். ஆகையால் அவர்கள் இந்த போரில் கொல்லப்பட்டே ஆக வேண்டும் என்று நிர்ப்பந்தம் உண்டாகியிருக்கிறது.

இந்த நேரத்தில் அவர்களது உடலுக்காக, உறவுக்காக மட்டும் வருந்துகின்ற அர்ஜுனனிடம் தான், இந்த உடல் அழிந்தாலும் ஆன்மா அழியாது என்கிறார் கண்ணன்.

அறிவு பூர்வமான இந்த விவாதத்தைப் புரிந்து கொள்ள மாட்டேன் என்று மறுப்பதால் திரு. வீரமணி தன்னை யார் என்று அடையாளம் காட்டிக் கொள்ள விரும்புகிறாரா?

இரண்டாவது: சத்திரியனுக்கு போரிடுவது கடமை என்று ஒத்துக் கொண்டாலும். தகுந்த காரணம் இன்றி அவன் போரிட்டே தீர வேண்டுமா? அப்படிச் செய்வது நியாயமாகுமா? இதுதான் அவரது இரண்டாவது கேள்வி (இதற்குப் பதில் 'பாண்டவர் பக்கம் நியாயம் உண்டா? என்ற தலைப்பில் சொல்லப்பட்ட கருத்தைப் பார்க்கவும்)

இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றது நியாயம் என்று சொல்லுபவர்களுக்கும், திரௌபதியை நடுச்சபையில் விட்டுத் துணியை உரியச் சொன்ன வக்கிர புத்தியுள்ள துரியோதனனுக்கும் வக்காலத்து வாங்குபவர்களுக்கும் அதர்மத்தை அழிக்க அர்ஜுனன் போர் செய்வது துன்பத்தைத்தான் கொடுக்கும்.

துரோகத்துக்கும், பெண் கொடுமைக்கும், பொய், ஏமாற்று, வஞ்சகம் போன்றவற்றிற்கும் காரணமான துரியோதனனைக் கொன்றால் திரு. வீரமணிக்கு ஏன் வலிக்கிறது.

தன் தகப்பன் குருடனாகப் பிறந்ததால் அஸ்தினாபுர ஆட்சி, சித்தப்பா பாண்டுவுக்குப் போகிறது. பாண்டுவும் செத்துப் போகிறான். அதன் பிறகு குருடனான திருதராஷ்டிரனே வேறு வழியில்லாமல் அரசனாக்கப்படுகிறான்.

உண்மையில் ஆட்சிப் பொறுப்பை பார்த்துக் கொண்டவர் திருதராஷ்டிரரின் பெரியப்பாவான பீஷ்மாச்சாரியார். இந்த நேரம் இளவரசர்கள் அனைவரிலும் மூத்தவனான தர்மபுத்திரனுக்கு இளவரசுப் பட்டத்தை ராஜாவான திருதராஷ்டிரனும் பீஷ்மரும் சேர்ந்தே கட்டுகின்றனர்.

பஞ்ச பாண்டவர்கள் பட்டம் கேட்டு அலையவில்லை. அது தானாக அவர்களைத் தேடி வருகிறது. மேலும் மிகச் சிறியதாக இருந்த அஸ்தினாபுரம் இராஜ்யத்தைப் பெரிதாக விரிவடையச் செய்தவன் தருமனின் தந்தையான பாண்டு தான். துரியோதனனின் தறுதலை குணத்தை அறிந்தே தர்ம்புத்திரனை இளவரசனாகத் தேர்ந்தெடுக்கின்றனர் பொறுப்பில் உள்ளவர்கள்.

ஆனாலும் துரியோதனன் திட்டமிட்டு பஞ்ச பாண்டவர்களையும், குந்தியையும் அரக்கு மாளிகையில் குடியேற்றி உயிரோடு வைத்து நட்ட நடு இரவில் தீயைக் கொளுத்துகிறான். பாண்டவர்கள் அதிலிருந்து தப்பிப் பிழைத்து பாஞ்சால நாட்டு இளவரசியையும் மணம் செய்கின்றனர்.

அவர்கள் உயிரோடிருப்பதை அறிந்த திருதராஷ்டிரன், பாண்டவர்களையும் பாஞ்சாலியையும் அழைத்து வந்து அவர்களைத் தனியாக குடி வைக்க நினைக்கிறான்.

வெறும் காடாகப் பாழடைந்து கிடந்த இந்திரப் பிரஸ்தம் பகுதிக்கு அனுப்பி, அங்கிருந்து பிழைத்துக் கொள்ளுங்கள் என்கிறான்.

அங்கு சென்ற பாண்டவர்கள் தங்களுக்கென ஒரு மிகப்பெரிய சாம்ராஜ்யத்தை உருவாக்கி விழா எடுக்கின்றனர்.

இதைக் கண்டு பொறாத துரியோதனன், அவர்களை சூதுக்கு அழைத்து திரௌபதியை அவமானப்படுத்தி சூதாட்டத்தின் சட்டதிட்டப்படி பாண்டவர்களை காட்டுக்கு அனுப்புகிறான்.

கொடுத்த வாக்குக்குக் கட்டுப்பட்டு 13 ஆண்டுகள் காட்டில் வாழ்ந்த பிறகு திரும்பி வந்து எங்கள் சொத்தைக் திருப்பிக்கொடு என்றால் முடியாது என்கிறான் துரியோதனன்.

இந்த துரியோதனனுக்காகத்தான் பரிந்து பேசுகிறார். திரு. வீரமணி.

அயோக்கியர்களும், அதர்மவாதிகளும் வைத்ததுதான் சட்டம் என்றால் நல்லவர்கள் வாழ முடியாது.

நல்லவர்கள் பாதுகாக்கப்பட வேண்டுமானால் அர்ஜுனன் போர் செய்வது தான் சரி. கண்ணனின் ஆலோசனை தான் சரி.

மூன்றாவது:

"பயாத் ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மகாரதா : /
யேஷாஞ்சத்வம் பகுமதோ : பூத்வா யாஸ்யஸி லாகவம் // "

கீதை : 2-35.

பொருள்

பயத்தினால் நீ போரிலிருந்து பின் வாங்கியதாகப் பெரிய வீரர்கள் நினைப்பார்கள். உன்னைப் (இது வரை) புகழ்ந்த அவர்களே இகழவும் செய்வார்கள்.

இன்னும் உன்னுடைய இந்தத் தளர்ச்சியைக் காணும் எதிரிகள் பேசக்கூடாத வார்த்தைகளால் உன்னைப் பற்றி பேசுவார்கள். அதைவிட உனக்குத் துன்பம் தருவது வேறு என்ன இருக்க முடியும்? இப்படி மற்றவர்கள் உன்னைத் தாழ்வாகப் பேசுவார்கள் என்பது, அர்ஜுனனைப் போர் செய்யத் தூண்டுவதற்குக் கண்ணன் சொல்லும் காரணம்.

மற்றவர்கள் தாழ்வாக எண்ணினால், அந்த எண்ணமே போரிடுவதற்கு ஒரு சரியான காரணமாகி விடுமா? மற்றவர்கள் எண்ணப்படி எல்லாம் நாம் நடந்துகொள்ள வேண்டும் என்றால் அதற்கு ஒரு முடிவிருக்குமா? என்று வாதிடுகிறார் திரு. வீரமணி.

அர்ஜுனன் உண்மையான ஒரு சத்ரிய வீரன் என்பதை அவனது வாழ்க்கையில் நிரூபித்திருக்கிறான். சத்ரியனுடைய குணம், போரில் புறங்காட்டாமை (யுத்தே ச அபி அபலாயனம். கீதை 18 : 43)

ரஜோ குணம் மேலோங்கும் போது தான் ஒருவனுக்கு சத்ரியத் தன்மை உண்டாகிறது. ரஜோ குணம் ஆசை வழிவானது. (ரஜோ ராகாத்மகம் = கீதை : 14-7)

அதே போல ரஜோ குணம் செயலில் இணைக்கிறது. (ரஜ : கர்மாணி பாரத / கீதை : 14-9)

அர்ஜுனனது இயற்கை குணம் ரஜோ குணம் நிரம்பியது. ரஜோ குணமோ செயலில் பற்றுதலும ஆசையும் கொண்டது. போரில் புறங்காட்டும் தன்மையை அறவே வெறுப்பது, சத்ரியனுடைய தலையாய குணம்.

மனக் குழப்பத்தினால் போர் செய்ய மறுக்கும் அர்ஜுனனைத் தெளிவடைய வைத்துப் போரில் ஈடுபட வைக்கும் முயற்சியில் ஈடுபடும் கண்ணன், அர்ஜுனனது நுணுக்கமான மன இயல்புகளை ஆராய்ந்து அதற்கு ஏற்ப தன்னுடைய நியாயங்களை முன் வைக்கிறார்.

உன்னைப் பிறர் இகழ்வார்கள். உன்னைக் கோழை என்றும், புறங்காட்டி ஓடிவிட்டான் என்றும் சாதாரண வீரர்கள் உட்பட உனது அனைத்து எதிரிகளும் சொல்லி உன்னை ஏளனம் செய்வார்கள் என்று கண்ணன் சொல்லும் போது (கீதை : அத்தியாயம் 2, ஸ்லோகம் 31-37) அர்ஜுனன் மனதில் அவனுடைய உண்மையான ரஜோ குண இயல்பு மேலெழுகிறது. இதைத்தான் கண்ணன் எதிர் பார்த்தார். அது நடக்கவும் செய்தது.

திரு. வீரமணிக்கு என்ன வருத்தம் என்றால் கண்ணன் எப்படியோ அர்ஜுனனை சமாதானப்படுத்திப் போரில் ஈடுபட வைத்து விட்டாரே. அதனால் அதர்மம் அழிந்து விட்டதே. தர்மம் பிழைத்துக் கொண்டதே. நல்லவர்களெல்லாம் மகிழ்ச்சி அடைந்து விட்டார்களே என்பதுதான்.

திரு. வீரமணியின் இந்த வருத்தத்தைப் போக்க நாம் எதுவும் செய்ய முடியாததற்கு வருந்துகிறோம்.

இப்போது திரு. வீரமணி அவர்கள் கீதையின் மறுபக்கம் என்று ஒரு புத்தகம் எழுதுகிறார் இது எனக்கு சம்பந்தமில்லாத வேறு ஒருவருடைய எண்ணத்தினால் உண்டானது. ஆனாலும் இதற்குப் பதில் எழுத வேண்டுமென்று

நான் ஏன் முனைய வேண்டும்? மற்றவர்கள் எண்ணம் ஏன் என்னை இந்த நூலை எழுதத் தூண்ட வேண்டும்?

ஏனென்றால் திரு. வீரமணியின் கருத்துக்கள் எனக்கு வருத்தத்தை உண்டாக்குகின்றன. இதே போல சத்ரியத் தன்மையுடைய அர்ஜுனனைப் பற்றி மற்றவர்கள் குறைவாகப் பேசும்போது அது அவனைப் பாதிக்கும். இந்த பாதிப்பு அவனைப் போர் செய்யத் தூண்டும். ஆகவே கண்ணன் செய்தது சரிதான்.

**கடைசிக் காரணம்**

போரில் அர்ஜுனன் இறந்தால், சொர்க்கம் போவான். வென்றால் நாடாள்வான். (கீதை : 2-37) என்கிறார். இது ஒரு வகை உற்சாகமூட்டுவதாக அமையுமே தவிர, நேர்மையும் நியாயமும் நிறைந்த மனிதர் போரிடுவதற்கு இவை ஒரு போதும் தகுந்த காரணமாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்கிறார் திரு. வீரமணி. நியாயமும் நேர்மையும் இருந்ததால் தான் அர்ஜுனன் போர்க்களத்துக்கே வந்திருக்கிறான். ஆனால் வந்த இடத்தில் அர்ஜுனனின் உறவினர்கள் மீதுள்ள பாசத்தினால் நியாயத்தையும் நேர்மையையும் மறந்து விட்டான்.

அர்ஜுனனின் மறதியைப் போக்கவும் குழப்பத்தைத் தீர்க்கவும் அவனை மறுபடியும் நியாயமும் நேர்மையும் உடையவனாக ஆக்கவும், அவனை உற்சாகமூட்டுவதற்காகவும் தான் கண்ணன் இவ்வாறு சொல்கிறார். தர்மப் போரில் உயிரிழப்பது சொர்க்கத்தைக் கொடுக்கும். என்னும் வார்த்தை வீரர்களை தர்மம் காக்கப் போரிடத் தூண்டும் ஒரு மந்திரமாக மாத்திரம் அல்ல உண்மையிலும் முழு உற்சாகத்துடன் போரிடும் அவர்கள் மரணமடைந்தால் நிச்சயம் சொர்க்கத்துக்கே போவார்கள்.

தர்க்க ரீதியாகவும் கூட உறவினர்களைக் கொல்வதை விடவும், அதன் மூலம் கிடைக்கும் செல்வத்தை அடைவதை

விடவும் போர் செய்யமால் பிச்சை வாங்கி உண்பதே சிறப்பு. (ச்ரேயோ போக்தும் பைஷ்ய மபீக லோகே / கீதை : 2-5) என்று சொல்லும் அர்ஜுனனுடைய வாதமே ஏற்புடையது என்று திரு. வீரமணி வாதிடுகிறார். அதாவது குடும்பக்காரன் அல்லது சொந்தக்காரன் லஞ்சம் வாங்கினால் அவனைத் தண்டிக்கக் கூடாது என்கிறார் திரு. வீரமணி. இரத்த உறவுகளெல்லாம் அநியாயம் அக்கிரமம் செய்தால் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கக் கூடாது என்ற தனது அந்தரங்க ஆசையையே திரு. வீரமணி அவர்கள் அர்ஜுனனின் நிலைக்கு ஆதரவு கொடுப்பதன் மூலம் வெளியிடுகிறார் என்றே நினைக்க வேண்டியுள்ளது.

தவறு செய்தது தாயேயானாலும் தண்டிக்கப்பட வேண்டும் என்றும், தமிழைக் கெடுத்தவனைத் தாய் தடுத்தாலும் விடேன், என்றெல்லாம் சினிமா வசனம் எழுதியவர்கள் கூட்டத்தில் உள்ளவர் தான் இப்படி நிலை தடுமாறிப் போயிருக்கிறார்.

அண்ணன் நம்பி, ஆச்சாரியார் என்ற பாசத்தை உடையவன் அவர்கள் செய்யும் தவறைத் தட்டிக் கேட்கும் அல்லது தண்டிக்கும் மனம் இல்லாதவன் நாட்டை ஆளும் தகுதி படைத்தவன் அல்லன்.

அர்ஜுனனது போர் செய்ய மாட்டேன் என்று சொல்லும் வாதம் உலகை ஏமாற்ற நினைப்பவர்களுக்கும் சொந்தக்காரர்களுக்கு ஊர் சொத்தை சேர்த்து வைக்க விரும்புகிறவர்களுக்கும் வேண்டுமானால் நியாயமாகப்படலாமே தவிர, நல்லவர்களுக்கும் கண்ணனுக்கும் நிச்சயம் நியாயமாகப்படாது.



# 10. கீதையில் முரண்பாடுகளா?

கீதையில் முரண்பாடுகள் என்று ஒரு தனி அத்தியாயமே எழுதியிருக்கிறார் திரு. வீரமணி அவர்கள். என்ன முரண்பாடுகள்?

**படிப்பான் என்று சொல்லலாமா?**

கீதை: 18-70ல் "இந்த தர்ம மயமான சம்பாஷணையை எவன் ஒருவன் படிப்பானோ அவன் ஞான யக்ஞத்தால் என்னை ஆராதித்தான் என்றே நான் நினைப்பேன்" என்று கண்ணன் சொன்னதாக வருகிற ஸ்லோகத்தில் படிப்பான் என்று கண்ணன் சொல்லலாமா? இது திட்டமிட்ட சதி அல்லவா? பிற்பாடு இது புத்தகமாகிப் பலரும் படிப்பார்கள் என்பது முன்பே திட்டமிடப்பட்டிருக்கிறது. என்பது இதன் மூலம் தெரியவில்லையா? என்று எதையோ காணாததைக் கண்டுவிட்டவர் போல அங்கலாய்க்கிறார் திரு. வீரமணி.

கீதை புத்தகமாக எல்லோரும் படித்தால் இவர் ஏன் இவ்வளவு வருத்தப்பட வேண்டும்? இவர் கீதையை விமர்சனம் செய்ய வந்தது, அறிவு தாகத்தினால் அல்ல என்பதும் ஆழ்ந்த வெறுப்புணர்ச்சியினால் மட்டுமே என்பதும் இதன் மூலம் தெரியவந்துவிட்டது. நாம் முன்பே சொன்னது போல கீதையில் வியாசரால் தொகுத்துக் கொடுக்கப்பட்ட சிந்தனைகள் கண்ணனது வாழ்நாளில் அவரால் சொல்லிலும் செயலிலும் விவரிக்கப்பட்டவை. இவற்றில் ஒரு சில மட்டும் போர்க்களத்தில் சொல்லப்பட்டன.

பெரியார் ஒருவரின் வானுயர்ந்த சிந்தனைகளை ஆசிரியர் ஒருவர் தொகுத்துச் சொல்லும் போது, அதை புத்தகமாக்குவதற்குத்தானே செய்வார்! இதில் மறைப்பதற்கோ கோபப்படுவதற்கோ என்ன இருக்க முடியும்? இந்த விஷயத்தில் திரு. வீரமணி அனாவசியமாக தன்னுடைய

டென்ஷனை அதிகமாக்கிக் கொள்கிறார் என்பதுதான் என் கருத்து.

**சேவை செய்யாதவனுக்குச் சொல்லாதே.**

"இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன/
நா சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோப்யஸூயதி//"

கீதை: 18-67

பொருள்

தவமில்லாதவன், பக்தியில்லாதவன், சேவை செய்யாதவன், என்னை நிந்திப்பவன் இவர்களுக்கு நீ இந்த கீதையை சொல்ல வேண்டாம்.

இதன் மூலம் கீதையை வெறுப்பவர்கள் அப்போதே இருந்திருக்கிறார்கள் என்பது புரியவில்லையா? என்றும் அப்படி வெறுப்பவர்கள் என்று இதில் சுட்டிக் காட்டப் படுபவர்கள், புத்த மதத்தினர் தான் என்றும் திரு. வீரமணி சொல்கிறார். மேலும் கடவுள் அவதாரமாகிய கண்ணன் மனிதர்களுக்குள்ளேயே பாகுபாடு செய்து ஒரு சிலருக்கு இப்படிச் சொல்லாதே என்று சொல்லலாமா? என்கிறார்.

ஒரு வகையில் திரு. வீரமணியின் ஆதங்கள் நியாயமானதே. ஒரு சிலருக்கு இதைச் சொல்லாதே என்று ஒரு ஸ்லோகம் கீதையில் இருப்பதை பயன்படுத்திக் கொண்டே ஜாதி பிராமணர்கள், சூத்திரர்கள் கீதையைப் படிக்கக் கூடாது என்று தடை விதித்து விட்டனர்.

இந்த ஸ்லோகம் கீதைக்கே கூட நன்மை செய்வதற்குப் பதிலாக கேட்டையே அதிகம் செய்திருக்கிறது. ஏனென்றால் யார் பக்தன், யார் தவமில்லாதவன், யார் சேவை செய்யாதவன், யார் வெறுப்பவன் என்ற இலக்கணம் சரியாக வரையறுக்கப்படாத அந்த காலகட்டத்தில், எல்லாமே மனுநீதியின் ஜாதி அடிப்படையில் முடிவு செய்யப்பட்ட

நிலையில் இந்த ஸ்லோகம், கீதையின் இலக்கணப்படி நல்லவன் என்று சொல்லப்பட்டவனைக் கூட வேண்டாதவனாக்கிவிட்டு விட்டது. ஆனால் நாம் முன்பே சொன்னபடி இந்த ஸ்லோகம் ஆசிரியர் வியாசரால் அந்த கால வழக்கத்தின்படி எழுதப்பட்டதே ஆகும். இதற்கு ஆதரவாக சுவாமி சின்மயானந்தர் சொல்வதைப் பார்ப்போம். அவர் சொல்கிறார். "அந்த காலத்தில் ஆன்மீக நூல்களில் பொதுவாக முடிவின் போது இதை இன்னின்னாருக்குத்தான் சொல்ல வேண்டுமென்று எழுதுகிற பழக்கம் இருந்தது" என்கிறார்.

மேலும் நம்பிக்கையில்லாதவர்களுக்கும் பக்தி இல்லாதவர்களுக்கும் நீ போய் சொல்லாதே, என்று தான் இந்த ஸ்லோகம் ஆணையிடுகிறதே தவிர, அவர்களாக முன் வந்து படிப்பதை தடுக்கச் சொல்லவில்லை.

கீதை 18-70ல் "இதைப்படிப்பவன் ஞான யக்ஞத்தால் என்னை ஆராதிப்பவன் ஆகிறான்'' என்று கண்ணன் சொல்வதிலிருந்து தானாக முன்வந்து படிப்பதற்குத் தடை இல்லை என்று ஆகிறது. பெரிய பணக்காரன் ஒருவன் தகுதியில்லாத தன் மகனை டாக்டருக்குப் படிக்க வைக்க விரும்பி ஏராளமான பணத்தை லஞ்சமாகக் கொடுத்து மெடிக்கல் கல்லூரியில் சேர்த்து விட்டான். நோயாளிகளை அறுத்து ஆப்பரேஷன் செய்து பழகுவதற்காக நிறைய உயிரற்ற உடல்களையெல்லாம் அந்தப் பையன் அறுத்து துண்டு துண்டாக்கிப் பழகினான். கடைசியில் ஒரு நாள் படிப்பு முடியும் முன்னால் தனது சக மாணவன் ஒருவனையே உயிரோடு வைத்து அறுத்துத் துண்டு துண்டாக்கிக் கோணிப்பையில் வைத்துக்கட்டி வெளியே வீசி விட்டான்.

இந்த மாணவன் டாக்டர் படிப்புக்குத் தகுதியில்லாதவன். இவனைப் போய் டாக்டர் படிப்புக்குச் சேர்த்துக் கொண்டதால் வந்த வினை எவ்வளவு கொடுமையானதாக அமைந்து விட்டது.

பக்தியும், தவமும், தகுதியும் இல்லாத ஒருவனுக்குச் சொல்லிக் கொடுக்கும் கல்வி, பாறையில் விதைத்த விதை நெல் போல், வீணாகிவிடும்.

ஒருவேளை உண்மையில் தகுதியுடையவன் ஆசைப்பட்டு கீதையைப்படிக்க வந்தால் அதைக் கூடாது என்று இந்த ஸ்லோகம் தடுக்கவில்லை, என்பதை மனதில் வைத்துப் பார்த்தால், கண்ணன் மீது பக்தியில்லாமல் இருந்தாலும் திரு. வீரமணி போன்றோர் கீதையைத் தானாக முன்வந்து படிப்பது பெரிதும் வரவேற்கத்தக்கதே.

புத்தரின் போதனைகளை முறியடிக்கவே கீதை எழுதப்பட்டது என்பதும் ஏற்புடையதல்ல.

ஏனென்றால் கண்ணனின் காலமும் மகாபாரதப் போரும் கி.மு.3000 ஆண்டு என்றும், புத்தரின் காலம் கி.மு.450 ஆம் ஆண்டு என்றும் நாம் இந்நூலில் முன்னமையே நிரூபித்திருக்கிறோம்.

ஆகையால் ஏறக்குறைய 2550 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த கண்ணனும் வியாசரும் பூத்தரையும், அவரது கொள்கைகளைப் பற்றியும் எப்படிச் சொல்லியிருக்க முடியும்?

## நேரடியாகக் கேட்டேன்?

கீதை ஸ்லோகங்கள் 18-74, 75, 76 ஆகியவற்றில் கீதையைக் கண்ணன் அர்ஜுனக்குச் சொல்வதை நான்நேரடியாகக் கேட்டேன் என்று சஞ்சயன் சொல்வதாக வருகிறதே, இது எதைக் காட்டுகிறது, என்று திரு. வீரமணி கேட்கிறார். எதைக் காட்டுகிறது? என்ன குற்றம்? என்று அவருக்கே தெரியவில்லை போலும்.

இது பற்றிய விளக்கம், "சஞ்சயனுக்கு ஞானக் கண் பற்றிய தலைப்பில்" கொடுக்கப்பட்டுள்ளது.

## துராசாரனின் பக்தி

"யேப்யன்ய தேவதா பக்தா யஜந்தே சரத்தயான்விதா/
தேபி மாமேவ கௌந்தேய யஜந்த் யவிதி பூர்வகம்//"
கீதை 9-23

### பொருள்

"குந்தியின் மகனே! எந்த பக்தர்கள் மற்ற தேவதைகளையும் நம்பிக்கையுடன் வேண்டுகிறார்களோ, அவர்களும் உண்மையைச் சரியாக அறியாமல் என்னையே வேண்டுகிறார்கள்"

"அபி சேத் ஸு துராசாரோ பஜதே மாமனன்யபாக்/
ஸாது ரேவ ஸ மந்தவ்ய ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ//"
கீதை 9-30

### பொருள்

மிகக் கொடியவனும் கூட வேறு எதையும் நினைக்கமால் என்னையே வழிபாடுவானால் அவன் நல்லவன் என்றே கருதப்பட வேண்டும், ஏனெனில் அவன் சரியான நோக்கத்தை உடையவன்.

இந்த இரண்டு ஸ்லோகங்களையும் சொல்லி, ஒரே அத்தியாயத்தில் தான் இரண்டு ஸ்லோகங்களுக்கும் இடையில் எத்தகைய மாபெரும் முரண்பாடு என்கிறார் திரு. வீரமணி. என்ன முரண்பாடு என்பதைச் சொல்லாமல் விட்டு விட்டார். முரண்பாடு இருந்தாலல்லவா சொல்வதற்கு, ஒன்றுமே அறியாத மக்களைக் குழப்புவதற்கு இவர் இம்மாதிரியான உத்தியைக் கையாளுகிறார் என்றே நினைக்கத் தோன்றுகிறது.

இந்த ஸ்லோகங்களின் விளக்கம் தான் என்ன?

தீயை, அக்னி தேவதை என்கிறோம் மழையை வருண தேவன் என்றும், காற்றை, வாயு தேவன் என்றும், கல்வியை சரஸ்வதி தேவி என்றும், செல்வத்தை இலட்சுமி தேவி என்றும் சொல்கிறோம்.

இங்கே தேவன், தேவி என்றால் ஒரு பொருளை அல்லது குணத்தைக் குறிக்கிறதேயன்றி கடவுளை அல்ல.

ஸ்லோகத்தில் வரும் "அன்ய தேவதா" என்பதன் அர்த்தம் கடவுள் அல்லாத வேறு (ஜட) பொருட்கள் என்பது தான்.

கல்வி வேண்டும் என்பதற்காக அதைக் கற்பதற்கு எடுக்கும் முயற்சியும், செல்வம் வேண்டும் என்று அதை அடைவதற்காக எடுக்கும் முயற்சியையும் நிறைவேற்றி வைப்பதும் கூட நானே (இறைவன்) தான் என்கிறார் கண்ணன். மாறாகக் கல்வி என்று ஒரு கடவுளும், செல்வம் என்று ஒரு கடவுளும் தனித் தனியாகக் கிடையாது என்பதே இந்த ஸ்லோகத்தின் அர்த்தம். இருப்பது எல்லாம் ஒன்றே என்று அத்வைதம் சொல்லும் கீதையில், இரண்டாவது, மூன்றாவது கடவுள்கள் எங்கேயிருந்து வரும்?

ஆனால் பக்தர்கள் விபரமில்லாமல், ஒவ்வொன்றைக் கொடுப்பதற்கும் ஒவ்வொரு கடவுள் உண்டு என்று நம்பினால் அது தவறு என்று சுட்டிக் காட்டுவதற்கே இந்த ஸ்லோகம்.

ஸ்லோகம் : 9-30 ல், எவ்வளவு கேடுடையவன் ஆனாலும் வேறு சிந்தனை இல்லாமல் (அனன்யபாக்) என்னையே வழிபட்டால் அவனை நல்லவன் என்றே கொள்ள வேண்டும் என்கிறது இந்த ஸ்லோகம்.

இங்கே 'என்னை' என்று வரும் வார்த்தையின் பொருள் ஒரே இறைவன் என்பதாகும். இந்த ஒரே இறைவனைப் எந்தப் பெயரில் வேண்டுமானாலும் அழைக்கலாம் என்றும் எந்த உருவில் வேண்டுமானாலும் வழிபடலாம் என்பதும் தான் கீதை சிந்தனை.

எவ்வளவு கெட்டவனானாலும் இறைவன் ஒருவன் இருக்கிறான் என்று நம்பி இந்த உலகிலுள்ள நியாயம் தர்மம்

அனைத்துக்கும் அவனே காரணம் என்றும் ஏற்றுக் கொண்டு அந்த இறைவனின் பக்தனாக ஆகி விட்டால் அவன் அதன் பிறகு நல்லவனாக ஆகி விடுகிறான் என்று இந்த ஸ்லோகம் சொல்கிறது.

உண்மையாகவே இறைவனின் குணாதிசயங்களை கீதையில் சொல்வது போலப் புரிந்து கொண்டு அதன்படி வாழ நினைக்க ஒருவன் விரும்ப வேண்டும் என்றாலே, அவன் நல்லவனாக ஆனால் தான் முடியும் ,என்பதே இந்த ஸ்லோகத்தின் பொருள்.

இந்த இரண்டு ஸ்லோகங்களுக்குள்ளும் அப்படி என்ன முரண்பாடு உள்ளது என்பதை என்னால் கண்டு கொள்ள இயலவில்லை.

'நான்' என்ற சொல்லுக்கு இறைவன் என்ற பொருள் கொடுக்கும் போது இறைவனை, பல்வேறு பெயரிலும் அழைக்கின்றவர்களும் இறைவன் ஒன்றுதான் என்று நம்பி உண்மையாக வணங்க முற்படும் போது அவர்களும் நல்லவர்களே என்பதும் இதே ஸ்லோகம் சொல்லும் பொருள் தான்.

**அவை என்னிடம் உள்ளன ஆனால் நான் அவற்றில் இல்லை.**

ஒரு தமிழ் நாட்டுக் கூலி தொழிலாளி பிழைப்புக்காக கர்நாடக மாநிலம் சென்றான். அவனுக்குத் தமிழ் மட்டுமே எழுதப்படிக்கத் தெரியும். கர்நாடகாவில் ஒரு ரோடு வழியாகச் சென்று கொண்டிருந்த போது, பாதை இரண்டாகப் பிரிந்தது. எந்தப் பாதையில் போவது என்பதில் குழப்பம். அங்கே ஒரு வழிகாட்டிப்பலகை இருந்தது. அதில் கன்னடமொழியிலும் இந்தியிலும் மட்டும் பெயர்கள் இருந்தன.

இவனுக்கு இந்த இரண்டு மொழியுமே படிக்கத்

தெரியாததால் அந்தப் பெயர்கள் அவனைப் பொறுத்த வரையில் வெறும் கோணல் கோடுகளாகவே காட்சியளித்தன.

ஆனால் புத்திசாலியான அவன் இன்னொருவரிடம் கேட்டுப்படிக்கச் சொல்லி விபரம் புரிந்து கொண்டு சரியான பாதையில் போனான்.

திரு. வீரமணி அவர்களும் அந்த கூலித் தொழிலாளியைப் போல கீதையின் சில கருத்துக்கள் புரியாமல் திகைக்கிறார். இந்த திகைப்பு அவரை மேலும் புரிந்து கொள்ள வகை செய்வதற்குப் பதிலாக தாமே ஒரு முடிவுக்கு வந்து குறை சொல்ல ஆரம்பித்து விடுவது தான் துரதிஷ்டம்.

படிக்கத் தெரியாத அந்த கூலித் தொழிலாளிக்கு நேர்ந்த துயரத்துக்குக் காரணம் கன்னட அல்லது இந்தி மொழியோ அல்ல. மாறாக அவனுக்கு அந்த மொழிகள் தெரியாததே அவனுடைய துயரத்துக்குக் காரணம் என்பது போலவே திரு. வீரமணியின் புரியாமைக்கு காரணம் கீதையில் உள்ள குறைபாடுகள் அல்ல.

கீதையின் மூன்று ஸ்லோகங்களிலும் அவர் ஒரு முரண்பாட்டினை சுட்டிக் காட்டுகிறார். அவை என்ன என்று பார்ப்போம்.

"மயா ததமிதம் ஸர்வம் ஜக தவ்யக்த மூர்த்தினா /
மத் ஸ்தானி ஸர்வ பூதானி ந சாகம் தேஷ் வவஸ்தித : // "

கீதை : 9 - 4.

பொருள்

புலன்களுக்குத் தென்படாத என்னால் இந்த உலகம் அனைத்தும் வியாபிக்கப்பட்டுள்ளது. எல்லா உயிர்களும் என்னிடம் இருக்கின்றன. நானோ அவற்றில் இல்லை.

"தேஷா மேவானுகம் பார்த்தம் அக மக்ஞானஜம் தம : /
நாசயாம் யாத்ம பாவஸ்தோ க்ஞான தீபேன பாஸ்வதா //"

கீதை : 10 - 11

பொருள் :

அவர்களிடம் கொண்ட கருணையால் நான் அவர்களின் உள்ளத்தில் வீற்றிருந்து அறியாமை காரணமாகத் தோன்றிய இருளை, பிரகாசிக்கின்ற ஞானத் தீபத்தினால் அகற்றுகின்றேன்.

"அகமாத்மா குடாகேச ஸர்வ பூதாசய ஸ்தித : /
அகமாதிச்ச மத்யஞ்ச பூதானா மந்த ஏவ ச // "

கீதை : 10 - 20.

பொருள் :

தூக்கத்தை வென்றவனே, எல்லா உயிர்களின் இதயத்தில் இருக்கின்ற ஆத்மா நான். உயிர்களின் ஆரம்பமும், நடுவும், முடிவும் நானே.

இந்த ஸ்லோகங்களில் உள்ள முரண்பாட்டினை நோக்குக என்கிறார். இவை முன்னுக்குப் பின் முரணான கருத்தினைச் சொல்கின்றன என்கிறார். ஆனால் அவர் சுட்டிக்காட்டும் முரண் எது என்பதை விளக்கவில்லை.

ஒரு வேளை எல்லா உயிர்களும் என்னிடம் உள்ளன. நான் அவற்றில் இல்லை என்று (9 - 4 ல்) வருவதற்கு மாறாக, நான் அவர்களது இதயத்தில் இருக்கிறேன் என்று ஸ்லோகங்கள் 10 - 11 - லும், 20 - லும் வருவதை அவர் சொல்லும் முரண்பாடாக வைத்துக் கொண்டு பார்ப்போம்.

என்னால் இந்த உலகம் அனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. (கீதை 9 - 4) என்கிறான் இறைவன். ஆகவே இறைவன் இல்லாத இடமே இல்லை என்பது உறுதியாகிறது. உயிர்களின் இதயத்திலும்,

உயிரில்லாதவைகளிடத்திலும் (ஸர்வ பூதா சய ஸ்தித : கீதை : 10 - 20) இறைவன் இருப்பான், இருக்கிறான், இருக்க முடியும்.

ஆயினும் நான் அவற்றில் இல்லை என்று சொல்வதின் அர்த்தம் என்ன?

இதே பொருளுள்ள ஸ்லோகம் ஒன்று ஏழாம் அத்தியாயத்திலும் வருகிறது.

(.... ஏவேதி தாம் வித்தி நத்வகம் தேஷு தேமயி//)

(கீதை 7 - 12)

பொருள் :

அவை என்னிடம் உள்ளன. நான் அவற்றில் இல்லை

இந்த ஸ்லோகங்களை ஒரு மிக எளிய உதாரணம் சொல்லிப் புரிய வைக்கிறார், சுவாமி சின்மயானந்தர்.

இரவில் இரண்டாவது ஆட்டம் சினிமா பார்த்து விட்டுத் தன் கிராமத்தை நோக்கி வருகிறான் ஒருவன். ஏற்கனவே பயந்த ஸ்வபாவம் உள்ள அவன் திடீரென தன் எதிரே கையை விரித்த படி ஒரு பயங்கர பூதம் உயரமாக நிற்பதைக் காண்கிறான். அந்தப் பூதம் தனது பயங்கர உருவத்தால் அவனை பயமுறுத்துகிறது. சிறிது நேரத்தில் இன்னொரு நண்பனும் அங்கே வந்து சேர்ந்ததால் அவனுடைய பயம் கொஞ்சம் குறைகிறது.

இப்பொழுது தெளிந்த மனதுடன் மறுபடியும் அந்தப் பூதத்தைப் பார்க்கிறான்.

ஆனால் இப்போது அங்கே பூதம் எதுவும் இல்லை. மாறாக பூதம் இருந்த இடத்தில் ஒரு மின்சாரக் கம்பம் மட்டுமே வயர்களுடன் காட்சியளிக்கிறது.

அங்கே இருந்தது மின்சாரக் கம்பம் மட்டுமே. மின்சாரக் கம்பத்தில் அவனுக்கு பூதம் தெரிந்தது. இருட்டுப்

பயமும் சேர்ந்ததால் மின்கம்பத்தை அவனது பார்வை பூதமாக மாற்றி விட்டது. மின்சாரக் கம்பத்தைச் சார்ந்து இங்கே பூதம் இருந்தது. கம்பம் இருந்ததால் பூதம் இருந்தது.

ஆனால் பூதத்தில் மின்சாரக் கம்பம் இல்லை. பூதம் இல்லாமலும் மின்கம்பம் இருக்கும். கம்பம் இல்லாமல் பூதம் இருக்காது.

இந்த உதாரணத்தில் இறைவனே மின்சாரக் கம்பம். இந்த உலகம் அனைத்தும் பூதம். இறைவனிடத்தில் இந்த உலகம் இருக்கிறது. இறைவன் இருக்கும் வரை, கம்பத்தில் பூதம் தெரிவது போல இந்த உலகம் தெரியும். இறைவன் இல்லாமல் இந்த உலகம் இல்லை. உலகம் இறைவனைச் சார்ந்து இருக்கிறது. ஆனால் இறைவன் உலகத்தைச் சார்ந்து இல்லை. உலகம் இருந்தாலும், இல்லாவிட்டாலும் இறைவன் உண்டு.

இந்த விளக்கத்தின் அடிப்படையில் பார்த்தால், அந்த ஸ்லோகங்களின் பொருள் மிக எளிதாக விளங்கும்.

அதாவது உயிர்கள் அனைத்தும் என்னிடம், என்னைச் சார்ந்து இருக்கின்றன, பூதம் மின்கம்பத்தைச் சார்ந்து இருப்பதைப் போல,

ஆனால் அவற்றில் அல்லது அவற்றைச் சார்ந்து இறைவன் இல்லை. தோற்ற அளவில் மட்டுமே உள்ள பூதத்தைச் சார்ந்து மின் கம்பம் இல்லை என்பதைப் போல.

இன்னொரு உதாரணமும் பார்ப்போம். முழுவதும் தங்கத்தினாலான வளையல் ஒன்று இருக்கிறது. இந்த வளையலில் இருப்பது அனைத்துமே தங்கம் தான். வளையல் என்பதற்கு அடையாளமாக இருப்பது அதனுடைய பெயரும், வடிவமும் (நாம, ரூபம்) மட்டுமே.

தங்க வளையலில், தங்கம் இல்லாமல் தங்க வளையல் இல்லை. ஆனால் வளையல் இல்லாமல் தங்கம் இருக்க முடியும்.

இதுபோல மாறுகின்ற உலகம் மாறாத இறைவனைச் சார்ந்து இருக்கிறது. ஆனால் மாறாத இறைவன் மாறுகின்ற உலகத்தைச் சார்ந்து இருக்கவில்லை. இந்த மாயையினாலான (நாம, ரூபம்) உலகம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இறைவ்ன் இருப்பான். இறைவன் இல்லாவிட்டால் நாம, ரூபமான இந்த உலகம் இல்லை.

மேலும் இறைவனின் இலக்கணம் பற்றி கீதை என்ன சொல்கிறது?

"அவர் எல்லா புலன்களையும் இயங்கச் செய்கிறார். ஆனால் அவர் எந்த புலன்களும் இல்லாதவர் : பற்றற்றவர். ஆனால் அனைத்தையும் தாங்குகிறார். குணமே இல்லாதவர் : ஆனால் எல்லா குணங்களையும் அனுபவிக்கிறார்'' கீதை : 13 - 14.

''அறியப்பட வேண்டிய அந்த பரம்பொருள் பிரிவுபடாதவர். பொருட்களில் பிரிவுபட்டது போல தோன்றுகிறார். பொருட்களைத் தோற்றுவிப்பதும் தாங்குவதும் தன்னுள் கொள்வதும் அவரே." கீதை 13 - 16.

"அவர் பொருட்களுக்கு வெளியிலும், உள்ளேயும் இருக்கிறார். அசையாததும் அசைவதுமாகிய பொருட்கள் எல்லாம் அவரே. நுண்ணியதாக இருப்பதால் அவர் அறியப்பட முடியாதவர். அவர் தூரத்திலும் இருக்கிறார். அருகிலும் இருக்கிறார்". கீதை : 13 - 15

"அந்த இறைவன் ஒளிகளுக்கெல்லாம் ஒளியாக இருக்கிறார். அவர் இருளுக்கு அப்பாற்பட்டவர். அவரே ஞானம், அறியப்பட வேண்டியவர், ஞானத்தால் அடையப்படுபவர், எல்லோருடைய இதயத்திலும் நிறைந்திருப்பவர்" கீதை : 13 - 17.

## அறிவுக்குப் பொருந்தாத நிலைகளா?

"வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோஸ்மி பாண்டவானாந்
தனஞ்ஜய: /
முனீனாமப் யகம் வ்யாஸ: கவீனா முசனா கவி: //"
கீதை : 10 - 37

பொருள் : "வ்ருஷ்ணி குலத்தவருள் வாசுதேவன் நான் பாண்டவர்களுள் அர்ஜுனன் நான். முனிவர்களுள் வியாசர் நான் கவிகளுள் சுக்ராச்சாரியார் என்ற கவி நான்"

இந்த ஸ்லோகத்தில் திரு. வீரமணிக்கு ஒரு சந்தேகம்.

அர்ஜுனனே இவர் தான் என்றால் இந்த உரையாடலும், பதினெட்டு அத்தியாயங்களும் வீண்தானே என்கிறார். இது தனக்குத் தானே சொல்லிக் கொள்வது போல இல்லையா என்பதுதான் அவரது சந்தேகம்.

இந்து மதத்தின் உச்சக்கட்டக் கொள்கை அத்வைதம். அதாவது, இந்த உலகத்தில் இருப்பது ஒன்று மட்டுமே. அது இறைவன் ஒருவனே.

பெயரையும், வடிவத்தையும் எடுத்து விட்டுப் பார்த்தால் இருப்பது எல்லாமே ஒன்றுதான்.

உதாரணமாக, மண்ணினால் செய்யப்பட்ட சட்டி, பானை, குடம், கலயம், மூடி, குலுக்கை ஆகிய அத்தனைப் பொருட்களும் பெயரினாலும் வடிவத்தினாலும் மட்டுமே வேறு வேறாகத் தோன்றுகின்றனவேயன்றி அடிப்படையில் அவற்றில் இருப்பது எல்லாம் மண் ஒன்றுதான்.

இதை இன்று விஞ்ஞானம் நிரூபித்து விட்டது. குறைந்த பட்சம் கீதை சொல்லும் க்ஷேத்ரம் (13 - 1) என்னும் இந்த உலகப் பொருள் அனைத்துமே சக்தி (Energy) என்ற ஒரே வஸ்த்துவால் ஆனது தான் என்று விஞ்ஞானம் சொல்கிறது. இரும்பாக

இருந்தாலும், துரும்பாக இருந்தாலும், காற்றாக இருந்தாலும், கயிறாக இருந்தாலும் அனைத்துமே அடிப்படையில் சக்தியின் ஒரு வடிவம் தான் என்பதே, இன்றைய விஞ்ஞானம். எல்லாமே அணு என்பதும், அணு என்பதே சக்தி மட்டும்தான் என்பதும் இன்று நிரூபிக்கப்பட்ட விஞ்ஞானம்.

இந்து மதம் ஒரு படி மேலே போய் இந்த ஜட வ ஸ்த்துவாகிய உலகமும் (சக்தியும்) இறைவனும் கூட ஒரே பொருள்தான் என்று சொல்கிறது. (ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்யனாதீ உபாவபி (கீதை : 13 - 19) இயற்கை, இறைவன் இரண்டுக்குமே ஆரம்பம் கிடையாது. இரண்டுமே ஒன்றுதான்.

கீதையில் பத்தவாது அத்தியாயம் : 20 - வது ஸ்லோகத்திலிருந்து 39 - வது ஸ்லேகாம் வரை இறைவனின் வெளிப்பாட்டை எதை எதையெல்லாம் பார்த்து எளிதாகப் புரிந்து கொள்ளலாம் என்று கண்ணன் சொல்கிறார்.

ஸ்லோகம் : 10 - 40 ல் "எனது தெய்வீக மகிமைகளில் கோடிட்டுக் காட்டுவது போலச் சிலவற்றைச் சொன்னேன்" என்கிறார். இந்த வரிசையில் பாண்டவர்களில் நான் அர்ஜுனன் என்றும், முனிவர்களில் நான் வியாசர் என்றும் கண்ணன் சொல்கிறார்.

அர்ஜுனன் தன்னை உணர்ந்து கொள்ளும் போது அவன், தானும் இறைவனே என்பதைப் புரிந்து கொள்வான். இதனால் தான் பாண்டவர்களில் சிறந்தவனான அர் ஜுனனில் என்னை உணரலாம் என்ற பொருளில் கண்ணன் இப்படிச் சொல்கிறார்.

வியாசர் அந்தக் காலத்தில் வாழ்ந்த சிறந்த முனிவர்களுள் ஒருவர் என்பதால் கண்ணன், அவர் பெயரைச் சொல்கிறான்.

கீதை 1950 - ல் எழுதப்பட்டிருக்குமானால் சுதந்திரப்

போராட்டத்தில் கலந்து கொண்ட தேசபக்தர்கள் அத்தனை பேரும் நானே, என்று கண்ணன் சொல்லியிருப்பார்.

அர்ஜுனன் பெயரையும், வியாசர் பெயரையும் கண்ணன் பயன்படுத்தியதில் எந்தத் தவறும் இல்லை.

**பற்றில்லாமல் செயல்பட முடியுமா?**

'நியாயமான கேள்விகள்' என்ற அத்தியாயத்தில் ஓரிடத்தில், பற்றில்லாமல் செயல்பட முடியுமா? என்று கேட்கிறார் திரு. வீரமணி.

நியாயமாக சாதராண மக்களுக்கு வரும் சந்தேகம் தான் இது.

பலனைப் பற்றி கவலைப்படவில்லையென்றால், பின்பு செயலே இல்லை. செயல்பட மாட்டோம், இது தான் இயற்கை என்கிறார்.

கீதையில் அதிக முக்கியத்துவம் கொடுத்துச் சொல்லப்படும் விஷயம் நிஷ்காமிய கர்மம் தான் என்பதையும் அவர் ஒப்புக் கொள்கிறார்.

இந்த அவரது சந்தேகம் நியாயமானது தானா என்று பார்ப்போம்.

இந்தக் கேள்விக்குச் சிறிய அளவில் விளக்கம் கொடுத்து ஒருவரைப் புரிய வைப்பது மிகவும் சிரமமான காரியமானபோதிலும் இதைப் படிப்பவர்கள் அறிவார்ந்தவர்களே என்ற முடிவில் முயற்சி செய்யலாம்.

"கர்மண்யே வாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன /
மா கர்மபல கேதுர்பூர் மா தே ஸங்கோஸ்தவ கர்மணி// "

கீதை : 2 - 47

பொருள் :

"வேலை செய்வதில் மட்டுமே உனக்கு உரிமை உண்டு. பலன்களில் ஒரு போதும் இல்லை. வினைப்பயனை உண்டாக்குபவன் ஆகி விடாதே. வேலை செய்யாமல் இருக்கவும் விரும்பாதே".

இந்த ஒரு ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் சிந்தனை, கீதையின் பல இடங்களிலும் பல்வேறு ஸ்லோகங்களின் மூலம் விளக்கப்படுகிறது. கீதையை முழுவதுமாகப் படித்துத் தெளிவடைந்த ஒரு பக்தனுக்கு அல்லது ஒரு உண்மை மாணாக்கனுக்கு இந்த நிஷ்காமிய கர்மத்தின் பொருள் சரியாக விளங்கக் கூடும்.

இது மட்டுமல்ல. இதை வெறுமனே படித்துத் தெரிந்து கொள்வதை விடவும், அனுபவப்பூர்வமாக இந்த சிந்தனையை வாழ்க்கையில் கடைபிடிக்கும்போது தான் இது முழுவதுமாகப் புரியும்.

ஒரு வேலையை ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே அது தோற்றுப் போய் விடுமோ என்று சந்தேகப்பட்டால் உன்னால் அந்த வேலையை சரியாகச் செய்ய முடியாது.

அதே போல, ஐயைய்யோ இதில் நாம் தோற்று விடக்கூடாது. வெற்றி பெற்றே தீர வேண்டும் என்ற மன அழுத்தத்தோடு ஒரு வேலையைச் செய்தாலும் நம்முடைய செயல் சரியாக அமையாது.

வெற்றி தோல்வியைப் பற்றி கவலைப்படாமல் ஒருவனால் ஒரு செயலைச் செய்ய முடியுமானால் அவனுடைய முழு கவனத்தையும் செயலில் செலுத்த முடியும்.

இதைத்தான், செயலில் மட்டுமே உரிமை பலனில் இல்லை என்று கண்ணன் சொல்கிறார்.

ஆயிரம் பிரசவ ஆப்பரேஷன்களை வெற்றிகரமாகச் செய்த கை ராசியான ஒரு டாக்டரைத் தன் நெருங்கிய உறவினருக்கு அந்த ஆப்ரேஷனைச் செய்யச் சொன்னால் அவரது கை நடுங்கும் அவரால் அந்த ஆப்ரேஷனை ஒழுங்காகச் செய்ய முடியாது. இது ஏன்?

ஏனென்றால் அவர் ஆப்பரேஷனின் முடிவு பற்றிக் கவலைப்படுகிறார். தோற்றுவிடக்கூடாதே என்று அஞ்சுகிறார். வெற்றி பெற்றாக வேண்டுமே என்று பதறுகிறார். அதாவது அவர் இம்முறை பலனைத் தனக்கு சாதகமாக எதிர்பார்ப்பதால் அவரது கை நடுங்குகிறது.

ஆக வெற்றி பெற வேண்டுமானால் பலனைப் பற்றிக் கவலைப்படாமல் சிறப்பாக அந்த வேலையைச் செய் என்கிறது கீதை.

ஒரு செயலின் பலன், அதைச் சரியாகவும், சிறப்பாகவும் செய்து முடிக்கும் திருப்தியில் மட்டுமே இருக்கிறது.

இயற்கை சட்ட திட்டங்களை சரியாகப் புரிந்துகொண்டு ஒரு செயலைச் சிரத்தையோடு செய்தால் அங்கு தோல்வி என்ற பேச்சுக்கே இடமில்லை.

நல்ல கொள்கையின் அடிப்படையில் ஒருவன் சட்டமன்ற தேர்தலில் வேலை செய்கிறான். தேர்தல் பற்றிய இயற்கை நடைமுறை முழுவதுமே அவனுக்குத் தெரியாததால் அவன் வேலை செய்த கட்சி தோற்றுவிடுகிறது. ஆயினும் அவன் செய்த வேலைக்குக் கிடைத்த பலன் அந்தக் கட்சியின் தோல்வி அல்ல. அவன் பெற்ற உண்மையான பலன், தனக்குப் பிடித்த கொள்கைக்காக வேலை செய்தானே, அதனால் உண்டான திருப்திதான்.

இதுவே நிஷ்காமிய கர்மம். இப்பொழுது புரிந்தது

போல இருக்கிறதா? தனக்கென வாழாமல் உலகத்துக்காக வாழ்கிறவர்களெல்லாம் நிஷ்காமிய கர்மம் செய்பவர்கள் தான் உலகில் பலரால் இப்படி உலகத்துக்காக வாழமுடியாது என்பது உண்மையாக இருக்கலாம். அதற்காக கீதை பொய்யாகிவிடாது. ஏனென்றால் பல ஆயிரம் ஆண்டுகளாக பல்லாயிரம் மேலோர்களால் வாழ்ந்து நிரூபிக்கப்பட்டது தான் இந்த கீதை சிந்தனை.

நிஷ்காமிய கர்மத்தினால் உலகாயத பலன் வராது என்று கீதை சொல்லவே இல்லை. உலகாயத பயனை எதிர்பாராது செயல்களைச் செய்யும் போதும் அதற்கேற்ற உலகாயத பலன் கிடைக்கவே செய்யும்.

இன்னும் சொல்லப்போனால் அந்த டாக்டரின் மனதில் தான் செய்யப் போகும் ஆப்பரேஷன் உறவினருக்கு என்ற எண்ணமே இல்லாமல் இருக்குமானால் அவரால் அந்த ஆப்பரேஷனை வெற்றிகரமாகச் செய்ய முடியும்.

அதுபோல வெற்றி தோல்வியைப் பற்றி கவலைப்படாமல் உன் கடமையைச் சிறப்பாக செய்தால் வெற்றி உன்னை தேடி வரவே செய்யும். அப்பொழுது செயலை திருப்திகராமாக செய்ததனால் கிடைத்த பலனும், செயலின் வெற்றியினால் கிடைத்த பலனும் சேர்ந்து இரட்டிப்பு லாபம் உண்டாகும்.

ஆக நிஷ்காமிய கர்மத்துக்கு இரட்டிப்பு லாபம்.



# 11. கீதை ஒரு பொக்கிஷம்

திரு. வீரமணி அவர்கள் கண்டுகொள்ளாமல் விட்டு விட்ட கீதையின் ஏராளமான வானுயர்ந்த சிறப்புகளில் சிலவற்றை மட்டும் பார்ப்போம்.

மகாபாரதத்தின் உள்ளேயே, கடலினுள் முத்து போல முடங்கிக் கிடந்த பகவத்கீதையை வெளியில் எடுத்துத் தனியாக உரை எழுதி இப்பொழுது நமக்குக் கிடைத்திருப்பது ஆதிசங்கரர் உரைதான்.

அதன் பிறகும் கூட கீதையை மக்கள் மத்தியில் பிரபலப்படுத்துவதற்கு சமஸ்கிருதம் தெரிந்த ஜாதி பிராமணர்கள் முன்வரவில்லை.

கீதையையும் பல உபநிடதங்களையும் முதன் முதலில் உலகுக்குக் காட்டியவர் ஒரு முஸ்லீம் என்பது தான் ஆச்சர்யம்.

மன்னர் ஷர்ஜகானின் மூத்த மகனும், ஔரங்கசீப்பின் அண்ணனுமான தாராஷுகோ என்பவர்தான், முதன் முதலில் 50 உபநிடதங்கள் கீதை போன்றவற்றைப் பார்சி மொழியில் மொழி பெயர்த்தார்.

இந்தப் பார்சி மொழி பெயர்ப்பை அடியொற்றியே 1801 - ம் ஆண்டு இலத்தீன் மொழியில் உபநிடதங்களை மொழி பெயர்த்தனர்.

சார்லஸ் வில்கின்ஸ் என்ற அறிஞர் முதன்முதலில் 1784 - ம் ஆண்டு கீதையை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார்.

1785 - ம் ஆண்டு இந்தியாவில் வைஸ்ராயாக இருந்த வாரன் கேஸ்டிங்ஸ், இந்த ஆங்கில மொழிபெயர்ப்புக் கீதைக்கு ஒரு முன்னுரை எழுதியிருக்கிறார். "எங்களது ஆங்கில சாம்சாஜ்யம் இன்று இருக்கும் நாளை போகும் : ஆனால்

மகோன்னதமான கீதையின் ஆட்சியும் அரசும் என்றும் இருக்கும்" என்று எழுதியிருக்கிறார்.

இப்படி முஸ்லீமும், ஆங்கிலேயரும் மட்டுமே கீதையை உலக மக்களுக்குக் காட்டும் வகையில் வெளியே கொண்டு வந்த புண்ணியத்தைக் கட்டிக் கொண்டார்கள் இவர்கள் இல்லை என்றால் இன்று வரையிலும் கீதை சில ஜாதி பிராமணர்களிடம் மட்டுமே மாட்டிக் கொண்டு அவர்களது ஜாதி வெறிக்குத் தவறாகப் பயன்பட்டுக் கொண்டிருந்திருக்கும்.

திரு. எட்வின் ஆர்னால்டு என்பவர் கீதையின் மூலத்தை மட்டும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இந்த மொழி பெயர்ப்பு நூலுக்கு 'சாங் செலஸ்டியல்' (Song Celestial) என்று பெயரிட்டார். இதுவே உலகம் முழுவதும் பரவியது. மகாத்மா காந்தி முதன் முதலில் இந்தப் புத்தகத்தைப் படித்து தான் கீதை என்று ஒன்று இருப்பதையே தெரிந்து கொண்டார்.

**உயிர்களில் ஏற்ற தாழ்வு இல்லை.**

"வித்யா விநய ஸம்பன்னே ப்ராமணே கவிகஸ்தினி /
சுனி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சின: //"

பொருள் :

அறிவும் பண்பும் உடைய நல்லவனாயினும், பசுவாயினும், யானையாயினும், நாயாயினும், நாயை உண்பவனாயினும், மகான்கள் சமமாகவே பாவிப்பார்கள்.

மனித வாழ்க்கையில் மிக உயர்ந்த நிலையில் இருப்பவர்களில் இருந்து மிகக் கீழோர் என்று கருதுபவர்களாக இருப்பவர் வரையிலும் அனைவரையும் நல்லவர்களான உயர்ந்தோர் சமமாகவே கருதுவார்கள், என்று சொல்லும் கீதையின் இந்த ஸ்லோகத்திற்கு எதிராக இந்து மதத்தில்

தீண்டாமையையும், ஜாதிக் கொடுமையையும் உருவாக்கிய கொடியவர்கள் மன்னிக்கப்பட முடியாதவர்கள்.

"ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம் க்ஞாத்வாமாம் சாந்திம் ருச்சதி //"
கீதை : 5 - 29.

**பொருள் :**

எல்லா உயிர்களின் நண்பன் என்று என்னை அறிகிறவன் அமைதியை அடைகிறான்.

இறைவன் எல்லா உயிர்களிலும் இருக்கிறான் என்றும், எல்லா உயிர்களுக்கும் நண்பனாக இருக்கிறான் என்றும் கீதை தெளிவாகச் சொல்லும் போது, கடவுளுக்கு வேண்டியவன் ஒரு ஜாதி பிராமணன் மட்டும் என்று பிரித்துப் பார்த்தது இந்து மத விரோதிகளின் சதி வேலை மட்டுமே.

"லபந்தே ப்ரஹ்ம நிர்வாணம் ருஷய க்ஷீண கல்மஷா : /
ச்சின்னத்வைதா யதாத்மான: ஸர்வ பூத ஹிதே ரதா: //"
கீதை : 5 - 25

**பொருள் :**

இருமைகளில் இருந்து விடுபட்ட, புலன்களை வென்ற, எல்லா உயிர்களின் நன்மையில் மகிழ்கின்ற மேலோர்கள் பாவங்கள் நீங்கப் பெற்று பேரானந்தத்தை அடைகிறார்கள்.

எல்லா உயிர்களும் நன்மையடையும் போது, மகிழ்ச்சியடையும் போது யார் மகிழ்கின்றானோ அவனே மேலோன் என்று கீதை சொல்வதால், தர்மத்தைப் பாதுகாப்பதன் மூலம் உயிர்களுக்கெல்லாம் நன்மை கிடைக்க வழி செய்ய வேண்டியது நல்லவர்கள் அனைவரது கடமையாகும்.

"ஸந்நியம் யேந்த்ரிய க்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய: /
தே ப்ரானுவந்தி மாமேவ ஸர்வ பூத ஹிதே ரதா : // "
கீதை : 12 - 4

பொருள் :

இந்திரியங்களை நன்கு அடக்கி, எப்போதும் சம நோக்குடன், எல்லா உயிர்களின் நன்மையை விரும்பி இறைவனை வழிபடுபவர்கள் அவனையே அடைகின்றனர்.

"கர்மண : ஸுக்ருதஸ் யாஹு : ஸாத்விகம் நிர்மலம் பலம் / "
கீதை : 14 - 16

பொருள் :

நல்ல செயல்களைச் செய்வதால் கடவுள் பக்தியும் தூய்மையும் உண்டாகின்றன..

"நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத: / "
கீதை : 2 - 16.

பொருள்

இல்லாத பொருளை உண்டு பண்ண முடியாது. இருக்கின்ற பொருளை அழிக்க முடியாது. (Matter can neither be created nor be destroyed - A formula in Physics)

"ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந் நாயம் பூத்வா பவிதா
வா ந பூய : /
அஜோ நித்ய : சாச்வதோயம் புராணோ ந ஹன்யதே
ஹன்யமானே சரீரே // "
கீதை : 2 - 20.

பொருள் :

உன்னுடைய உடம்பு தோன்றவும், வளரவும், அழியவும் செய்யும், ஆனால் உன் உடல் அழியும் போது நீ அழியமாட்டாய். நீ பிறவாதவன், இறவாதவன், தேயாதவன், வளராதவன், மாறாதவன் என்றும் இருப்பவன்.

"வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விகாய நவானி க்ருஹ்ணாதி
நரோபராணி /
ததா சரீராணி விகாய ஜீர்ணான் அன்யானி ஸம்யாதி நவானி
தேஹி // "
கீதை : 2 - 22

பொருள் :

கெட்டுப்போன ஆடையை எறிந்துவிட்டு வேறு புதிய ஆடையை அணிந்து கொள்வதைப் போல நீயும் இந்த உடம்பின் ஆயுள் முடிந்ததும் அதைத் துறந்து விட்டு வேறு உடலை எடுத்துக்கொள்கிறாய்.

"ஸித்த்ய ஸித்த்யோ : ஸமோ பூத்வா ஸமத்வம் யோக
உச்யதே // "
கீதை : 2 - 48

பொருள் :

வெற்றி தோல்விகளைச் சமமாகக் கருதி செயல்பட்டு சமநிலையில் நிற்பதே. யோகம் என்று சொல்லப்படுகிறது.

"ப்ரஸாதே ஸர்வதுக்கானாம் தானி ரஸ்யோப ஜாயதே /
ப்ரஸன்ன சேதஸோ ஹ்யாசு புத்தி: பர்யவதிஷ்டதே // "
கீதை : 2 - 65.

பொருள் :

குழப்பமில்லாத தெளிந்த மனநிலையை உடையவனிடமிருந்து எல்லா துக்கங்களும் விலகுகின்றன.

"யக்ஞாத்த்தாத் கர்மணோன்யத்ர லோகோயம் கர்ம பந்தன/"
கீதை: 3-9

பொருள்:

தியாக உணர்வோடு சேவையில் ஈடுபடும் செயலைத் தவிர, வேறு எல்லாச் செயல்களும் உன்னை இன்ப துன்பங்களில் மாட்டி விடுகின்றன

"ஸர்வம் கர்மாகிலம் பார்த்த க்ஞானே பரிஸமாப்யதே//"
கீதை: 4-33

பொருள்:

உன்னுடைய செயல்கள் ஒவ்வொன்றும் உன்னை மென்மேலும் அறிவுடையவனாக ஆக்கட்டும்.

"யதை தாம்ஸி ஸமித்தோக்னிர் பஸ்மஸாத் குருதேர்ஜுன/
க்ஞானாக்னி ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா//"

கீதை: 4-37

பொருள்:

நெருப்பானது விறகுகளை எரித்துச் சாம்பலாக்குவது போல அறிவுத் தீயானது எல்லா கர்மங்களையும் எரித்துச் சாம்பலாக்குகிறது.

"ஸர்வ பூதாத்ம பூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே//"

கீதை: 5-7

பொருள்:

தனது ஆத்மாவும் எல்லா உயிர்களிடத்தும் உள்ள ஆத்மாவும் ஒன்று தான் என்று உணர்பவனைக் கர்ம பலன் கட்டுப்படுத்துவதில்லை.

"உத்தரேதாத்மனாத்மானம் நாத்மான மவசாதயேத்/"

கீதை: 6-5

பொருள்:

உனக்கு நீயே நண்பன்: நீயே பகைவன்

"யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வஞ்ச மயி பச்யதி/
தஸ்யாகம் ந ப்ரணச்யாமி ஸச மே ந ப்ரணச்யதி//"

கீதை: 6-30

பொருள்:

யார் இறைவனை எல்லாவற்றிலும், எல்லாவற்றையும் இறைவனிடத்திலும், காண்கிறானோ அவனது காட்சியிலிருந்து நானும் மறைவதில்லை, அவனும் எனக்கு மறைவதில்லை.

"நகி கல்யாணக்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி//"

கீதை: 6-40

பொருள்:

நல்லது செய்யும் யாரும் நிச்சயம் கெட்டுப் போவதில்லை.

"யோ யோ யாம் யாம் தனும் பக்த ச்ரத்தயார்ச்சிது மிச்சதி/
தஸ்ய தஸ்யாசலாம் சிரத்தாம் தாமேவ விததாம் யகம்//"

கீதை: 7-21

பொருள்:

சரியான அறிவோடு கூடிய உறுதியுடன் முயற்சி செய்தால் நீ விரும்பியதை உனக்கு நானே கொடுக்கிறேன்.

"கவிம் புராண மனுசாஸிதாரம்
அணோரணீயாம்ஸ மனுஸ்மரேத் ய/
ஸர்வஸ்ய தாதார மசிந்த்ய ரூபம்
ஆதித்ய வர்ணம் தாம1 பரஸ்தாத்//"

கீதை: 8-9

பொருள்:

இறைவன் எல்லாம் அறிந்தவன். ஆதி, பரம்பொருள் அனைத்தையும் ஆள்பவன், அணுவை விட நுண்ணியவன். அனைத்தையும் தாங்குபவன். சிந்தனைக்கு எட்டாத வடிவம் உடையவன். சூரியனைப் போல ஒளிர்பவன். அஞ்ஞான இருளுக்கு அப்பாற்பட்டவன்.

"அனன்யா சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே/
தேஷாம் நித்யாபி யுக்தானாம் யோக க்ஷேமம் வகாம்யகம்//"

கீதை: 9-22

பொருள்:

வேறு எதையும் நினைக்காமல் என்னையே நினைத்து, யார் எங்கும் என்னை அடைய முயற்சிக்கிறார்களோ, மாறாத பக்தி கொண்ட அந்த பக்தர்களின் உலகத் தேவைகளான

சேர்த்தல், பாதுகாத்தல் போன்ற வேலைகளை நானே செய்கிறேன்.

"யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ருன் யாந்தி பித்ருவ்ரதா/
பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜினோபிமாம்//"

கீதை: 9-25

பொருள்:

உயர்வை அடைய முயற்சிப்பவன் உயர்வை அடைகிறான். முன்னோர்களைப் போன்று வாழ விரும்புகிறவன் அதையே அடைகிறான். உலகப் பொருட்களை அடைய விரும்புகிறவர்கள் அவற்றை அடைகின்றனர். என்னை விரும்புகிறவர்கள் என்னையே அடைகின்றனர்.

"அகமாத்மா குடாகேச ஸர்வபூதா சய ஸத்தித//"

கீதை: 10-20

பொருள்:

எல்லா உயிர்களின் இதயத்திலும் இருக்கின்றவன் நானே.

"திவ்யம் ததாமி தே சக்ஷு பச்ய மே யோக மைச்வரம்//"

கீதை: 11-8

பொருள்:

இறைவனைத் தெரிந்து கொள்ள உனக்கு அறிவுக் கண்கள் வேண்டும். (என்னுடைய ஈஸ்வர மகிமையைப் பார்க்க உனக்கு அறிவுக்கண்களை கொடுக்கிறேன்)

"நிர் வைர ஸர்வ பூதேஷு யஸ மாமேதி பாண்டவ//"

கீதை: 11-55

பொருள்:

எந்த உயிரையும் வெறுக்காதவன் எவனோ அவன் என்னை (இறைவனை) அடைகின்றான்.

இறுதியாக நான் சொல்ல விரும்புவது "இந்துக்களின் புனித நூல் பகவத்கீதை; பகவத்கீதையின் உன்னதமான உண்மைத் தத்துவங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்லாமல், சுயநல ஜாதி பிராமணர்கள் அநேகம் நூற்றாண்டுகள் தடுத்தார்கள்; மறைத்தார்கள். பகவத்கீதைக்கு பொருள் சொல்ல வந்தவர்கள், தவறான வியாக்கியானங்கள் பிராமண ஆதிக்கத்தை என்றென்றும் நிலைநிறுத்தும்படியான விளக்கங்கள் போன்றவற்றை கூறி, பகவத்கீதையை தவறாகப் புரிந்துகொள்ள வழிகோலி விட்டார்கள். விளைவு இன்று நாத்திகர்களாலும், இந்துமத எதிரிகளாலும் பகவத்கீதை தாக்குதலுக்கு உள்ளாகியிருக்கிறது.

எத்தனை எதிர்ப்புக்கள், தாக்குதல்கள், தவறான விளக்கங்கள், வியாக்கியானங்கள், விமர்சனங்கள் வந்தாலும், பகவத்கீதை அவைகளுக்கு ஈடுகொடுத்து தாங்கிக் கொண்டு, காலா காலத்திற்கும், மனித குலத்திற்கு உண்மை வழிகாட்டியாக ஆன்மீக ஒளி வீசிக்கொண்டிருக்கும் என்பதில் யாருக்கும் சந்தேகம் வேண்டாம்."

வணக்கம்.



## கீதை சன்னியாசிகளின் நூலா?

தம்பி, எங்கே இவ்வளவு அவசரமாக போகிறாய்?

பகவத்கீதை வகுப்புக்குப் போகிறேன்.

அடடே! இந்த சின்ன வயசிலேயே உனக்கெதற்கப்பா இந்த சன்னியாச ஆசை?

பெரியவரே! இது சன்னியாச ஆசை இல்லை. இந்த உலக வாழ்க்கையை நன்கு அனுபவிக்க விரும்பும் ஆசை.

இதென்னப்பா புதுசா சொல்கிறாய். கீதையைப் படிச்சா சன்னியாசியாகத்தான் ஆகணும்னுல்ல சொல்வாங்க.

அது கீதையை படிக்காத அல்லது விபரம் புரியாதவர்கள் சொல்வது. வாழ்க்கையின் ஒவ்வொரு கண நேரத்தையும் அனுபவித்து புத்திசாலித்தனமாக வாழ்வதற்கு கீதை வழிகாட்டுகிறது. "நீ சிரத்தையோடு அறிவு பூர்வமாக செய்யும் எந்த முயற்சியையும் உனக்கு நானே வெற்றியடையச் செய்கிறேன்" (கீதை 7-21) என்று பகவான் கிருஷ்ணன் கீதையில் சொல்கிறார்.

நீ சொல்லும் ஸ்லோகத்தில் தேவர்களை வழிபடுவது பற்றியல்லவா சொல்லப்படுகிறது?

உண்மைதான். தேவர்களை வழிபடுவது என்பது, நாம் அடைய விரும்பும் குறிக்கோளை நோக்கி சிரத்தையோடு அறிவுபூர்வமாக முயற்சி செய்வது என்று அர்த்தம்.

இப்போது புரிகிறது.

## இதே ஆசிரியர் D. இராமன் என்ற பெயரில் எழுதிய பிற நூல்கள்

### வரலாறு

1. ஹிந்து சாம்ராஜ்ய சிற்பி சத்ரபதி சிவாஜி
2. என்று காண்போம் எங்கள் சிந்துவை
3. சியாச்சின் போர்முனை
4. காஷ்மீர் யாருக்குச் சொந்தம்
5. இழப்பதற்கோ எங்கள் காஷ்மீரம்
6. காஷ்மீரில் சிந்திய ரத்தம் - பாகம் I
7. காஷ்மீரில் சிந்திய ரத்தம் - பாகம் II
8. மாவீரன் மதன்லால் திங்கரா
9. சுதந்திரப் போரில் மறைக்கப்பட்ட வரலாறு
10. பர்க்கிப் போர்
11. அய்யா வைகுண்டரும் ஆங்கிலேயன் சூழ்ச்சியும்
12. அசுரத்தாவல்
13. மறக்குமோ அந்த மாபாதகம்
14. எழுந்திடு எங்களை ஈன்றவளே
15. வில்லினை எடு வீரா!

### ஆராய்ச்சி

1. பிசாசை வழிபடுகிறவர்கள் இந்துக்களா? கிறிஸ்தவர்களா?
2. ஆங்கிலேயன் விட்டுச் சென்ற ஐந்தாம் படைகள்
3. கீதை சொல்லும் ஜாதி
4. இந்துக்கள் தெரிந்திருக்க வேண்டிய திருக்குரான் வசனங்கள்.
5. Kashmir Belongs to India or Pakistan - (English)

**Action (Karma) is not the means of an end.
But action itself is the end
- Gita (Karma Yoga)**

பொருள்:

**செயல் (கர்மா) பலனைப் பெறுவதற்கான வழியல்ல, செயலே தான் பலனும்.
– கீதை (கர்ம யோகம்)**



ஆசிரியர்
**கேப்டன் S.P.குட்டி, B.E.,**

## ஆசிரியரும் கீதையும்

(தொடர்ச்சி)

நவமலையில் சக பொறியாளர்களுடன் சேர்ந்து கீதை வகுப்பை ஆரம்பித்து ஐந்து ஆண்டுகள் தொடர்ந்து அவரே வகுப்பு நடத்தி 700 ஸ்லோகங்களையும் ஆராய்ச்சிக் கண்ணோடு படித்தார்.

அதன் பிறகும் தொடர்ந்து பல ஊர்களில் வார வகுப்புகளை நடத்தி கீதையை விஞ்ஞான கண்ணோட்டத்தோடு மக்களுக்கு சொல்லி வருகிறார்.

தெய்வ பக்தியும் இந்து மதத்தின் மீதும், குறிப்பாக உபநிடதங்கள் மற்றும் கீதையின் மீதும் அபரிமிதமான பற்றும் பாசமும் கொண்ட இவர் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே D.இராமன் என்ற புனை பெயரில் கீதை சொல்லும் ஜாதி என்ற நூலை எழுதி வெளியிட்டு மக்களின் பாராட்டுக்களைப் பெற்றுள்ளார்.

பொறியியல் பட்டப்படிப்பு 1964ல் முடித்து இந்திய இராணுவத்தில் கமிஷன்ட் ஆபிசராக தேர்வு செய்யப்பட்டு 1965 இந்திய பாகிஸ்தான் போரில் பஞ்சாப் எல்லையில் நேரடியாக பங்கு பெறும் வாய்ப்பைப் பெற்றவர். தமிழ்நாடு மின்சார வாரியத்தில் பணிபுரிந்து ஆர்.எஸ்.எஸ் இந்து முன்னணி, பி.ஜே.பி., போன்ற அமைப்புகளோடு நெருங்கிய தொடர்பு கொண்டு அனைத்து பயிற்சிகளையும் பெற்றவர்.

இந்து மதத்தில் ஞான மார்க்கம் மேலோங்கி மக்கள் சரியான அறிவு பெற்றால் மட்டுமே இன்றுள்ள நிலையில் மற்ற மதத்தினரின் மதமாற்ற சூழ்ச்சியில் இருந்து இந்துக்கள் தப்ப முடியும் என்ற உறுதியான கருத்துடையவர்.